ஆகில் சர்வஞ்ஞ சர்வ வ்யாபித்வங்கள் சர்வான்மாக்க ளுக்கு முண்டாகவேணும், அது காணுகபடியாலே பிரத்தியக்ஷ விரோதமெனனில்? அஃதல்ல உபாதி + வசாத ஆணவமிருளா சர்வஞ்ஞத்துவம் அப்பிரகாசமெனபதாக —

ஈசித்திடா ஞானசக்தியனாதியே மறைத்திருக்கும் ப சுத்துவ முடையனாகிய பசுவென்கிறது மானமா- நித்தியமா கிய ஆன்மஞானக் கிரியைகளை அநாதியே தடுத்திருக்கு மாணவ மல சத்தியை யுடைத்தாகையால் பசுவென்னும் பெயரையுடை த்தாயிருக்கும் இந்த பசுத்துவ மீஸ்வரானுக்கிரகத்தினாலே நீங்கி லல்லது சர்வஞ்ஞத்துவாதிகள் பிரகாசியாது

[illegible]

ஆனா பசுவென்று பெயரானதென்றது ஆன்மசத்தத் தாகத × வியுத்பத்தி ஞானரூபமாகையிலும், பசுசத்தத்துக்கு அர்த்தம் அஞ்ஞானமாகையிலு மெனவறிக.

இதற்குச் சிலர் ஆன்மாவுக்கு ÷ அசாதாரண ஸ்வரூபமில்லை, கூடினதின் தன்மையென்று சொல்லுவார்கள், அது அநேகாந்த வாதமதம், அருகமதம்.

* அவிகாரி - விகாரமில்லாதவன், † அகர்த்த-செய்யாதவன், ‡ அபோக்தா - புசிக்காதவன், § நிராகரணபூர்வம் - நிராகரித்ததை முன்னிட்டு. + வசாத் - வசத்தாலே, × வியுத்பத்தி - அர்த்தம், ÷ அசாதாரண - சொந்தமான.

"உற்றபால் - நீணாடா விடுத லரிது" என்றாற்போல அருமை நுண்ணியன்மை குறித்து நின்றது.

அருவமென்றது, "இல்லா வுருவாகி நின்றானை" என்றாற்போல, அதிசூக்குமமாதலையுணர்த்தி அருப்பெயராய் நின்றது.

இதற்குப் பிறரெல்லாம் இவைபறவுரைத்தார்.

இதனானே உயிருக்கு அநாதிநிலையாகிய தன்னுண்மை கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

முன்சொன்ன முறைமைகளெல்லாம் ஆன்மாவி னுண்மை யல்லவெனனில்? ஆன்மாவினுண்மை யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி அருளிச்செய்கிறார்.

அசித்தருவியாபகம்போல வியாபக மருவமன்றாய் - அசேதனமான வாகாசம்போல வரூபமல்லவாய் எங்கும் வியாத்தமுமல்லவாய், ஆனால் ஏகதேசியா யிருக்குமோ வெனனில்?— உசித்திட வருமவியாபி யெனுமவழுக குடைத்தாய - ஒரு தத்துவத்தைப் பொருந்தினால் அதிலே வியாபித்தறியத்தக்க முறைமையினை யுடைத்தாகி,—மற்றும் - இதுவன்றி வேறும் வசித்தவிடமெல்லாம வியாபித்திருக்கத் தக்கவனாய்,— நசித்திடா ஞானச்செய்தி யநாதியே மறைத்துநிற்கும பசுத்துவ முடையனாகிப் பசுவென நிற்குமான்மா - கெடாத இச்சாஞானக் கிரியைகளை அநாதியே யாணவமல மறைத்து நிற்கத்தக்க அந்தப் பசுத்துவத்தையுமுடைய பசுவென்கிற பேரைப்பெற்று நிற்பன் ஆன்மா.

இதனாற் சொல்லியது, ஆன்மா வாகாசம்போல வரூபமுமல்லவாய் வியாத்தமு மல்லவாய் இடாசொன்றிலே [illegible]

சேதாம் அதுகளுள்ள வியாத்தமெல்லாம் தனக்குண்டாய் ஒரு காலத்திலும் மழிவில்லாத தனது இச்சாஞானக் கிரியைகளை மறைத்து நிற்கிற ஆணவமலத் தானேயாய், பசுவென்கிற பெயரைப் பெற்று நிற்பனென்று முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—0—

அசித்தரு வியாபகம்போல் வியாபகம் - ஒருவாற்றானும சித்தாகிய அரிய வியாபகப் பொருள்போல ஔபசிலேஷிக வியாபகமாதலும்,—அருவமின்றுருவ - அருவமாகி யதற்குச் சுத்தத் தன்மையின்றி,—வசித்திட வரும் வியாபி யெனும் வழக்குடையதாகி - அதுவதுவாய் வசிப்புணர்வால் வியாபகமாதலும்,—அநாதியே பசுத்துவ மறைத்து நிற்கும் - அநாதியே பசுத்துவமெனப்படும் ஆணவமலத்தினை மறைப்புண்டு கிடக்கும்,—சத்திடாஞானச்செய்தி யுடையதாகி - அழியா விச்சாஞானக் கிரியைகளை யுடைத்தாய்,—பசுவென நிற்குமான்மா - பசுவெனப்படுத லு சித்தாதலுமுடையது உயிர்

இதனானே உயிர்க் கோதி நிலையாகிய தன்னுண்மை கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படி யான்மா விபுவாயிருக்கினு மாயை மலத்தினாலே மறைப்புண்டு சித்து ஞானக் கிரியைகளைச் செவிக்கு முறைமை புணர்த்துகின்றார்.

மாயையின் வயிற்றுண்மன்னி வருஞ்செயன்
ஞானமிச்சை, யெழுமுக் கலாதிமூன்றா லேகதேசத்தி
னெய்தி, னாயுமுக் குணங்களாந்தக் கரணங்க ளாதி
யெல்லாம், காயபந் தங்களாக்கக் கலந்துட னிறகுமான்
மா (௨௧)

(இ-ள்) மாயையின் வயிற்றுண்மன்னி வருஞ்செயன் ஞானமிச்சையையு முக்கலாதிமூன்றா லேகதேசத்தி னெய்தி — இதனை, (மாயையின் வயிற்றுண்மன்னி வருங்கலாதி மூன்றாலேயுஞ் செயல் ஞானமிச்சையை யேகதேசத்தி னெய்தினனெனப் பதமாறுக) மாயையினிடத்திலே நிலைபெற்று வருமுன்சொல்லிய கலைவித்தை யிராக மிவைமூன்றினாலு முண்டாகாநின்ற விச்சா ஞானக் கிரியைகளை யான்மா வேகதேசத்திலே பெற்று விடயாதிக ளெல்லாவற்றையும் புத்தியாதி தத்துவங்களைக்கொண் டொருக்காலே யறியுந்தன்மை யில்லாதபடியாலே கிஞ்சிஞ்ஞ னெனப்பட்டான். இப்படி யான்மாவுக்குப் பரியாயப்பெயர் பலவுள; ஆண்டாண்டு வந்துழிக் காண்க.

இங்காயுமுக்குணங்களாந்தக் கரணங்களாதி யெல்லாங் காயபந்தங்களாகக் கலந்துட னிறகு மான்மா. — இவ்விடத் தான்மாவினது வியாபாரத்தை யாராயுஞ் சத்தியுடைத்து முக்குணங்க ளந்தக் கரணங்கள் முதற் பூதமீறானவைக ளெல்லா மிவையிறகைக் கலந்து தேகத்திலே பந்திக்கப்பட்டதுவது வாகவே தின முறசிவியா நிற்கும் எ-று.

ஈண்டுக் கலைமுதலிய மூன்றையுங் கூறவே பஞ்சகஞ்சுகமுங் கூறியதாயிற்று.

குணங்களளவிலாத படியாலே யாயுமக் குணமெனச் சிறப்பித்தார்.

பந்தங்களென்று பன்மைகூறியது, தூலசூக்குமங்களாகிய வைங்கோசங்க ளாறு சரீரங்களாகாநிற்கையாலென்றறிக.

இதற்குச் சித்த தந்திரத்தும் பாரக்கியையிலும் பௌட்கரத்துமறிக. (௨௧)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.

—)—

ஆன்மாவுக்கு அசர்வஞ்ஞதைக்கு உபாதி சொல்லி, மேல் அவ்வியாபித்துவத்துக்கும் கிஞ்சிஞ்ஞதைக்கும் உபாதியும் ஏதுவுங் கூறுகின்றது.

மாயையின் வயிற்றுணைமன்னி - பிரளயகாலத்திலே மாயா மண்டல மத்தியத்திலே கேவலாவஸ்தனா யிருந்து சிருஷ்டிகாலத்திலே,—

வருஞ்செயல் ஞானமிச்சை யேயுங் கலாதி மூன்றாலேக தேசத்தினேய்ந்து - ஆன்மா சிற்சத்தி ரூபமாகி யுண்டாகிற ஞானேச்சாக்கிரியைகளுக்குச் சகாய பூதமாகிய கலாவித்தியாராகங்களினாலே ஏகதேசத்தைப் பொருந்தி நிற்கும்.

ஏகதேசமென்றது ஆன்மாவையல்ல, ஆன்ம ஞானப்பிரகாசம்.

ஏகதேசமாகையால் தருமத் தேசத்தினாலே தருமியையும் ஏகதேசியமென்று உபசாரமாகச் சொன்னதே.

ஆன்மா விபுவாய் ஞானஸ்வரூபியாயிருக்க ஆன்ம ஞானப்பிரகாசந்தா னேகதேசமாவானே னென்னில்? ஞானப்பிரகாச மாணவத்தினாலே தடுக்கப்பட்டதென்று முன்னே சொன்னோம், அந்தத் தடையை மாயாகாரியமாகிய கலை சிறிது நீக்குகையினாலே யேகதேசப்பிரகாசமென்றது.

மாயைக தேசத்திலே ஆன்மாவென்றதும் கடத்துக் குள்ளும் புறம்பு மாகாசம வியாபியா யிருக்கவும கடாகாச மென்றதுபோல, விபு ஞான ரூபியாயிருக்கிற ஆன்மாவுக்கு ஞான மேகதேசத்திலே பிரகாசிப்ப தெவ்வா றெனவில்? விருக்ஷ மெல்லாம் வியாபித்திருக்கிற அக்கினி அந்த விருக்ஷத்திலே சல மயமாகி *சுஷ்கமாயிருக்கிற ஏகதேசத்திலே †மதநம பண்ணுகிறபொழுது பிரகாசிக்குமாபபோல, ஆணவமல சத்தி நீங்கின பிரதேசத்திலே ஞானம பிரகாசிக்கும

* சுஷ்கம-உலாந்தது, † மதநம-கடைதல

ததுக்தம் கிரணே — ஸ்வசக்த்யாவி யயா வ்யக்ஷா
அவஷ்டாத்ருந்த்வயம் ஸிவோவ்யக்தஜடாகி.

கீழ்ச்சொன்ன அசுத்தமாயா ‡யோனி §பரிணதமான விந்துக கலாதிகள், ஆன்மாவுக்கு பிரத்தியக்ஷ காரணம இந்த ¶லீலாவிபூதி மோகினியென்னும பெண்ணா யுடைய மாயை சத்தி நிடாகத்திலே நீங்கப்படுவது நீங்கின காலத்திலான மா சிவனைப்போலே யாவன.—

‡ யோனி-காரணம. § பரிணதம-பரிணமித்தது ¶ லீலாவிபூதி-லீலாமகிமை

ததுக்தம் தத்ரைவ — யயா பரிணதி யேஷா
ந: பரமாநாம பயோகாரணம் | விஷமுக்தி ரேஷா
ஷிநிர்மோ ததுக்தஸ்ரீவா யபியதி.

இங்காயு முகத்துவங்களக்கக்கரணங்களாதியெல்லாங் கா யபந்தங்களாகி -இதுகென்றது சகலர்க்கு × அவஸ்தாக மாகிய பிரகிருதி மண்டலத்தை இரா மூன்று குணங்களோடே கூடித்த த்துருவமாக ○ அகவிசார நிச்சயங்களைப் பண்ணும் புத்திய

இயந்தக்கரணங்கள் சூக்குமகாயமாக ஆன்மாவுக்கு இரண்டாம்பந்தமும், பூதாதியான பௌதிக தேகேந்திரியங்களா மூன்றும் பந்தமுமாகையால் பந்தங்களென்றது பஹுவசனம். இவை பந்தித்தது, ஆன்மாவை ஆவரித்ததோ — பரிச்சேதித்ததோ வென்னில்? விபுவாகையினு லாவரணங் கூடாது, பரிச்சேதமே! பரிச்சேத மெவ்வாறென்னில்?—

× அவஸ்தானம் - இருப்பிடம், ○ ஊகம் - உடபொருள் உணாதல் — பரிச்சேதம் - அளவு, ஏகதேசம

கலந்துட விற்குமானமா - பொருந்தின தத்துவங்களுடைய வியாபதி யெவ்வளவு, அவ்வளவே தன்னுடைய ஞானேச்சாக் கிரியைகள் வியாப்தியாக ஆன்மா நிற்பன, இதுவே பரிச்சேதம் மடாகாச மதயே கடாகாசம்போலவென் றிதன பொருள

இவ்வாறு ஏகதேசத்துக்குரிய கிருசிஞ்ஞைதைக்கும் ஏதுவான கலாதி தத்துவம் பொருந்தியுள்ளவில் ஆன்மா விபுவாயும மாயாகாரியங்களினுலே பரிச்சேதிக்கப்படுகிறுன, சாவஞ்ஞனும் மொருத்தராலே யறிவிக்கப்படுகிறுன, ஞானக்கிரியா சுதந்தர சத்தியை யுடைத்தாயிருந்தும், அறிகிறதிலும் செய்கிறதிலும கலாதி தத்துவங்களை சகாயமாக அபேக்ஷிக்கிறுன, தனக்கு ஜநநாதிகளன்றியிலே இருந்து மொருத்தராலே ஜநாதிக ளுண்டாக்கப்படுகிறுன், சுதந்தரனாகியும வியாபாரத்திலே + பரதந்திரனாகிறுன, நிர்விகார ஞானஸ்வரூபியாயும் ஞானேந்திரியங்களுக்கு விஷய தரிசனத்தைப் பண்ணுவிக்கிறுன், தானுமக்க இந்திரியங்களினுலே விஷயங்களை யறிவிக்கப்படுகிறுன, சிந்திக்கிறதற்கு அவிஷயமாயிருக்கிற மஹிமையையும் புதுமை பொருந்தின குணராசியையும் லோக ¶ விலட்சணமு

மாய் ஆணவமல பரிபாகத்தினாலே சிவனாலே × நிர்வாண சிவ பத § சாமராஜயாபிஷேகத்தைப் பண்ணப்படுமவனுமாம்.

+ பரதந்த்ரன் - ஒருவனுக்கு வசப்பட்டவன் ¶ விலக்ஷணம்-வேறுலக்ஷணம், × நிர்வாணம்-மோக்ஷம். § சாம்ராஜ்யாபிஷேகம் - ராஜ்யபட்டாபிஷேகம்

ததுக்தம் காமிகே — வ்யாப்யே வ்யாபகதாபி
ஶக்தே ஶக்திகாவிச | ஸ்வஸ்வாமிஸ்வாமினஶ்ச ஸ்வாம்ய க
ஸ்வாஸ்யதஸ்யச || ஸ்வதந்த்ர: பரதந்த்ராவிஸா
யேந கர்த்ருணாம் ப்ரபேத: | விஜ்ஞாத்ரு ஜ்ஞேயதாத்ய
துல்யம் சேதயதே ததா | அவித்யாஶக்திஹாஸ்ய
ஞானாதிலாபிகா: | நிர்வாண பத ஸாம்ராஜ்ய
மேவமேவாபிஷிச்யதே || இதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

விஞ்ஞானப் பிரளய கேவலங்களில் அசர்வஞ்ஞத்துவம் அசர்வகர்த்திருத்துவம் இரண்டிற்கு முபாதியுரைத்து சகலத்துக் கிஞ்சிஞ்ஞத்துவம் கிஞ்சித்கர்த்திருத்துவ மிரண்டிற்கு முபாதி யுரைக்கின்றார்

மாயையின் வயிற்றுணமன்னி - சர்வவியாபியா யிருந்தாலும் மலமறைத்த அறிவு தொழிலுடையனுய்ச் சூக்கும தேகத்தினாற் சிற்றறிவு தொழில் விளங்கலாற் சூக்கும தேகோபாதியினாலே மாயோதரத்தில் வசித்து— வருஞ்செயல் ஞானமிச்சை யெயும் கலாதி மூன்றாலேகதேசத்திலேயிக்க- தன்னோடு பொருந்திய கலை வித்தை யிராகங்களினால் முறையை

யிற் றொழிலறிவிருப்பங்களை அந்தகாரத்திற் றீபத்தினாற் கணொளியைப்போல ஒருபிரதேசத்திற் பொருந்தி

இங்கு ஆயுமுக்குணங்கள் என்பது முதலியன வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

அங்ஙனம் பசுத்துவமாத்திரையாற் கேவலப்பட்டு நின்றவான்மா, அதன்பின் அசுத்தமாயையில் அனந்ததேவராற் கலக்குண்ட பாகமாகிய காரணசரீரத்தைப்பொருந்தி, அவ்வறிவிச்சைசெயல்கள் பொதுவகையாற் சமட்டிரூபமாய் விளங்கப்பெறும். அதன்பின் அம்மாயாதத்துவத்தினின்றுந் தோன்றுங் கலாதிகளாகிய கஞ்சுகசரீரத்தைப்பொருந்தி, அவை வியட்டிரூபமாய்ப் பிரித்துத்தோன்றிச் சிறப்புவகையான் விளங்கப்பெறும். அதன்பின் அந்தக்கரணமுதலியவற்றைத் தம்முளடக்கி நிற்கு முக்குணங்களாகிய குணசரீரத்தைப் பொருந்தி அவ்வறிவிச்சைசெயல்கள் முன்னாகக் கூறப்படும் இருசரீரங்களிடமாக வரும்விடயங்களின் வியாபரிக்கப்பெறுமென்பதாம்.

இங்ஙனம் பரசரீரம் மூவகைப்படுமெனக் கொள்க.

மாயையிற் கலக்குண்டபாகத்தை வயிறாக உருவகஞ்செய்தார்.

மேலே மாயாடனவயிற்றென்றதுமது.

அதுவே அசுத்தமாயாதத்துவமென்று தத்துவங்களிடை வைத்தெண்ணப்படுவதூஉமென்க.

மன்னிவருமென்னும் வினையெச்சமுடிபு காரணகாரியப் பொருட்டாய் நின்றது.

'ஏகதேசத்தினேய்ந்து' என முன்வருதலின் ஈண்டுவருமென்பதற்கு அது பொருளாதலறிக.

"அன்பிலா ரெல்லாந் தமக்குரியர்" என்றாற்போல, எல்லாவற்றூடுமென்னுஞ் சாரியையும் உருபும் விகாரத்தாற்றொக்கன.

காயம் ஆகுபெயர்.

ஆகிக்கலந்து நிற்குமென ஒற்றுமைபற்றிக் குணவினை குணிமேலேற்றப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

மேனிற்க ஆன்மா மலத்துடனே கூடி மலமாய்நின்ற தன்மைபோல, மாயையிலுண்டான தத்துவங்களுடனே கூடி யதுவதுவாய் நிற்குமுறைமை யருளிச்செய்கிறார்.

மாயையின் வயிற்றுணண்மனி - அதோமாயையினுதரத்திலே நிலைபெற்று,—வருஞ்செயல் ஞானமிச்சையே யும்மூன்று மேகதேசத்திலேய்ந்து- உண்டாக்கப்பட்ட இச்சாஞானகிரியைகளாய பொருந்தி நிற்கிற அந்தக்கலாதிகளென்று சொல்லப்பட்ட மூன்றினையும் புருடனாகிய வொன்றாயப் பொருந்தி,—இவ்காயமுச்குணங்க ளந்தக்கரணங்க ளாதியெல்லாக் காயங்களாகி- இந்தப் புருடனுக்குப் பின்பாக இவ்விடத்தில் ஆராய்ந்தறிந்தக முக்குணங்களும் மனம்புத்தியாங்காரஞ் சித்தம் என்று சொல்லப்பட்டவையெல்லாம் வெகுவிதமான தேகங்களுமாய்,—கலந்து நிற்குமான்மா - ஆன்மா வினையிற்றுடனே பொருந்தியதுவதுவாய் நிற்பன்.

இதனாற் சொல்லியது, ஆன்மா மலத்துடனே கூடி மலமாயதன்மைபோல, மாயாகாரியமாகிய தனுகரண புவனபோகங்

களுடனே கூடி அதுவதுவாய் நிற்குமென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

ஊனமா - அஞ்ஞானம் பசுத்துவ மாத்திரையாற் கேவலப்பட்டு நின்ற ஆன்மா,— மாயையின வயிற்றுண்மலனி - அதனயின் அசுத்தமாயையில் அநந்ததேவராற் கலக்குண்டபாகமாகிய காரணசரீரத்தைப் பொருந்தி,— ஞானமிச்சை செயலவரும - அவ் வறிவிச்சை செயல்கள் பொதுவகையாற் சமட்டிரூபமாய் விளங்கப்பெற்று — அக்கலாதிமூன்று மேலகதேசத்தினேய்ந்திடுஞ்செயும் - அதனடின வமமாயாதத்துவத்தி விளைந்த தோன்றுங்கலாதிகளாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி யவை வியட்டிரூபமாய்ப் பிரிந்து தோன்றிச் சிறப்புவகையான் விளங்கப்பெறும் —அந்தக்கரணங்களாதி யெல்லாம் - அதன்பின் னந்தக்கரண முதலியவற்றை,— ஆயுமுக்குணங்கள் காயபந்தங்களாகிக் கலந்துடனிற்கும் - தம்முட்கலந்து நிற்கு முக்குணங்களாகிய குண சரீரத்தைப் பொருந்தி யவ்வறிவிச்சை செயல்கள் முன்னுக்க கூறப்படு மிருசரீரங்க ளிடமாக வரும விடயங்களின் வியாபரிக்கப்பெறும்.

இங்ஙனம் பரசீரம் மூவகைப்படுமெனக் கொள்க.

---

## மறைஞானதேசிகர் உரை.

இங்ஙனங் கூறிய விருவிதமான சரீரத்தைப்பொருந்தி யான்மா போகங்கொள்ளு முறைமையைத் தொகுத்துணர்த்துகின்றார்.

சூக்குமதேகியாகித் தூலதே கத்தின்மன்னிச்,
சாக்கிர முதலாயுள்ள வவத்தையு டடங்கியெங்கும்,
போககொடு வரவுமெல்லாம் புரிந்துபுண ணியங்கள்
பாவ, மாகியும் பலன்களெல்லா மருந்தியு நிற்குமா
ன்மா. (௨௨)

| | |
|---|---|
| (இ-ள்) சூக்கும தேகி யாகித் தூலதே கத்தின் மன்னி | ஆன்மாச் சூக்கும சரீரத்துடன் பொருந்தியதன் காரியமயமாகிய தூலதேகத்தைப் பொருந்தி நின்று, |
| சாக்கிர முதலாயுள்ள வவத்தையுள் அடங்கி | சாக்கிரமுதலான பஞ்சாவத்தையிலை—வே யடைந்து, |
| எங்கும் போககொடு வரவுமெல்லாம் புரிந்து | எண்பத்து நான்கு நூறாயிர யோனி பேதங்களி லதற்கதற்கேற்ற சரீரங்களை யெடுத்து, |
| புண்ணியங்கள் பாவமாகியும் | அந்தந்த ஜநநங்களோடு மிருவினைகளை யார்ஜ்ஜித்து, |
| பலன்கள் எல்லா மருந்தியு நிற்குமான்மா | இவையிற்றின் பிரயோசனங்களை யந்தந்த சரீரத்திலே யக்கப் புவனங்களோடு கன்மத்துக் கீடாகப் பொருந்திப் போகங்களைப் புசியாநிற்கு மான்மா. எ-று |

ஆன்மா வென்பது கடைநிலைத் தீபகம்.

இதற்குச் சித்ததந்திரமென வறிக (௨௨)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு

—o—

மேல் சூக்குமதேகத்தோடே ஜநந மரணங்களைப் பொருந்தி வரும்படி புணர்த்துதல்.

ஆன்மா சூக்கும தேகியாகித் தூலதேகத்தை மன்னிச் சாக்கிரமுதலாயுள்ள வவத்தையுட டங்கி - ஆன்மாவானவன் சூக்கும தேகியாகி யதனாலே ஸ்தூலதேகத்தைப் பொருந்தி சாக்கிரமுதலான வவத்தையு மடைந்து,—எங்கும் போக்கொடுவர வுமெல்லாம் புரிந்து புண்ணியங்களபாவ மாகியும் பலங்களெல்லா மருந்தியுநிற்கும் - புண்ணிய பாவங்களைப் பண்ணித் தன் பலமாகிய சுகதுக்கங்களைப் புசிப்பதாக வெவ்விடத்தும் சனன மரணங்களையும் பொருந்தி, இவ்வாறு கன்ம வசனாகி நிற்ப னென் றறிகவென் றிதன்பொருள்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இப்படித் தூலசூக்கும தேகங்களோடு கூடிய போகம்பு சிக்குமுறைமை புகலுகின்றார்

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அம்மூன்றையும் முறையா னெய்தியபின், சூக்குமதேகத்தைப் பொருந்திப் போக்குவரவு செய்து சூக்குமவினைப்பயன் களை ஈட்டியு நுகர்ந்தும், தூலசரீரத்தைப் பொருந்திப் போக்கு வரவு செய்து தூலவினைப்பயன்களை ஈட்டியு நுகர்ந்தும், இவ் வாறு அதீதமுதலஞ்சவத்தைப்பட்டு நிற்குமென்பதாம்.

சாக்கிரமுதலென்றது ஒடுங்குமுறைபற்றிக் கூறியதென வறிக.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

ஆன்மாக் கன்மத்துக்கீடாக மாயையினுண்டான தத்துவங்களுடனேகூடி யத்தவத்துவாய் நிற்குமென்றதெப்படியென்ற மாணாக்கனைநோக்கி மேலு மருளிச்செய்கின்றார்.

சூக்கும தேகியாகித் தூலரூபத்தின் மன்னி - சூக்குமசரீரியாய்த் தூலசரீரத்திலே நிலைபெற்று விஷய வியாபாரத்தையு மறிந்தனுபவித்துநின்று மந்த வொழிந்தும்,—சாக்கிர முதலாயுள்ள வவத்தையிற்றங்கி - சாக்கிர முதலாயுள்ள பஞ்சாவத்தைகளிலேபட்டு மீளவு மவையிற்றைவிட்டுத் தூலதேகத்திலே வந்து,— எங்கும் போக்கொடு வரவுமெல்லாம் புரிந்து - எவ்விடத்திலும் போக்கு வரவுக ளெல்லாவற்றையும் பொருந்தி,—புண்ணியங்கள் பாவ மாக்கியும் - தன்மா தன்மங்களைச் செய்தும்,—பலன்களெல்லா மருந்தியு நிற்குமான்மா - இவையிற்றின் பிரயோசனமாகிய சுகதுக்கங்களைப் பொருந்திநிற்கு மான்மா.

இங்ஙனஞ் சொல்லியது, சூக்கும தேகியாய்த் தூலதேகத்தையும் பொருந்திநின்று விஷய வியாபாரத்தை யறிந்து மீளவுஞ் சூக்கும தேகத்தாலே யவத்தைப்பட்டுஞ் சொர்க்க நரக பூலோக மென்றுஞ் சொல்லப்பட்ட வெல்லா விடங்களிலும் போவது வருவதாயுங் கன்மங்களைச் செய்து மந்தக் கன்மங்களைப் புசித்தும், இப்படிநிற்கு மான்மாவென்னு முறைமையறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஆன்மா - அங்ஙனம் பரசரீர மூன்றையும் முறையா னெய்திய வான்மா,— சூக்குமதேகியாகி - பின் சூக்குமதேகத்தைப்

பொருந்தி எங்கும் போக்கு வரவுசெய்து புண்ணியங்களை பாவப்பலன்களெல்லா மாகிய மருந்தியும் சூக்குமமாகியவிரு வினைப்பலன்களை யீட்டியு நுகர்ந்தும்,— தூலரூபத்தினமன ணி-பின்றால் சரீரத்தைப் பொருந்தி,— எங்கும் போக்கொடு வரவுமெல்லாம்புரிந்து - எவ்விடத்தும் போக்குவரவு செய்து,—புண்ணியங்கள் பாவப்பலன்க ளெல்லாமாகிய மருந்தியும்-தூலமாகிய வினைப்பயன்களை யீட்டியு நுகர்ந்தும்,—சாக்கிர முதலாயுள்ள அவத்தையுட டங்கிநிற்கும்-இயவா றநீதமுந் லை நதவகதைப்பட்டு நிற்கும்

---

## மறைஞானதேசிகர் உரை.



உலோகாயதன் முதலாயினு ரான்ந்தகோச முதலிய
வொவ்வொரு கோச மான்மா வென்ன,
அன்றென் றுணர்த்துகின்றது

மருவானந்தம் விஞ்ஞான மனோபிராண னன்னம
ய, முருவானந்தன்மையுடையமுன் றொன்றுக்கொன
று சூக்குமமாய, வருமாமனோ மயமபறவி மாயைமுத
ற்கா ரணமாகு, மருவாமான்மா வையகோசத் தாப்பு
ண்டவறறி னகம்புறமாம். (௨௩)

(இ-ள்) மருவானந்தம் — வேதாந்திக ளானந்தமயமே யான்மா வென்பர்கள்.

விஞ்ஞானம — பௌத்தன் விசிட்டமான வறிவைப்பொருந்தி யிருக்கிற விஞ்ஞானமயமே யான்மா வென்பன.

மனோபிராண னன்னமயம — அகங்காரவாதி மனோமய மான்மாவென்பன. அருகன பிராணவாயுதானே யான

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

பஞ்சகோசங்களி லொவ்வொருகோச மான்மா வென்பவர் களை மறுத்துரைத்தின்று.

வேதாந்திகள், காரணசரீர மென்னு மவித்தையாகிய ஆனந்தமயகோசமே யான்மா வென்பார்கள். புத்தர், விஞ்ஞானமய கோசமே யான்மா வென்பார்கள். அகப்புறச்சமய வாதிகள், மனோமய கோசமே யான்மா வென்பார்கள். ஆருகர், பிராணமய கோசமே யான்மா வென்பார்கள். உலோகாயதர், அன்னமய கோசமே யான்மா வென்பார்கள். இங்ஙனங்கூறப் பஞ்சகோசமும் மாயோபாதானமா யிருக்கும் தூலசரீரத்தும் சூக்கும சரீரத்து மடங்கும்.

மற்றவை வெளிப்பொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

காரணசரீரமுதலிய வைவகைத்தா, அவ்வாறு மாயையினின்றுந் தோன்றி ஆன்மாவுக்கு வடிவாய, முறையே ஆனந்தமய கோச முதலிய ஐவகைப்பெயர் பெற்று ஒன்றற்கொன்று தூலமாய் நிற்க, கேவலத்தி லொன்றுமின்றி மலமாத்திரையாய் நின்றவான்மா, இவ் வைங்கோசங்களில் அதுவதுவாய வசிப்புண்டு ஏகதேசியாயப் போக்குவரவு செய்து நிற்குமென்பதாம்.

கேவலத்திலொன்றுமின்றி நின்றவான்மா, மாயையி லவ்வணங் கலக்குண்ட பாகத்தை முதற்கட்பொருந்தி அறிவிச்சைச் செயல்கள் பொதுமையா னவ்வளவு விளங்கப்பெற்ற மாத்திரையே அம்மயக்கறிவா லோராநந்த முண்டாகப் பெறுதலின் அஃதானந்த மயகோச மெனப்பட்டது.

ஏனையவுங் காரணக்குறியாமாறு உய்த்துணர்ந்துகொள்க.

இவ்வையங்கோசங்கட்கு வேறுவேறு பொருள் கூறுவார் மதங்களையெல்லாம் மறுத்தற்பொருட்டு, இவ்வாறெடுத்தோதி, மாயை முதற்காரணமாகுமென்றுங் கூறினார்.

ஆன்மா வித்தைசெழுமாலுங் கோசவிவட்டங் கறங்கென நிமிடத்தினக லையாருமட்டுங் கொண்டு திரிதல்பற்றி, இவ்வைங்கோசங்களை ஐந்துபரவையாகவும், அவற்றுள் ஒரோவொன்றை ஐவகைப்படுத்து முக்குமுதலிய வுறுப்புக்களாகவும் வேதத்து ஞருவசருசெய் துணர்த்திய வாறென்க.

ஆன்மாவினுடைமையுமாதற்கு இவற்றை யிங்ஙனம் பகுத்தறிதலு மொருசாதனமெனக்கொள்க.

இவை மூன்று செய்யுளானும், பசுத்துவவுபாதியான மறைப்புண்டுநின்ற வவ்வறிவிச்சை செயல்களை, பின் ஒருபுடைவிளக்கி அவத்தை போககுவரவுமுதலிய வுறாநிற்குமிட உபாதி கூறுமுகத்தால் வசித்திட வருமாறு தெரித்துணர்த்தப்பட்டது.

இன்னும் ஆன்மாச் சார்ந்ததின் வண்ணமாய் வசித்திடவருமாறறிதற்குச் சருவஞானோத்தரத்தில் அவ்வச்சார்பு விசேடம்பற்றிய பூசானமாமுக லறுவகைப் பிரித்துக் கொடுத்தும் விரித்தோதியதூஉம் கண்டுய்த்துணர்ந்துகொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் மாயையிலேநின்று முண்டாக்கப்பட்ட தநுக் குடமென்று சொல்லுகிற வடிவு பலபிரகாரமாயிருக்குமென்று அருளிச்செய்கிறார்.

மருவானந்தம் - பொருந்தப்பட்ட ஆனந்தமயம்,—விஞ்ஞானம் - விஞ்ஞானமயம்,—மனோபிராணன்னமயம்-மனோமயம் பிராணமயம் அன்னமயம்,—உருவாந்தன்மையுண்டாய் - இவை யிறுதலே தேகமாகத்தக்க முறைமையினை யுடைத்தாய்,—முன் னொன்றுக்கொன்று சூக்குமமாட - அநாதியே அன்னமய முதலாக வொன்றுக்கொன்று சூக்குமமாய்,—வருமாமனமயம்பற்றி- அன்னமய கோசத்தைப் பற்றி நின்ற நாலு கோசமும் உண்டாகின்றதும் இவையிற்றுக்குக் காரணமேதெனில்?—மாயை முதற்காரணமாகும்-இப்படிச் சொல்லப்பட்ட கோசங்களைந்துக்கும் அசுத்தமாயை முதலுபாதானமா யிருக்கும்—அருவா மான்மா வைங்கோசத் தாற்புணர்ந்தவற்றின் அகம்புறமாம் - அருவமாயிருக்கிற வான்மா இந்தப் பஞ்சகோசத்தாலும் பந்திக்கப்பட்டு அவையிற்றுக்கு உள்ளும்புறமுமா யிருக்கும்.

இதனாற் சொல்லியது, மாயையிலேநின்று முண்டாகப்பட்ட அன்னமய முதலான கோசங்களாலே பந்திக்கப்பட்டு அருவமாயிருக்கிற வான்மா உருவமாய் இவையிற்றுக்கு உள்ளும் புறமுமாயிருக்குமென்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———0———

மாயைமுதற் காரணமாரு முருவாந்தன்மை யுண்டாய் - காரண சரீரமுதலிய வவயவந் தோன்றுவாறு மாயையினின்றுந் தோன்றி யான்மாவுக்கு வடிவாய்,—மருவானந்த விஞ்ஞான மனோபிராணன்னமயம் - முறையே பொருந்திய ஆனந்தமய கோசமும் விஞ்ஞானமயகோசமும் மனோமயகோசமும் பிரா

ணமய கோசமும் அன்னமய கோசமுமாகிய வைவகைப் பெயர் பெற்று,—முன்னொன்றற்கொன்று சூக்குமமாய் வருமாமன் னமயம்பற்றி - அன்னமயமுதலொன்றற்கொன்று சூக்குமமா யன்னமயந் தூலமாய் நிற்க,—அருவா யானமா - கேவலத்தி லொன்று மின்றி மலமாத்திரையாய் நின்றவான்மா,— ஐங் கோசத்தாற்பண்டவற்றி னகம்புறமாம் - இவ் வைங்கோ சங்களிலது வதுவாய் வசிப்பண்டேகதேசியாய்ப் போக்குவ ரவு செய்துநிற்கும்

இவை மூன்று செய்யுளானும் பசுத்துவ வுபாதியான ம றைப்புண்டு நின்ற அவ்வறிவிச்சை செயல்கள் சிலவொருபுடை விளங்கி, யவற்றை போக்குவரவு முதலிய வுறுதற்குரிய உபா தி கூறுமுகத்தான் வசித்திட வருமாறு தெரித்துணர்த்தப்பட் டது

---

## மறைஞானதேசிகர் உரை.



இந்தப் பஞ்சகோச மயமாயிருக்கிறசரீரத்தை யான்மாப்
பொருந்தியதற்குவேறாய் நின்று நடத்து
முறைமை யுணர்த்துகின்றது

தோற்பாவை கூத்துந்தொல்லை மரப்பாவையிய
க்கமுஞ்சித்ர தோப்பாரிற் செல்வுமவேறாய்ச் செலுத்
துவோர் செய்கிறானும், பாற்பாய வேடங்கட்டி யா
டுவோர் பரிசும்போலும், மாப்பாய காயந்தனனை யா
ன்மாவினா ருட்டுமாறே. (௨௪)

(இ - ள்.) தோற் கூத்தாடி யானவன் றோலினாற்செய்த பி
பாவை கூ ராவணன் முதலிய கூத்தைக்கட்டி யடிப்பி
த்தும் ப்பதும்,

| | |
|---|---|
| தொல்லை மரப் பாவை யியக்க மும் | பழைமையாய்த் தொன்றுதொட்டு மரப் பாவையைக் கயிற்றினை வழியே யாட்டுவிக்கு முறைமையும், |
| சீர்த்தேர்ப்பா ரிற்செலவும் | சிற்ப சாத்திரத்தின்படி சிற்பியினையுடைய அசுவமுதலிய தெரிந்த போக்குவரவு புரிகையும், |
| வேற்றுச் செலுத்துவோர் செயதிறனும் | சிற்பாசாரியானவ னிலையிற்றனைச் செய்யினு மவையிற்றுக்குத் தானவேறாய் நின்று செலுத்து முறைமைபோலவும், |
| பார்ப்பாயவேட் டுக்கட்டி பாடு வோர் பரிசும் போலும் | வெகுருட்பருவிய பிராமணர் முதலாயின கூத்தக்களைக் கட்டிக் கூட்சத்திரவாக்கண முறைமைபோலவும், |
| ஆப்பாய கா யத்தனை யான மாதினொட்டு மாறே. | ஆன்மாவு மிந்தப் பந்திக்கப்பட்ட சரீரத் தைத் தன்மாணுக்கு னாக வெடுத்துக்கொண் டதற்குவேறு யிந்திரியங்களைக் கொண்டே சேட்டிக்கு முறைமையு மப்படி என்று |

சிற்ப முதலிய மோ பத்துவித முண்டாக்கைப்டாற சீத்தே ரென்ச சிற்பித்தார்

இதற்கு ச்சிந்தியமுங் காந்தபுராணமு மென்னறிக, (௨௪)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

மேல் தேகமானது யந்திரமும் தேகியானவன் யந்திரியு மென்ப துணர்த்துதல்.

தோற்பாவைக் கூத்துத் தொல்லைமரப்பாவை யியக்கமுஞ் சீர்த்தேர்ப்பாலிற் செலவும் வேற்றுச் செலுத்துவோர

செய்திதானும் - ஆன்மாவானது தேகத்தைச் சேட்டிக்கும்படி யெப்படி யென்னில்? தோலினால் மரத்தினால் பண்ணப்பட்ட ரூபங்களை × சூத்திரிகனானவன் ஆட்டுவிக்கிறாப் போலும் தேரானதை யந்திரிக னடத்தினாற் போலுவும் ஆன்மாவானவன் இந்த தேகத்திலே நின்று சேட்டிப்பன் — பாரப்பாய வேடங்கட்டி யாடுவோர் பரிசுபோலு மாரப்பாய காயந்தன்னை யமைத்தனன் ஆட்டுமாறே - பலபலவேடங்கட்டி யாடுகிற கூத்தாடிகளைப்போல் ஆன்மாவுங் கன்மத்துக் கீடாகத் தனக்குக் கிட்டப்பட்ட வெண்ணிறந்த சரீரங்களிலு மதுவதுவாய் நின்று நடிக்குமென் றிதன்பொருள்

× சூத்திரிகன் - ஆட்டுகிறவன்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

பஞ்சகோசத்துக்கு ஆன்மா அன்னியனாயப் பஞ்சகோசத்தைப் பிரேரிப்பனென்பது படிக்கின்றார்

வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

அன்னமயகோசமுதலிய வைந்தினும் ஆன்ம வேற்றுமையின்றி நின்று செலுத்துமாறு, முறையே தோற்பாவையிற் செம்மரப்பாவை யிப்பக்கமுந் தோற்பாவைக் கூத்தும் வேறு செலுத்துவோர் செய்தியும் வேடங்கட்டி யாடுவோர் பரிசு போலுமென்பதாம்.

வேறாய்ச் செலுத்துவோர் செய்தியென்றது பரகாயப் பிரவேசத்தை.

இவைமுன்னரையே முறையே ஒன்றற்கொன்று அந்தரங்கமாய் அவ்வவ்விடங்களினின்று மான்மா நின்று செய்யுமாற்றிற்கு உவமையாமாறு தெரிந்துணர்ந்துகொள்க.

செய்யுளாகலின் முறை பிறழவைத்தார்.

காயம் சாதியொருமை.

இதனுள் ஆன்மா அங்ஙனம் வசித்திடவரினும், அவ்வே தேசப்பொருள்கட்கு வேறாய் வியாபிபெறும் வழக்குடையனாகல் அவற்றைச் செலுத்துமாற்றினை வைத்துணர்த்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன் சொல்லப்பட்ட வான்மா, இந்தத் தேகத்திற்கு உள்ளும் புறம்புமாய் நின்று இந்தத் தேகத்தைக் காரியப்படுத்து முறைமை மேலருளிச் செய்கிறார்.

தோற்பாவைக்கூத்தும்-தோற்பாவையினது கூத்தாட்டும்,—தொல்லைப்பாவையியக்கமும் - பழையதாய் வருகிற மரப்பாவையினது சஞ்சரிப்பும்,—ஏர்த்தேர்ப்பாரிற் செலவும்—அழகிய தேரின் பகுதியிலுள்ள போக்கும்,—வேறாய்ச் செலுத்துவோர் செயத்தானும் - இப்படிச் சொல்லப்பட்ட வினையிற்றுக்கு வேறாயிருந்து இவையிற்றைச் செலுத்துகிறவர்கள் முறைமையும், இவையன்றியும்,—பார்ப்பாய வேடங்கட்டியாடுவோர் பரிசுபோலும்-பிராமணிய முதலாயுள்ள* பலவேடங்களைக்கட்டியாடுகிற கூத்தாடி முறைமையும்போலும்,—ஆர்ப்பாயகாயத்தனை யான்மாவின் றொட்டுமொரே - கன்மத்துக் கீடா

கப பந்திக்கப்பட்ட தேகத்தை ஆன்மாக கூட்டிநின்று ஆட்டு கிற முறைமையும் இத்தன்மைத்து

இதனாற் சொல்லியது, தோற்பாவையையு மரப்பாவையை யும் தெரிந்து இவையிற்றை யியற்றுகிறவன் வேறாய்நின்று யியற்றுகிற முறைமைபோலவும், பல கோலங்களைச் சமைத்து அந்தந்த கோலத் தானாய் நின்று ஆடுகிற கூத்தாடி முறைமை போலவும், பந்திக்கப்பட்ட காயத்தை ஆன்மாநின் றாட்டுகிற தன்மையும் என்று முறைமையு மறிவிக்கத்து

'அசித்தருவி யாபகம்' 'மாயையின்' 'சூக்கமதேகி' 'மருவா னந்தம்' 'தோற்பாவை' ஆக ஐந்து திருவிருத்தமும் சிஷன

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—o—

ஆரப்பாய காயந்தன்னை யான்மா நின்று ஆட்டுமாறு - பந்திக்கப்பட்ட அன்னமய கோசமுதலிய வைந்தினு மான்மா வேறன்மையின்றி நின்று செலுத்துமாறு,— தேர்ப்பாரிற் செல்லும் - இவைமுறையே யன்னமயகோசத்திற் சிறப்புடை யதேரைப் பாரிற் செலுத்துவோர் போலும்,— தொல்லைமரப் பாவை யியக்கமும்-பிராணமய கோசத்திற் பழுப மரப்பாவை யினை யியக்குவோர் போலும்,—தோற்பாவை கூத்தும்-மனோ மய கோசத்தின் தோற்பாவையை யாட்டுகிறவர் போலும், — வேறாயச் செலுத்துவோர் செய்திறனும்-விஞ்ஞானமயகோச த்திற் பரகாயப் பிரவேசஞ் செய்வோர் போலும்,— பார்ப் பாய வேடங்கட்டி யாடுவோர் பரிசுபோலும் - ஆனந்தமயகோ சத்திற் பலவேடங்கட்டி யாடுவோர் பரிசுபோலுமாம்.

இவைமூன்றையே யொன்றற்கொன்று அந்தரங்கமான அவ்வவ்வேகோசங்களினு மான்மாநின்று செய்யுமாறதற் குவ மையாமாறு தெரிந்துணர்ந்து கொள்க. மாவஞ்சனம் வஷி த்திட வரினு மவ்வேகதேசப் பொருளுட் பிரிவுறுப் வியாபி யெனும் வழக்குடையனாதல் அவற்றைச் செலுத்துமாற்றினை வைத்துணர்த்தப் பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேல் இச்சரீரத்துக் கான்மா வேறென்
றுணர்த்துகின்றார்

என்றுடல் பொறிபிராணன் கரணமென் றுணர்
வென்றகக்காற், றன்னினவே றுருநீயென் றனமனையெ
ன்றவெல்லா, மின்னினவே றுருமென்னி னீங்கிடா வி
வைபிங்கெனனி, லுன்னின வாங்கியா முமாமபி ருக்கவு
ங்காணடி. (௨௫)

| | |
|---|---|
| (இ-ள்) என்னுடலபொறி பிராணன கரணமென்னுணர்வென்றாக காற்றன்னின வேறுரும | தற்கிழமையாகச் சொல்லப்பட்ட வென்னுடைய சரீர மிந்திரியம் வாயு கரண மறிவென் றொருவன் சொன்ன விடத் தவைகளெல்லா மவனுக்கு வேறா யிருக்கும். இஃதன்றி, |
| நீயென்றன மனையென்றவெல்லா நின்னினவே றுரும் | பிறிதின் கிழமையாக வரப்பட்ட வெனது நிதியெனவு மெனது வீடெனவு நீ பிரித்துச் சொல்லப்பட்ட வினைகளெல்லாத்தையும் விசாரித்தறியி லவையுனக்கு வேறாகும்; |

சழலும். உன்னுடைய மாதாபிதாக்கள் மரிக்க, அந்த தேகமிருக்க, அந்தத்தேகத்தைக் கட்டிக்கிடந்து மாதா பிதாக்கள் செத்துப் போனார்களென்று துக்கப்பட்டந்த தேகத்தைச் சாம்பலாகச் சுந்தவுருசெய்யாயே! ஆதலா லிந்தத்தேகம் ஆன்மாவல்லவென்றறிவாயாகவென்றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

பின்னும் பஞ்சகோசங்களானமாவுக் குடைமைப் பொருளாகப் பகுத்தப்படி மாதலாற் பின்னப் பொருளாமென்று பேசுகின்றார்.

இவை - சரீராதிகள்,— உன்னினவாகுமீயாம் - உன்னுடையனவாகிய நீ நானென்றபிமானிக்கப்படும்,—உகவும் - நீயாகவும்.

மற்றவை வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

தன் மனைமுதலியவற்றோடொப்ப எனதென்று வழங்கப்பட்டுச் சில நீயாகுதலுங் காணப்படுதலால், இதுவும் ஆன்மாவுக்கு வேறென்பது அறியப்படுமென்பதாம்.

உன்னினவென்பது இன் சாரியை பெற்ற வகரவீற்றுப் பலவறிசொல்.

அற்றேல் உடல்பொறி முதலியவற்றை எனதென்பது, தன்மனை முதலியவற்றை எனதென்றதுபோலன்றி இராகுவினது தலையென்றாற்போல அபேதம்பற்றிக் கூறும் கருத்தேயாகலி

ன, உரைப்போர் குறிப்பொருபடுத்துக் காணுங்கால் அவ்விரு வகை வழக்கிற்குந் தம்முள் வேறுபாடின்மையின், அவைதம்மு ளொக்குமாறு யாங்ஙன மென்பாரை நோக்கி வேறுவமையெ டுத்துக்காட்டி யுணர்த்துதற்கெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேலுலோகாயதன் இந்தச் சரீரத்துக்கு வேறாயிருப்ப தொரு ஆன்மா வில்லையென்று சொல்ல, அவனை மறுத்தருளிச்செய் கிறார்

என்னுடல் பொறிபிராணன் கரணமென் றுணர்வென்றக் கால் தன்னில்வேறாகும் - என்னுடைய தேகம் என்னுடைய இந் திரியம் என்னுடைய வாயு என்னுடைய கரணம் என்னுடைய வ றிவு என்று சொன்னபொழுது இவையெல்லாமப்படிச் சொல் லுகிறவனுக்கு வேறாயிருக்கும், — நீ யென்றன் மனை யென்ற வெல் லாம் நின்னில்வேறாகும் என்னில் - நீ பெண்டிர் என்மாடு என்னு டைமை என்கிற இவையெல்லாமப்படியே யுனக்கும் வேறாயிருக் கும் என்னில்? — நீங்கிடா இவையிங்கென்னில் - அவைபோல இவையெல்லாம் என்னைவிட்டு நீங்காதென்று நீ சொல்லில்? — உன்னின்வாங்கி நீயா முங்காமயிருக்கவுங்காண்டி - உன்னுடைய கா யமுநீயாயிருக்கிற வுகிரு மயிரு முதிர்ந்து போகவுங் காண்கிறு யாகலால் இவையெல்லாம் நீயல்லவென் றறிவாயாக.

இதனுற் சொல்லியது, சரீரத்துக்கு வேறாயிருப்ப தொரு ஆன்மா வில்லையென்று சொல்ல, பலபிரகாரத்தாலும் சரீரத்து க்கு வேறாயிருப்பதொரு ஆன்மா வுண்டென்னு முறைமையைய் திவித்தது

---

யமாகு மென்பதை யறிந்து, தேகேந்திரியாதிகளைப் பிரிந்து நின்
றன்னுடைய வுண்மைதனை யறிவாயாக வென்ற திதன்பொருள்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இதனுரை

சுவசம்வேதனப் பிரத்தியக்ஷத்தினுல் உன்னைச் சித்துருப
மு மறிந்து பிரிந்து சரீரத்தைச் சடரூபமாகப் பாரே
மற்றவைவெளிப்பொருள்

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

உடல்பொறி முதலியவற்றை எனதென்றல், இராகுவின
தலை யென்றாற்போலச் சிறுபான்மை வழக்க மாதலினறிப்
பெரும்பாலும் யானென்றியாரும் வழங்குக்காணடலின், அவற்
றை யபேதப்படுத்திப் பகருத்தா லென்னென்றான் மெய்ப்படுத்த அ
ந்நிகல முதலியவற்றை யவ்வா றென தென்றல்போல அறிந்து
பிரிந்து பாராத மடமையே பிறிதறென்பதாம்.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

நீயு முடல்வேறு நீ வேறு வென்னு முறைமையை விசா
ரித்துப் பாரத்து அறிவென்று அருளிச்செய்கிறார்.

பொன்னணியாடைமாலை போதமே லானபோது-பொன்னு
லே செய்யப்பட்ட ஆபரணமும் புடவையும் மாலையும் பூக்களும்

நீ யணியப்பட்டபோது,—நீ யிங்கெனன்னணி யானென்றுன்னியிருந்தனை - இவ்விடத்திலே என்னுடைய வாபரணமென்றும் யானென்றும் நினைத்திருந்தாய்,—பிரிந்தபோது நின்னணி நீயுமல்லவாயின - அவையிரண்டையும் வாங்கினபோது நீ யணியப்பட்ட வாபரண முதலானவை யெல்லாம் நீ யல்லவாய் விட்டது அது போல,—காயநின்னி லந்நியமாகும் - தேகமும் உனக்கு வேறாயிருக்கும் —உன்னையறிந்து நீபிரிந்தபாரோ - ஆகையா லுன்னுடைய வுண்மையை யறிந்து இவையிரண்டையும் நீங்கி நின்று காண்பாயாக.

முன்னின்ற திருவிருத்தமும் இதுவும் உலகாயதனை இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம் ௩-சூ, ௨-வெ, "என்னுடைய தென்றலின், தன்கலா தன்னைச்சார் லாக்கை - யெனதென்று, மெய்யறிவென்று முறைத்தற் கறிகாவலுன்னில்லை வேறுமுணர்" என்றும், பரபக்ஷம் அவன் மதம் ௧௧-செ, "காயத்தின் குணம் தன்றிக் கவுட்காணமா வுண்டாயின், மாயத்திற சொல்லிடாதே மனமுத லாறினுக்கும், தேயத்த தாக வேண்டுமன்றியே நிகழ்த்துமுன்னை, தேயத்தின் முமற்கெம் பெல்லைசெப்புவோர் செய்தியாமே" என்றும், அவனமறுப்பு-௬ா-செ "அறிவுபூதம தென்னில்வேறு பூதத்தறிந்தனை கண்டிலந்து - செறிவுதானுடலத்தெனிற்சவ மானபோதுடல் சேருமோ - குறிகொளா துடல் வாயுவானது கூடிடாமையினென்னில் நீ - பிறிதராதுயிர் நிறகஞான முறக்கமென்பிற வாததே" என்னுமதவ கண்டுகொள்க

இதனாற் சொல்லியது, பொன்னாலே செய்யப்பட்ட வாபரண முதலானவையிரண்டைத் தன்னுடைய சரீரத்திலே தரித்துக்கொண்டிருந்த அவை தானாயிருந்தும் அவையிரண்டைக் கழற்றினபோது அவை தனக்கு வேறாயிருந்த தன்மைபோலச் சரீ

ரத்தையும் தன்னையும் விசாரித்துப் பார்த்தவிடத்துச் சரீரமுந் தனக்கு வேறாயிருக்குமென்னு முண்மை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

பொன்னணி யாடைமாலை போதமேலானபோது-பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணங்களாடைகண மாலைகள் பூக்கள் முதலிய புறப்பொருள்களை யணிந்தபோது,—இங்கென்னணியாமென்னுன்னியிருந்தனை - இவ்விடத்து என்னணியாமென் றபேதம்பற்றிய கருத்தா லினைந்திருந்த நீ,—நின்னணி நின்னின் பிரிந்தபோது நீயுமல்லவாயினை-நின்னா லணியப்பட்ட புறப்பொருள்களாகிய வணிகள் முதலாயின நீங்கியபோது உனக்கு அன்னியமாய் நீயல்லவாயின போல,—காயமென்னி லன்னியமாகும் - உடல்பொறி முதலியவைத்து மன்னியமாயிருக்கின்ற,—உன்னையறிந்து நீ பிரிந்து பாரே-உனதுண்மையை யறிந்து நீயிவற்றை நீங்கினை யறிவாயாக.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேலதனை வற்புறுத்தி யுணர்த்துகின்றார்.

உடலியா னல்லேனிந்த வுணர்வியா னல்லவான,
கடனியா தென்னின்வேறு கண்டுணர் வென்னதென்
கை, யிடரிலா வென்றனுண்மை யென்றபோ தான்மா
வேறே, இடனதா வுரைவேறு கண்டிடார் செப்ப
லேகாண். (உஎ)

(இ-ள்.) உடலி இத்தசரீர நானல்லவென்ற தொக்கும் யானல்லே னறிவென்ற வறிவுகள் நானல்லவென்று நீ

பேதம் பிரிப்பின்றி யுள்ளுணவென்று சான்றோர் சாற்றுதலா
ல், இப்படி நீர் சொல்லிய?

இடரிலா வென்றனுளமா வென்றபோ தானமாவேறே-
வேறன்று அதுபோல் அறிவு வேறன்று சத்தியம், நீ சாற்றிய
து வேறல்லவென்பது?

இடன்தா யுயிரை வேறு கண்டிடார் செப்பலே காண் - நி
ச்சிதமாயத் தற்பொருளறிவாய்த் தன்மியாகிய ஆன்மாவைப்
பிறபொருளறிவாகிய தன்மமாகிய சிற்சத்தியினின்றும் பிரி
வின்றிப் பிரித்தறியாதார் அபேதமாயப் பேசுவர்காண்.

என்றன் என்பதற்குப் பொருள், பிறபொருளறிவாகி
ய சிற்சத்திரூப தன்மமாகில், ஆன்மா என்பதற்குப் பொருள்
தற்பொருளறிவாகிய சத்திமத்தரூப தன்மி

என்றன் என்பதற்குப் பொருள் தன்மி லக்ஷியமாகில், ஆ
ன்மா வென்பதற்குப் பொருள் தன்ம லக்ஷணம

தற்பொருளறிவாகிய தன்மியும், பிறபொருளறிவாகிய
தன்மமும், ஒன்றுக்கொன்று அது தானே யிது தானும், இது
தானே யதுதானும் இருக்கலாற் புறம்பிறப் பிரிக்கும் பேதமி
ல்லாம லிருந்தாலும், உள்ளே பிரியாமற் பிரிக்கும் பேத முண்
டென்று பெரியோர் பேசுவார்கள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

ஆன்மாவை யென்னென்றல் வேறாகக் காணுங் கருத்தின்றி
இராகுவின்து தலையென்றாற்போல ஒருசாரார் கூறுஞ் சிறுபா
ன்மை வழக்காகலின், அஃதபேதம்பற்றிய வழக்கென்வமையு
ம்; விஞ்ஞானமய கோச மானந்தமய கோசங்களை யென்கெ
ன்றல் ஏனைக்கோசங்கள் போல வேறாகக்காணுங் கருத்தால்

எல்லாராலும் வழங்கப்படும் பெரும்பான்மை வழக்காதலின், அஃதுபோல் அப்பேதம் பற்றிய வழக்கின்மையாமையின், அவையுமேனையபோல உயிரின் வேறாயாமென்பதாம்.

விஞ்ஞானமயகோசம் உயிரின் வேறாதல் கூறவே, இனம்பற்றி ஆனந்தமயகோச முயிரின் வேறாதலுமதனாற் கொள்ளப்படும்.

உணர்வென்னன்றென்னை வேறுகண்டாகலான் இந்தவுணர்வு யானல்லவான் கட்டென்னைக் கூட்டுக

கண்டாரென்பது முற்றெச்சம்

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இந்தச் சரீரம் நானல்லவென்பது மன்றிச் சரீரத்திலே நின்று அறிகிறவறிவு நானல்லவென்றதெப்படியென்றவனை மறுத்து அருளிச்செய்கிறார்

உடலியானல்லே னிந்த வுணர்வுயானல்லவான உடலியானென்னில்-இந்த தேகந்தான் நானல்ல, இந்த தேகத்திலே நின்று அறிகிறவறிவும் நானல்லவான முறைமையை யெப்படியென்னில்?—வேறு கண்டேனா யென்னுதென்னை - என்னுடைய வறிவென்று நீ வேறாக வனுபவித்துக் கண்டு சொல்லுகையாலே,—இடரிலா யென்றனுமா யென்றபோ தானமாவேறு - துயரமில்லாதவனே! என்னுடைய வான்மா வென்றபோது நானென்றும் ஆன்மாவென்றும் வேறுண்டோ? எல்லாமுந் த வான்மா தன்னைக் காணும் இத்தமயக்கம்,— இடர்தாவுமிவைவேறு கண்டோர் செப்பலேகாண - உண்மையாக வான்மாவைப் பிரித்துக் காணமாட்டாதவர்கள் சொல்லுகிற வார்த்தைகாண் நீ சொல்லுகிறது.

இங்ஙனஞ் சொல்லியது, சரீர மான்மாவல்லவாயின் இந்த வறிவு மான்மா வல்லவோ வென்னின், என்னறிவு என்கையால் அறிவு மான்மாவல்ல வென்றும், என்ஞானமென்றால் அது கொண்டு அவனுக்கு வேறென்று நீ சொன்னது ஞானமாகிய குணமை தரிசனப்படாதவர்கள் சொல்லுகிற வாதத்தைக் கொண்டு என்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

இடரிலா வென்றானன்மா வென்றபோ தான்மா வேறே-ஞானமாகை குற்றமில்லாத வென்னுடைய ஆன்மா வென்ற போதுடல்வேறு ஆன்மாவேறு ஆனதாகவு மென்னதென்றல்;—இடந்தா யுயிரைவேறு கண்டிடார் செப்பலேகாண் - உறுதியாக வுயிரைவேறாகக்காணுங் கருத்தின்றி யிராகுவினது தலையென்றாற்போல ஒருசாரார் கூறும் சிறப்பான்கூம வழக்காகவின், அஃதேட்டம் பற்றிய வழக்கென அன்றியும்,—இத்தவுணர்வுபானல்லவான கடவியா தெனின் - இந்தவிருஞான மயகோசம் அனந்தமயகோசங்களை யானல்லேனாகிய முறைமை யாதெனின்?— உணர்வென்னதென்கை வேறுகண்டு - இவவிருவகைக் கோசங்களை பென்றொன்றல் ஏனைக்கோசங்கள் போல வேறாகக் காணுங் கருத்தால் எல்லாராலும் வழங்கப்படும பெருபான்மை வழக்காகலின் அஃதுபோல பேதம்பற்றிய வழக்கென அமையாமையின் அவையும்,—உடலியானல்லன் வேறு-உடல்பொறி முதலியனபோல உயிரின்வேறேயா மெனபதாம

---

வென்றது மற் றதுமதிபேதத்தால் வேறே யொருபொருளென்றுரைக்கக் காரண எ-று.
ண.

இஃதன்றிப் பாரத்தது மவதாரப்பெயர்க ளாகச் சொல்லும் அஃதாவது தற்காலோசித மானபொருளைக் கிருக்கிற ஞானம் புத்தியெனப்பெறும், மேலவரப்பட்டுற பொருள்களை யறிகிறவறிவு மதியெனப்பெறும், யாதாமொருவன் முன்சொன்ன காரியங்களை மறியுமறிவு மிருதியெனப் பெறும், முக்காலத்திலுண்டாய வியாபாரத்தை யறியாநிற்கிற வறிவு பிரஞ்ஞையெனப் பெறும், இந்தப்பிரஞ்ஞைதானே முக்காலத்து மறிவு மிருந்திருந்தால் லதற் கறிவு பிரதிபை யெனப்பெறு மெனவறிக (உஅ)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.



என்னறிவென்று சொன்னது விஞ்ஞானத்தைக்காண் என்ஞானமா மென்றது தன்னைச் சொன்னதன்று, பரமாணமல்லவை யென்பது மேலுணர்த்துதல்

புத்தியை மனமென்றும் - இது காரணலக்ஷணை அஃதாவது? காரியகாரண பேதோபசாரத்தினாலே காரியத்தைக் காரணமாகக் கூறினது,—மனமும் புத்தியென்றும் - இது காரியலக்ஷணை. அஃதாவது? காரணத்தைக் காரியமாகக் கூறியது,— சித்தத்தைச் சீவனென்றும் - இது சமீபலக்ஷணை அஃதாவது? கங்கைக்கரையிலே யிருக்கிற பேரைக் கங்கையிலே யிருக்கிறார்களென்று சொல்லுவதுபோல,— சீவனைச் சித்தமென்றும் - இது * தர்மானுகிருதி லக்ஷணை. அஃதாவது குணவத்தைச் செலுத்துதலையினு லாதிசத்தியைப் பரசமென்றது போ

லையிலே மனத்தைப் புத்தியென்றும்,— சிந்தையைச் சீவனென்றும் - உபகார லக்கணையிலே சித்தத்தை யான்மாவென்றும்,— சீவனைச் சிந்தையென்றும் - சமீப லக்கணையிலே ஆன்மாவைச் சித்தமென்றும்,— முந்தனை யான்மா வென்றும் - உபகாரலக்கணையிலே சிவனைச் சீவனென்றும்,— ஆன்மாவை முந்தனென்றும் - தன்மானுசிருதி லக்கணையிலே சீவனைச் சிவனென்றும்,— வந்திடும் - இலக்கணைகளிலே பொருளுரைக்கப்படும் ஆதலால்,— என்ற ஞான்மாவென்றது மற்றொன்றைக்காண் - ஆன்மோபகாரகராயிருக்கின்ற சிவனைக் காண்

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அல்லதூஉம், உள்ளவாறு நோக்குவார்க்கு என்றனான்மாவென்னும் வழக்கில் ஆன்மாவென்றது தன்மேருடியையுடைய பிறிதொன்றின்மேல் ஆகுபெயராய் நிற்குமாகலான், அவ்வழக்குப்பற்றி நிலைகருத்து நிரம்புமாறில்லையென்பதாம்

ஆகலானவ்வழக்குப்பற்றி நிலைகருத்து நிரம்புமாறில்லையென்பது குறிப்பெச்சம்

அவ்வாறாகுபெயராய்ஆண்டாண்டு வருதலை பெயர்த்துக்காட்டுவார், புத்தியை மனமென்று மனத்தை புத்தியென்றுஞ் சிந்தையைச் சீவனென்றுஞ் சீவனைச் சிந்தையென்று முந்தனையான்மாவென்று மான்மாவை முந்தனென்றும் வந்திடுமென்றார்.

ஏனைமூவகைக்கோச மாத்திரையே வேறெனக் கொண்டு விஞ்ஞானமயகோச மானந்தமயகோச மிரண்டும் முறையே சீவான்மாவும் பரமான்மாவுமாமென்பார் மதத்தை மறுத்தற்பொருட்டு, அவற்றையின்னனம் வேறெடுத்தோதி வலியுறுத்தவாறு

இவைநானகு செய்யுளாலும உலகவழக்கினவைத தனா தது மேலது வலியுறுததபபடடது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o-

இப்படி யெனனுடைய வானமாவெனறது யானல்ல வென்ற ெபபடியெனறு கேடடவனுககு, இபபடியென றருளிச செயகிறா

புததியைமனமெனறும - புததியை மனமெனறும்,—மனமது புததியெனறும - மனததைப புததியெனறும,—சிததையைச சிவனெனறும - சிததததை யானமாவெனறும,—சிவனை சசிததையெனறும - ஆனமாவைச சிததமெனறும,— முததனை யானமாவெனறும - பரமேசுவர னானமாவெனறும,— ஆனமாவை முததனெனறும - ஆனமாவைப பரமேசுவரனெனறும,—வநதிடும - ஒவோரவதாரததிலே இபபடிச சொல்லபபடும.—எனறனனமா வெனறது மறறொனறைக காண - எனனுடைய ஆனமாவெனறு நீசொலலுகிறது வேறேயுனககுப பிராணனாயிருககிற பொருளைக காண

இதனாற் சொலலியது, அநதககரணஙகளையு மவையிற்றுககுப் பிராணனாய்நிறகிற வானமாவையும ஆனமாவுககுப பிராணனாய் நிறகிற பரமேசுவரனையும ஒவோ ரவதாரஙகளிலே ஒனறை யொனறாகச சொலலபபடுமெனனு முறைமை யறிவித்தது.

'எனனுடல்' 'பொனனனி' 'உடலியான' 'புததியை' ஆககாலு திருவிருததமும உலகாயதன.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

புந்தியை மனமென்றும் மனத்தைப் புந்தியென்றும் - ஒவ்வோரிடங்களிற் புந்தியை மனமென்றும் மனத்தைப் புத்தியென்றும் —சிந்தையைச் சீவனென்றும் சீவனைச் சிந்தையென்றும் - சித்தத்தை யான்மாவென்றும் ஆன்மாவைச் சித்தமென்றும்,—மூர்த்தியை யான்மாவென்றும் ஆன்மாவை மூர்த்தமென்றும் வந்திடும் - காரணங்கட்கெல்லாம் பரமகாரணனாகிய சிவனை யான்மாவென்றும் ஆன்மாவைச் சிவனென்றும் இங்ஙனமொவ்வோரிடங்களிலுபசாரமாகக் கூறப்படும் —என்றஞான மாவென்றது மற்றொன்றைக் காண் - அல்லதூஉ முள்ளவாறு நோக்குவார்க்கென்ற ஞானமாவென்னும் வழக்கில், ஆன்மாவென்றது தன்னோ டியைபுடைய பிறிதொன்றன்மே லாகுபெயராய் நின்றதுமாகலான் வழக்குப்பற்றி நினைக்கருத்து நிரம்புமாறு இல்லையென்பதாம்.

ஏனை மூன்றுவகைக் கோசமாத்திரையே வேறெனக்கொண்டு விஞ்ஞானமயகோச மானந்தமயகோச மிரண்டு முறையே சீவான்மாவும் பரமான்மாவு மென்பார் மதத்தை மறுத்தற்பொருட்டவற்றையிங்ஙனம் வேறெடுத்தோதி வலியுறுத்தவாறு.

இவை நான்குசெய்யுளானு முலகவழக்கினைத் துணைத்தி மேலது வலியுறுத்தப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

முற்கூறிய புத்தியாதி, ஆன்மாவைப் பொருந்திக்
காரியப்படுத்துகையா லான்மாவென்பதற்
கு திட்டாந்தமிட்டுணர்த்துகிறார்.

அறிவுடல் சிந்தையான்மா வன்றலா லான்மா
வென்ப, வெறிசுடர் விளக்கிருக்கு மிடத்தையும் விள
க்கென்றபோல், பொறிபுலன கரணமெல்லாம புல
பபடும் பேதமாகிப, பிறிதரா தறிவதானமா வறிபொ
ருள பின்னமாமே (௨௯)

| | |
|---|---|
| (இ-ள) அறிவுடல் சிந்தையான்மா வன்றலா லான்மாவென்பா | இந்திரியங்கள சரீரங்கள அந்தக்கரணங்கள இவைபொருந்திக் காரியப்படுத்துமதொழிந்து இவைகளுக்கு ஆன்மா வென்னும் பெயரெப்படிப் பொருந்துமென்று சொல்லின? அவைகளைக் கலந்து நின்ற வைக்கியத்தினாலே ஆன்மாவென்று சொல்லுவார்கள் காண அஃதெனபோல வெனனில? |
| எறிசுடா விளக்கிருக்கு மிடத்தையும் விளக்கென்றுபோல் | பிரகாசமவிட்டு விளங்காநின்ற விளக்கிற்காதாரமாகிய தானத்தையும விளக்கென்றுபசாரத்தாற கூறுவதுபோல ஆயினவவிரண்டு மொன்றுமோ வெனனில்? அன்று |
| பொறிபுலன கரணமெல்லாம புலபபடும பேதமாகி | இந்திரிய விஷய மந்தக்கரண முதலானவைகளெல்லா மானமாவுக்கு வேறாய் நின்று காரியப்படும ஆன்மாவிவைகளுக்குப் பின்னமாய நின்று காரியப்படுத்துமோ வெனனில ? |
| பிறிதரா தறிவதானமா | ஆன்மா விவைகளைப் பிரியாமனின்று பிரபோசனங்களைக் கொள்ளுவன அறிவானுமறியப்படும பொருளுமொன்றேவெனனில்? |
| அறிபொருள் பின்னமாமே. | இவனு லறியப்பட்ட பொருளகளெல்லாமிவனுக்கன்னியமா யிருக்குங்காண எ-று. |

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலும் தேகாதி விஞ்ஞானபரியந்த மான்மா பொருந்தி நிற்கையால் ஐக்கியத்தி னவைகளை யான்மாவென்ப தொழிந்து அவைக ளான்மா வல்லவென்ப துணர்த்துதல்.

அறிவுடல் சிந்தையான்மா வன்றலா லான்மாவென்பனெறிசுடா விளக்கிருக்கு மிடத்தையும் விளக்கென்றாற்போல் - விஞ்ஞானானந்த மயமாகிய காரண சரீரத்தையும் மனோமயமாகிய சூக்ஷும சரீரத்தையும் அன்னமயம் பிராணமயமாகிய ஸ்தூல சரீரத்தையும் ஆன்மா பொருந்தி யிருக்கையால் அவைகளையும் ஆன்மாவென்று சொல்லுவார்கள் அதெவ்வாறெனில்? மிகுந்த பிரகாசத்தை யுடைய விளக்கிருக்குந் தகளியை விளக்கென்றாற்போல் —பொறிபுலன் கரணமெல்லாம் புலப்படும் பேதமாகி யறிபொருள் பின்னமாமே - (பேதமாகி யென்றபதம் நடுநிலைத் தீபம்) விஷயங்களும் ஞானேந்திரியங்களும் அந்தக்கரணங்களும், எல்லாமென்னவே விஞ்ஞானேச்சாப் பிரயத்தினங்களும், ஆன்மாவுக் கன்யமாகவே விஷயீகரிக்கப்படும் அன்யமாக வறிந்த பொருளெல்லாம் ஆன்மாவுக் கன்யமே பொழிய ஸ்வரூபமல்ல ஆகில் சிவன் * ஞேயமும், ஆன்மா † ஞாதாவுமென்னும் பொழுது, சிவனுக்கு மான்மாவுக்கும் சாக்ஷாத் அன்யமேயெனில்?—பிறிதரா தறிவ தான்மா - ஆன்மா சிவனைப் பிறிவறவே யறியும் அதெவ்வாறெனில்? ஜிஹ்வையானது தன்னிடத்திலுள்ள ரசத்தைத் தானநந்யமாகவே யநுபவிக்குமாபோல

* ஞேயம் - அறியத்தக்கது, † ஞாதா-அறிகிறவன்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

திரும்ப உபகாரியோபகாரகாதே யாதார விலக்கணங்களினாலே அறிவுமுதலாகியவை யான்மாவென்று சொல்லப்படுமென்று சொல்லுகின்றார்

அறிவு- இந்திரியம், புத்தி விருத்திப் பிரகாசமுமாம்—உடல்-தூலசரீரம்,—சிந்தை-சித்தம், அகங்காரமெனப்படு மகங்காராதிகளுமாம் இவைகள்,—ஆன்மா அன்றதலால்- பொருந்துதலால், அவைகளை ஆதாரலக்கணங்களினாலே,—ஆன்மாவென்பார் - அவரெனப்போலெனனில்?—எறிசுடர் விளக்கிருக்கு மிடத்தையும்-தகளியையும்,—விளக்கென்றாற்போல,— பொறிபுலன் கரணமெல்லாம்-புறக்கரணமாகிய இந்திரியங்கள், சன்மமாகிய சத்தாதிவிடயங்கள், அந்தக்கரணமாகிய மனம் புத்தி யகங்காரங்கள் முதல் முற்றும்,—புலப்படும்பேதமாகி-ஆன்மாவுக்கன்னியமாயும் ஒன்றுக்கொன்று வேறாயுமறியப்படும்—பிறிதராதறிவு தானமா-வியாபித்து அறியப்படும் பொருளைக்காண்டதுஉயிர்— அறிபொருள் பின்னமாமே - அறியப்படும் பொறி முதலியன கன்மமாதலால் இதனைக் கரணமாக அறியுங் கர்த்தாவுக்கு வேறுதானே

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

ஆன்மாவின் வேறாகிய வவ்வைங்கோசங்களை ஆன்மாவென வுபநிடதங்களிற் கூறியதூஉம் விளக்கேந்து தகழியை விளக்கென்றாற்போலத் தானியாகு பெயராதற்குரிய வியைபுபற்றியே யன்றிப் பிறிதில்லை யாகலால், அவை யெல்லாவற்றினுங் கண்ணு

ல்லுவா னேனெனனில் மாயாதி யுபாதி வசத்தினாலே சங்கோசமும் சத்வாதிக மானதினாலே விகாசமும் சம்பவிக்கும்.

* சங்குசிதம் - குறைதல், † நூநம் - குறைவு

இதனை-௯௪-வது, செய்யுளாகக் கொண் டுரையிட்டனர்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

சொல்லிய கீழாலவத்தை மேலாலவத்தை யிரண்டினது செய்தி யிசைக்கின்றார்

யோகிற் றருவதோர் சமாதி - சாலம்ப சிவயோக சமாதி,—சன்னம் - அபிநவ புவனேசுர சாரூபம்.

மற்றவை வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

மேற்கூறிப்போந்த சாக்கிரமுதலியவைதாங் கீழ்நோக்கிச் சென்றொடுங்குமுறையும் மேனோக்கித் தோன்றுமுறையும் பற்றி யிருவகைப்படும் அவற்றுள் ஒடுங்குமுறையது கன்மாகசிப்புக் கேதுவாகலாற் கீழ்ச்செலுத்திப் பிறவிக்கு வித்தாம், தோன்றுமுறையது கன்மநுகர்ச்சிக் கேதுவாகலாற் பரம்பரையிற் பிறவியறுதற்குக் காரணமாய் மேற்படும் இனி இதயமுதற் றுவாதசாந்த மீறாகிய தானங்களிற் புறக்கரண முட்கரணங்களைப் பற்றியும் பற்றாதும் பிரத்தியாகாரமுகத் தொகைப்பட்டு நிகழும் யோகாவத்தையும் அதுபோல ஒடுங்கியுந் தோன்றியு மவ்வாறே பயன்றருவதன்றிப் பிறிதன்றென்பதாம்

யோகிற்றருவதோர் சமாதிபுணர்வென்பதும் அனுவாதமுகத்தா னின்றே பெற்றாம்.

தாழ்தல் இழிதல்

சன்னஞ்சாதல் ஏறுதல்

இந்தப் போகாவத்தைகளைப் பத்தானே மீட்சியில்லாதாகிய ஞானாவத்தை போலுமென்கொண்டு மயங்குதவாதற்கு அங்ஙனமயங்காமைப்பொருட்டு இதனை யதனோடொப்பவைத்து நீண்டு கூறினார்

இச்செய்யுளிற்கூறிய மூன்றுபெயரும் முறையே சகலத்திற்கேவலஞ் சகலத்திற்சகலஞ் சகலத்திற் சுத்தமெனப் படுமென்க

இதனான் இருவகைப் பிறப்பறுத்திடுமென்றது தாப்பினையாப்பு அறிந்தருமுதலவத்தை யடைந்தருமிடத்தே யைந்தஞ்செறிந்தருமென வருகின்றதனோடுஞ் சென்றியைந்து பொருட்டுமாதலான் அதற்குமிவ்வாறுரைத்துக் கொள்க

இவ்வுரையாசிரியர் இச்செய்யுள் -௩௫-வது, செய்யுளாகக் கொண்டுரையிட்டனர்

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இப்படி முன்சொல்லப்பட்ட அவத்தைகள் ஒருவகைப்பட்டிருக்குமோ இருவகைப்பட்டிருக்குமோ வென்னில், இரண்டு வகைப்பட்டிருக்குமென்றும் அந்த அவத்தைகளின் முறைமையு மேலருளிச்செய்கிறார்

இருவகைச்சாக்கிராதி யவத்தைக ளியல்புதானும் - இரண்டு வகைப்பட்ட சாக்கிர முதலான அவத்தைகளினுடைய முறைமை யானதுதான் எப்படியென்னில்?—ஒருவகைகீழ்நோக்கி யுறப்பவங்காட்டும் - முன் சொன்ன விரண்டுவகையில் ஒரு

உகைய வத்தை யிவ்வகை கீழ்களில் ஜநநத்தை யுண்டாக்கும் —ஒன்றுபெருக மேனோக்கி தீயபிறப்பறுத்திடும் - ஒருவகை யவத்தை மிகவும் மேலேசெலுத்தி குரத்தை யுடைத்தாகிய ஜநநங்களைப் போக்கும் —யோகிநாருவதோர் சமாதிசாலும் - முன்சொன்ன விரண்டுவகையு மன்றியே சிவயோகத்தி லுண்டாக்கப்பட்ட சமாதி யுடையவர்களுக்கும், —காயத்துபின் சந்தமசாரும் - இந்த ஜநநத்தில் பிறப்பறுத்து பின்பொரு ஜநநமெடுத்து ஆசாரிய கடாக்ஷத்தினாலே பிறவாநெறியாகிய உண்மையைப் பெறுவார்கள்

இத்துறை சொல்லியது கீழாலவத்தை ஜநநத்தை யுண்டாக்குமென்றும் மேலாலவத்தை ஜநநத்தைப் போக்குமென்றும் இவை யிரண்டுமன்றி சிவயோகத்தா லுண்டாக்கப்பட்ட சமாதியுடையவர்களுக்குப் பின்பொரு ஜநநத்திலே சாயுச்சிய முண்டாமென்னு முறைமையு மறிவித்தது

இவ்வுரையாசிரியர்-௩௪-வது, செய்யுளாகக்கொண் டுரையிட்டனர்

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

[illegible] றியவத்தைக ளியல்புதானு மிருவகை - மேற்கூறிப் போந்த சாக்கிரமுதலிய ஐந்து மிகீழ்நோக்கிச் சென்றொடுங்கு முறைமையும் மேனோக்கித் தோன்று முறைமையுமப்பற்றி யிருவகைப்படும், —ஒருவகை கீழ்நோக்கி யுறபவங்காட்டும்-அவற்றுளொன்று ஒடுங்கு முறைமையது கனமாச்சிப்புக் கேது வாகலாற் கீழ்ச்செலுத்திப் பிறவிக்கு வித்தாம —ஒன்று பெருக மேனோக்கித் தீயபிறப்பறுத்திடும்-ஒன்று தோன்று முறைமைகளனமாகாசசிக் கேதுவாகலாற பரமபரையிற் பிறவி யறுத்தற்கும்

*காரணமாய் மேற்படும்,— யோகிற்றருவதோர் சமாதிதானும் தாழ்ந்துபின் சன்மசாரும் - இனி யிதயமுதற் றலாதசாந்த மீறுகிய தானங்களிற் புறக்கரண மூடக்கரணங்களைப் பற்றியும் பற்றாதும் பிரத்தியாகாரமுத லெவணகப்பட்டு நிகழும், போகா வத்தையு மதுபோல வொடுங்கியுந் தோற்றியு மவ்வாறே பயன்றருவதன்றிப் பிறிதன்று*

*இச்செய்யுளிற் கூறிய மூன்று பேதமும், முறையே சகலத்திற் கேவலஞ் சகலத்திற் சகலம், சகலத்திற் சுத்தமெனப்படும்*

*இவை நான்கு செய்யுளானும் மேல் ஐந்தவத்தை யென்ற வற்றின் பொருளும் வகையு மிடமும் அவற்றதியல்பும் இவையென் பதுகூறப்பட்டது.*

*இவ்வுரையாசிரியர் சிவஞானமுனிவருரையைத் தழுவின ராகலின் இத்னை-நூச-வது, செய்யுளாகக் கொண்டனர்*

---

## மறைஞானதேசிகர் உரை.



*மேற் காரணவத்தை யின்று பெயரைத்தொகுத்து*
*வகுத்துணாத்து இன்றா*

கேவல சகலசுத்த மென்றுமூன் றவத்தையான்மா, மேவுவன் கேவலந்தன் றன்மைமெய்ப் பொறிக ளெல்லாங், காவலன் கொடுத்தபோது சகலமு மலங்க ளெல்லா, மோவின போதுசுத்த முடையனாம் பவந் துடைத்தே. (கள)

(இ-ள) *கேவலசகலசுத்த மென்றுமூன் றவத்தை யான்மா மேவுவன் — ஆன்மாவானவன் கேவலமுதலிய மூன் றவத்தையினையும் பொருந்துவன்.*

கேவலத்தன்னுண்மை — ஆன்மா வியாபாரமின்றி மறைப்புண்டு கிடத்தல் அஃதாவது, சங்காரகாலத்திலான்மாவினுடைய விச்சாஞானக் கிரியைகள் விளங்காமல் மலமேலிட்டிருந்து மறைப்புண்டு மைக்குழம்பிலகப்பட்டு விழுந்த மாணிக்கமானது ஒளி நீங்கியிருந்தாற்போல விளங்காதிருக்கை

மெய்ப்பொறி கொள்ளலாங்காலன்னை தொடுத்த போது சகலனும் — சிவனானவன் திருவுளத்தாலே மாயாகாரியமாகிய கலைமுதலிய கருவிகளைத் தோற்றுவித்துக் கருவிகளையானமாக்களுக்குக் கூட்டிக் காரியப்படுத்திய போகங்களைப் புசிப்பிக்கை சகலாவத்தை

மலங்களெல்லாமோவின போது சுத்தமுடையனுறபவந் துடைத்தே — ஆன்மாவானவன் தீக்ஷையினாலே மலங்கள் நீங்கி மேற் ஜநநமெடுப்பதுமின்றி முன் போலச் சுத்தனாயிருக்கை சுத்தாவத்தை யெனப்பெறும் எ-று.

கேவலாதி மூன்றுக்குந் தொகைப்பட உதாரணம். "தற்கேவலமுற்றி தானே தனிமையாம், பிற்பாற் சகலங் கலாதிப் பிறழ்வதாந், தப்பாற்புரிசுத்த கேவலஞ்சாக்கிரத், தப்பாற்புரிய வதிசுத்தமாமே" என்பதிக்

இதற்குச் சுவாயம்புவம். (கூஎ)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.

—o—

மேல் காரணாவஸ்தாத் திரயத்தை யுணர்த்துதல்.

கேவலசகலசுத்த மென்றுமூன்றவத்தை யானமாவேவுவன - ஆன்மாவானவன் கேவலமென்றும் சகலமென்றும் சுத்த

மென்றும் மூன்றவத்தையைப்பொருந்துவன. இவையிற்றுள்;— கேவலந்தன்னுண்மை - கேவலாவஸ்தையானது அநாதி சித்தமாய மோக்ஷபரியந்தம் விட்டுப் பற்றன்றி + யாந்தரபந்த மான வாணவ மலத்தைக் காரணமாயுள்ளது —மெய்ப் பொறிகளெல்லாங் காயலன கொடுத்தபோது சகலரும் - தேகேந்திரியங்களை ஈஸ்வரன் கூட்டினபொழுது கலாதிகளுக்குக் காரணமான மாயையால் வரும் சகலாவத்தை யுடையருவன —மலங்களெல்லா மோவினபோது சுத்தமுடைய ஞறபவந் துடைத்தே - பராசத்தி ஸ்பரிசத்திருலே யாணவமாயை கன்மமென்று மலங்களெல்லா நீங்கினபொழுது சுத்தாவஸ்தை யுடையவரு யகிருல் ஜநந மரணங்களைத் தள்ளப்பட்டவருவனென் றிக்கப்பொருள

இந்த காரணாவஸ்தையாகிய கேவல சகல சுத்தமூன்றுங் காரியாவத்தை பதினைந்து மாகப் பதினெட்டவத்தை யென்றுசித்திதபெடாச சொல்லுவார்கள்; அது அறியாமை சமலாதீதாவஸ்தையே கேவலம் சப்பிரதிபா சாக்கிரா வஸ்தையே சகலம். நின்மலா தீதாவஸ்தையே சுத்தம் ஆகையால் அவஸ்தை பதினெட்டே! இதற்குச் சம்மதி சிவப்பிரகாசம் உண்மை- கஉ-செ "நீக்கமிலதீக மாசு நிறைந்த கேவலமா நீ்ாமை, சாக்கிரங் கலாதிசேர்ந்த சகலமாந்தன்மையாகு, நீக்கமி லிரண்டுங் கூடா தொழியவோர் நிலையினின்று, சாக்கிரவதீதஞ் சுத்தத் தன்மைய தாகுந்தானே"

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

முன்சொல்லிய கீழாலவத்தை மத்தியாலவத்தை மேலாலவத்தைகட்குக் காரணவத்தைகளைத் தொகுத்து வகுத் துரைக்கின்றுர்.

உண்மை - பசுத்தன்மை
மற்றவை வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

ஆன்மா அவ்வாறு நிகழும் காரியவவத்தைகளையுறுதற்குக் காரணமாகக் கேவலஞ் சகலஞ் சுத்தமென மூன்றவத்தையெய்துவன். அவற்றுட் கேவலமாவது தன்னிச்சாஞானக்கிரியைகளின் நிகழ்ச்சி சிறிதுமின்றித் தானமாத்திரையேயுள்ளதாம். பின்பு தனுகரணாதியோடுங்கூடி அவையொருபுடை விளங்குமவத்தாஞ் சகலம். பின்பு பஞ்சமலங்களின் நீங்கிச் சிவத்தோடுகூடி அவ்விச்சாஞானக்கிரியைகளெங்குமாய் வியாபித்து விளங்குமவத்தாஞ் சுத்தமெனப்படுமென்பதாம்.

இதனானே மேற்கூறிப்போந்த அவத்தைகட்குக் காரணமிவையென்பதூஉம் அவற்றதியல்புங் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன் சொல்லிவந்த காரியவவத்தைப் பதினைந்துக்கும் காரணவவத்தை மேலருளிச் செய்கிறார்.

கேவலசகலசுத்தமென்று மூன்றவத்தையான்மா மேவுவன் - கேவலவவத்தையென்றும் சகலவவத்தையென்றும் சுத்தவவத்தையென்றும் ஆக மூன்றவத்தைகளையும் ஆன்மா பொருந்தாநிற்பன். இந்த வவத்தைகளின் முறைமை யெங்ஙனே யெனின்?—கேவலந் தன்னுண்மை - ஆன்மாவினுடைய வுண்

மை கேவலந் தானாய் நிற்கிறது—மெய்ப் பொறிகளெல்லாங் காவலன் கொடுத்தபோது சகலனும்—தநுகரண புவனபோகங் களை ஆன்மாவுக்குப் பரமேசுவரன் கொடுத்தபோது சகலாவத்தையைப் பொருந்தி நிற்பன,—மலங்களெல்லா மோவின போது சுத்தமுடைய னுறப்வந்துடைத்தே - பஞ்சமலங்களுந் தன்னைவிட்டு நீங்கினபோது ஐந்தங்களையும் போக்கி சுத்தாவத்தையும் பெருநிற்பன

இதனாற் சொல்லியது, கேவல சகல சுத்தமென்னு மூன்றவத்தையையும் ஆன்மாப் பொருந்துவன் என்றும் இவையிற்றில் கேவலவவத்தை ஆன்மாவுக் குண்மையென்றும் சகலவவத்தையைப் பரமேசுவரன் கொடுத்தபோது ஆன்மாப்பொருந்துமென்றும் பஞ்சமலங்களும் ஆன்மாவைவிட்டு நீங்கின போது சுத்தவவத்தையைப் பெருநிற்பன் என்னு முறைமையும் அறிவித்தது

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

ஆன்மா கேவல சகல சுத்தமென்று மூன்றவத்தை மேவுவன் - ஆன்மா அவ்வாறு நிகழுங் காரிய அவத்தைகளை யுறுகற்குக் காரணமாகக் கேவலஞ் சகலஞ் சுத்தமென மூன்றவத்தை யெய்துவன்,— கேவலந்தனுண்மை - அவற்றுட் கேவல மாவது தனவிச்சாஞானக் கிரியைகளி னிகழ்ச்சிச் சிறிது மின்றித் தான மாத்திரையே யுளனாதல் —மெய்ப்பொறி களெல்லாங் காவலன் கொடுத்தபோது சகலனும் - பின்பு தனுகரணாதியோடு முதல்வன் கூட்டக் கூடி யவையொடுபுடை விளங்கு மவத்தை சகலம் — மலங்களெல்லா மோவினபோ துறப்வங் கொண்டத்தே சுத்தமுடையன -பின்பு பஞ்சமலங்களு நீங்கிச் சிவத்தோடு கூ

டி யவிச்சாஞானக்கிரியைக ளெங்கும் வியாபித்து விளங்கு மவத்தரம் சுத்தம் எனப்படும்.

இதனானே மேற்கூறிப்போந்த அவத்தைகட்குக் காரண மிவையென்பதூஉம் அவற்றதியல்பும் கூறப்பட்டன.

## மறைஞானதேசிகர் உரை.



மேனிறுத்து முறையானே கேவலாவத்
தையிலக்கண முணர்த்து கின்றார்

அறிவில னமூர்த்தனித்த னராகாதி குணங்களோ
டுறு, செயலிலன் கலாதியோடுஞ் சேர்விலன் செயல்
களில்லான், குறியிலன் கர்த்தாவல்லன் போகத்திற்
கொள்கையில்லான், பிறிவிலன் மலத்தினோடும் வியா
பிகேவலத்திலான்மா (௩௮)

(இ-ள்) அறிவிலன் — தனக்கென வொன்றைச் செய்தற் கறிவில்லாதவன்; அஃதேது காரணத்தாலெனின், மலத்தினாலே மிகவு மறைப்புண்டிருக்கிற சைதன்னியத்தை யுடையனாதலால்.

அமூர்த்தன் — தனக்கொரு வடிவில்லாதவன்; அஃதாவது, கலைமுதலிய கருவிகளால் வடிவற்றவன்.

நித்தன் — எப்போது முள்ளவன்; அஃதாவது, நாசமில்லாதவன்.

அராகாதிகுணங்களோடுஞ் செறிவிலன் — இராகமுதலிய வறுவகைக் குணங்களுடனுங் கூடாதவன்.

கலாதியோடுஞ் சேர்விலன் — கலைமுதலிய தத்துவங்களுடன் பொருந்திய போகம் புசியாதவன்

செயல்களில்லான் — தானாக வொருதொழிலைச் செய்தற்குச் செயலில்லாதவன் அஃதேதுகாரணத்தாலெனில்? ஞானக்கிரியைகள் ஜீவியாதபடியா லெனவறிக

குறியிலன் — தானின்னபடி யிருப்பனென்று நிரூபித்தற் கோரடையாளங்களு மில்லாதவன்.

கர்த்தாவலன் — பிரகிருதி முதலிய தத்துவங்களா லுண்டாகிய போகங்களைத் தானாகவே புசிக்கமாட்டாத படியாலே கருத்தாவல்லன்

போகத்திறங் கொள்கையில்லான் — தானே மலத்தை நீக்கிக்கொண்டு கருவிகளுடன் கூடிய போகங்களைப் புசிக்கமாட்டாதவன்

பிறிவிலன் மலத்திரோடும் — சகசமான வாணவ மலத்துடனே கூடி விட்டு நீங்காதவன்

வியாபி — விபுவாயுள்ளான்

கேவலத்திலானமா — கேவலாவத்தையிலானமாவான இச்சிறப்பினை யுடையவன் எ-று

இது கடைநிலைத் தீபகம்.

உம்மை - எண்.

திருமந்திரம், "அறிவில்லன் மூடத்த னராகாதிசேரான், குறிபொன்றிலாவித்தன் கூடானகலாதி, செறியுஞ்செயலில்லோன் றிண்காத்தாவல்லோன், பிறியின மலன்வியாபி கேவலத்தோனே" எனவறிக (௫அ)

இதற்குச் சுவாயம்புவமுங் கிரணமுமறிக

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சகலாவஸ்தை சுத்தாவஸ்தைகளைப் பிரவேசிக்கும் ‡ விலக்ஷணமாகிய கேவலாவஸ்தை ஸ்வரூபங் கூறுகின்றது.

நித்தன் வியாபியானமா - நித்தியனும் வியாபியும் சித்துருபனுமானவன், — கேவலத்தில் - கேவலாவஸ்தையிலே, — கலாதியோடின்றே சாவிலன் - கலாவித்தியா ராகங்களைப் பொருந்தப்படாதவன் ஆதலால், — ராகாதி குணங்களோடின்றே செறிவிலன் - இச்சாஞானக்கிரியையாகிய ¶ சகசகுணங்களுடைய வியாபாரமில்லாதவன், — அமூர்த்தன் - ஸ்தூலசூக்ஷும தேகமில்லாதவன் அதனால், — குறியிலன் - அடையாளஞ் சொல்லப்படாதவன், — செயல்களில்லான் கர்த்தாவல்லன் போகத்துக் கொள்கையில்லான் - தேகேந்திரியாதிகளில்லாமலிருக்கையால் ஒருகன்மத்தைப் பண்ணவுங் கர்த்தாவல்லன் ஆகையால் போகதாவுமல்லன் இவ்வளவும் சகலாவஸ்தையில் விலக்ஷணம் — பிறிவிலன் மலத்தினோடு மறிவிலன் - ஆணவ மலத்தினை விடப்படாதவனாகையால் ஞானப்பிரகாசமில்லாதவன் ஆசாரியருடைய அநுக்கிரகத்தினாலே ஞானயோக சித்தனாகி ஆணவமலத்தினுடைய தடைநீங்கி சாவஞ்ஞத்துவாதி × ஷாட்குண்ணியாபிவியத்தி சுத்தாவஸ்தையாகையால் கீழ்ச்சொன்னது சுத்தாவஸ்தைக்கு விலக்ஷணம்.

‡ விலக்ஷணம் - வேறு ¶ சகசம் - கூடவுண்டானது × ஷாட்குண்யம் - அறுகுணம்.

—

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——0——

ஆன்மா - மேற்கூறிய போந்த மூன்றவத்தையை யுறுதற்குரி யவான்மா,—அறிவிலன் - அறிவு முன்னில்லாதவனும்,— அமூர்த்தன் - உடம்பு முன்னில்லாதவனும்,—நித்தன்-தோற்றக்கேடு முன்னில்லாதவனும்,—அராகாதி குணங்களோடு செறிவிலன்-புத்தி குணமொட்டிணையு முன்பொருந்தாதவனும்,— கலாதியோடுஞ் சேர்விலன் - கலாதிபறிவோடு முன்சேர்தலில்லாதவனும்,— செயல்களில்லான் - செயல்கள் முன்னில்லாதவனும்,— குறியிலன் இச்சைமுன் னில்லாதவனும்,— கர்த்தாவல்லன் - தனக்கென வொரு சுதந்தர முன் னில்லாதவனும்,— போகத்திற் கொள்கை யில்லான் - போகத்தின் முன் கொள்கை யில்லாதவனும்,— வியாபி - வியாபகத்தை முன்னுவுடையனு மாகிய விபத்துக்காரியங்களு முடையனுய,—மலத்திரோடு பிறிவிலன் - ஆணவ மலத்திரோடு மாத்திரையே கூடிநிற்பன்,— கேவலத்தில் - கேவலத்தின் கண்

இத்தன்மை தானுண்மை கேவலமாதல் கூறப்பட்டது

---

## மறைஞானதேசிகா உரை.

——∞——

மேனிறுத்த முறையானே சகலாவத்தையுணர்த்துகின்றார்

உருவினைக் கொண்டுபோக போக்கியத் துன்னல் செப்பல், வருசெயல் மருவிச்சத்த மாதியாம் விடயந்தன்னிற், புரிவதுஞ் செய்தங் கெல்லா யோனியும் புக்குழன்று, திரிதருஞ் சகலமான வவத்தையிற் சீவனென்றே. (௫௯)

(இ-ள்.) உருவி ஆன்மாவானவன் கன்மானு குணமாகத்

| | |
|---|---|
| தனைக்கொண்டு | சூக்ஷ்மசரீரத்தை யெடுத்துக்கொண்டு |
| போகபோக்கியத்தன்னைச் செப்பல் வருசெயன் மருவி | கலைமுதலிய கருவிகளுடன் கூடி மாயை முதற் பிருதிவி யீறாகவுள்ள தத்துவங்களிற் சுகதுக்க ரூபமாகிய போகங்களைப் புசிக்கிறதிலே விருப்பத்தைச் செலுத்தலையுடைய ஞானக் கன்மத் தொழிற் கர்த்தாவாலே பொருந்தி, |
| சத்தமாதியாம் விடயங்தனனிற் புரிவதுஞ் செய்து | சத்தாதி விடயங்களிலே விருப்பத்தையுஞ் செய்து, |
| அங்கெல்லா யோனியும் புக்குழன்று திரிதரும் | அவ்விடத்துக் கன்மத்துக்கீடாக வெண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதங்களிற் பிறந்துழன்று திரிதலுஞ் செய்து, |
| சகலமான வவத்தையிற் சீவன் னென்றே. | இப்படியே சகலாவத்தையைப் பொருந்தியிருப்பன் எ-று |

இதுகடை நிலைத் தீபகம்

"உருவுற்றுப போக போக்கியத்துற்று, மருவுறாப் பூத மகாதி மானமனைவி,வ நம்மசெயல் பற்றிச் சத்தாதிவைகிக்,கருவுறத் திடுஞ் சீவன் காணுஞ் சகலத்தே" என்வறிக

இச்சூத்திரச் சுவாயம்புவம்

(௩௧)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—※—

மேல் கேவலாவஸ்தை சுத்தாவஸ்தை யிரண்டுக்கும் வில

க்ஷணமான சகலாவஸ்தா * வஸ்திதனுன வான்ம வியாபாரங் கூறுகின்றது

* அவஸ்திதன - இருந்தவன

சகலாவஸ்தை பொருந்தின ஆன்மா ராசஸ்வரனாலே கூட்டப்பட்ட மாயாதேகத்தைத் தரித்துக்கொண்டு போகபோக்கிய காண்டத்தை யுடையனாகிப் போகத்தை யிச்சிக்கவும் புசிக்கவும் வசநாதிக் கிரியைகளை முண்டாயச் சத்தாதி விஷயங்களையும் பொருந்திப் புண்ணிய பாவங்களையுஞ் செய்து அதனாலெண்பத்து நான்குநூறாயிர மியோனி பேதங்களினும் பிறந்திறந்து திரிவனென்ற நிதலபொருள

சகலாவஸ்தை, நித்திய சகலமென்றும் மகாசகலமென்றும் † தவிவிதம

† தவிவிதம - இருவிதம்

இதில் மகாசகல லக்ஷண மிப்பொழுது கூறியது

கீழ் சப்பிரதிபா சாக்கிரமென்றது நித்தியசகல லக்ஷணம்

இந்த லான்மா பசுத்துவ சம்பந்தத்தினாலே பசுவென்று பெயராய ஞானிக ளறிந்து கலாதியோகத்தினாலே கிஞ்சித ஞானப்பிரகாச முண்டானதனால் சேதனனென்று பெயரு மாய பிராண வாயுவுடனே கூடியிருக்கையால் ஜீவனென்று பெயருமாய த்விகமாயிருக்கிற புண்ணிய பாபங்களுக்குக் ‡ கா த்தாவு மதன பலங்களைப் புசிக்கிறவனும் புசிக்கிற காலத்திலே தனக்கு வேண்டாததை விடவும் வேண்டியதைக் கிரகிக்கவும் இச்சையை யுடையவனும் ராகத்வேஷாதிகளை யுடையவனுந் தனக்கு § போகார்த்தமாகத் தேடின வஸ்துவை யத்தனத்தினாலே ரக்ஷிக்கிறவனுந் தேகேந்திரியாதிகளைத் தானென் றபிமானம்பண்ணு மவனும் காத்தவய சருதபங்களிலே சோமபுத்திப் பணு மவனாய், அதனாலே பண்ணினேமில்லையென்கிற துக்கத்

தையுடையவனு ¶ மருளையுடையவனும் முலகன விததியாதிக ளினாலே தனககுச சரியிலலையெனறு மபிமானியுஞ சிறிது காரியததைச சோமபுதலாறறுச செயகிறவனும பிராணாதி வாயுககளைப பிரவாததியபிககிறவனும பிரததியக்ஷாரததஙகளை யறிகிறவனும தததத தாததஙகளைக கேடகிறவனும கூடடபபடிககிறவனும கூடிபபடிககிறவானோடே கேடடுத தரிககாடடாதிருகதால + லசசிககிறவனும — ஹாசயரசததிலே பிரிடனும × நயனோனமீலனாதிக கிரியைகளைப பணணுமவனும, சாஸதிராதிகளை விசாரிககிறவனும சநதோஷிககிறவனும, பாணை யறிவிகக இசசையுடையவனும, புததிர தாராதிகளிடஙகளிலே மோகிககிறவனும வசவிககிறவனும கநததைக கிரகிககிறவனும ○ அநுசநதானம பணணுகிறவனும ஒருவிஷயஙகளிலே தனமயததை யடைகிறவனும போக வஸதுககளைத தேடுகிறவனும இவை முதலான அநேக பாவஙகளை யுடையவனாவன

‡ சாதகா - செய்யவேண்டிய, § போகாரததம் - போகிமிதததம, ¶ அருளை-பொருளை, + லசசிககிறவன-வெடகமுளளவன, — ஆசயரசம - ஹாசசரியாசம், × நயனோனமீலனம - கணவிழிததல, ○ அநுசநதானம - தியானம

இதறகுசசமமதி —

𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌂 𑌕𑌾𑌮𑌿𑌕𑍇 — 𑌤𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑌶𑍁𑌪𑌾𑌶𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤
𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍇 𑌜𑍀𑌵𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑌃 । 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 𑌕
𑌰𑍍𑌤𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌯 𑌚 ॥ 𑌤𑌦𑍍𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌨𑌨𑍍𑌦𑌿𑌹𑌾
𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍂𑌲𑍇𑌷𑍁 𑌜𑌿𑌹𑍍𑌮𑌾𑌸𑌕𑍍𑌤𑌿 । 𑌶𑍁𑌦𑍍𑌧𑍇 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌨𑌕𑌾𑌰𑍁
𑌣𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌤𑍇𑌷𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑌕𑍍𑌷𑌤𑌿 ॥ 𑌸𑍁𑌖𑌂 𑌕𑌰𑍋𑌤𑌿
𑌦𑍇𑌹𑌾𑌦𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌚𑍍𑌛𑌾𑌦𑌯𑌤𑌿 । 𑌸𑌹𑍍𑌯𑌸𑌙𑍍𑌗𑌯𑌤𑌿
𑌲𑍋𑌕𑌾𑌙𑍍𑌗𑍇𑌤𑌾 𑌨𑌿𑌧𑌨𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 ॥ 𑌤𑌥𑍈𑌵 𑌪𑍍𑌰𑌤𑌿

ஸம்ப்ருக்தே ப்ராணாதிஸம்வீக்ஷிதே | ப்ரஸ்ரோணாத்தி
ஷ்ஜ்ஞாதே ப்ரஸ்க்தமாஸ்த்வத்ஸ்தேமயத்வவி || விஹாரயந்தி
ஸம்ஸ்வாத்தி ஜ்வஸ்த்வவி விஜ்ஞானாத்தி | வக்தி ஜீவந்தி ஸ
ந்யேத்தே ஸ்ரீயஸ்தேவிவ ஜாமமதே || ஸாமெவெஸெந்தெகெ
ஸாஹேஞா நிஹஜாநிவ ஸஞ்சேஸக |

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சகலாவத்தையி லான்மாவி னிலக்கணஞ் சாற்றுகின்
றார்

புரிவதுஞ்செய்து - விருப்புவதுஞ்செய்து

மற்றவை வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற்கூறியவினைகளைப் பத்துக்கும் மறுதலையாகிய விப் பத்துக்காரியமு முடையனாய்ச் சீவித்துநிற்பது சகலமென்பதாம்

போககாரணமாகிய கலாதியைப் போகமென்றும், போக்கிய காரணமாகிய புத்தியாதியைப் போக்கியமென்றுங் கூறினார்.

உன்னலென்றது எண்ணுதல் விருப்புதன்மேற்று

செப்பலென்றது செப்பப்படுவனவாய நால்வகை வாக்குக்களையு முணர்த்தி அவை காரணமாய் நிகழுமாற்றின்மேல் ஆகுபெயராய் நின்றது

புரிவதென்ற உம்மையால் நுகர்வதுமென்ற தெஞ்சிநின்றது.

உருவினைக்கோடல் அமூர்த்தனாதற்கும், போகபோக்கியத்துச் செறிதல் கலாதியோடுஞ் சேர்விலன் அராகாதிகுணங்களோடுஞ் செறிவிலனாதற்கு, உன்னல் செப்பல் வருசெயன்மருவல் அறிவின் செயல்களில்லான குறிப்பிலனாதற்கும், சத்தமாதியாம் விடயந்தனிற் புரிவதுஞ்செய்தல் கருத்தாவல்லனாதற்கும், உம்மையாற்போந்த நுகர்வதுஞ்செய்தல் போகத்திற் கொள்கையில்லனாதற்கும், எல்லாயோனியும் புக்குழலுதல் நித்தனாதற்கும், சென்றுதிரிதல் வியாபியாதற்கும் மறுதலையாயவாறு கண்டுகொள்க.

இசனாமே யெப்பொறிகளோவலாங் காவலன் கொடுத்தபோது சகலனாதல் வகுத்ததுங் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் சகலவவத்தையை யருளிச்செய்கிறார்.

உருவினைக்கொண்டு - கன்மத்துக் கீடாக வொவ்வொரு சரீரங்களை யெடுத்துக்கொண்டு,— போகபோக்கியத் துன்னல் செப்பல்-புசிப்புக்குத்தக்க பொருள்களை நினைப்பதுஞ் சொல்லுவதுமாய்,—வருசெயன்மருவி-மனதாலும் வாக்காலும் வருகிற வயிற்றைக் காயத்தாலே தொழிற்படுத்துவதுமாய்,— சத்தமாதியாம் விடயந்தனிற் புரிவதுஞ்செய்து-சத்தமுதலான விடயங்களிலுண்டான சுகதுக்கங்களையும் அனுபவித்து,—அங்கெல்லாயோனியும் புக்குழன்றுதிரிகுவன்-அவ்விடத்து எண்பத்தினான்கு நூறாயிரம் யோனிகளிலும் கன்மத்துக்

டோகப் பிறந்து உழன்று திரிபாநிற்பன,— சகலமான வவத்தையிற் சீவனென்றே - சகலமாகிய அவத்தையிலே ஆன்மாப் பொருந்தி இப்படி நிற்பன.

இதனாற் சொல்லியது, கன்மத்துக்கீடாக வொருசரீரத்தைக்கொண்டு புசிப்புக்குத்தக்க மனவாக்குக் காயங்களினாலுண்டாகிய நினைவையு முரையையுந் தொழிலையும் பொருந்திச் சத்தாதி விஷயங்களி லுண்டாகிய சுகதுக்கங்களையும் புசித்து எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிகடோறும் வட்டஞ்சுற்றித் திரியுஞ் சகலாவத்தையைப் பொருந்தின வான்மாவென்னு முறைமையறிவித்தது.

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

———o———

சீவன் - மேற்கூறிப்போந்த கேவலத்தைப் பொருந்திய ஆன்மா,— உன்னல்செப்பல் - அறிவில்லாததற்கும் மறுதலையாய விரும்பிக் கூறுதற் கேதுவாகிய நால்வகை வாக்குகளால் நிகழு மறிவினையும்,— உருவினைக்கொண்டு - அரூபத்தற்கு மறுதலையாகிய வுருவினைக்கோடலும்,— இவ்வெல்லா யோனியும் புக்கு உழன்று - இவ்விடத்தி னின்றதற்கு மறுதலையாகிய தோற்றக் கேடுகளிற் பட்டுழன்றும்,— போக்கியத்து - அராகாதிகுணங்களோடுஞ் செறிவில்லாததற்கு மறுதலையாகிய போக்கியகாண்ட மாகிய கலாதியைச் சேர்தலும்,— வருசெயல் - செயல்களில்லாததற்கு மறுதலையாகிய தொழில்களுடைத்தாதலும்,— மருவிச்சை - இச்சையில்லாததற்கு மறுதலையாகிய விச்சையுடைத்தாதலும்,— சத்தமாதியாம் விடயந்தன்னிற் புரிவதுஞ்செய்து - கர்த்தா வல்லாததற்கு மறுதலையாகிய சத்தாதி விடயங்களின் மேற்கொண்டு செய்தலும்,— புரிவதுமென்ற வும்மையால் நுகர்வதுஞ் செய்து,— போக போகத்திற் கொள்கையில்லாததற்கு மறுதலை

யாகிய போசனுகாந்தம்,—சென்று திரிகரும் சகலமான வவத்தையில்- வியாபியாதற்கு மறுதலையாகிய வேகதேசியாதலுமாகிய வியப்பத்துக்காரிய முடையனாய் ஜீவித்து நிற்பது சகலாவத்தை யென்பதாம்

இங்ஙனே மெய்ப்பொறிக ளெல்லாங் காவலன் கொடுத்தபோது சகலனுக்கு வருதாகக் கூறப்பட்டது

*இவ்வுரையாசிரியர் இதுபோன்ற விடங்களில் பகவுரைகள் சிவஞானயோகியார் மொழிப்புக்கிணங்கச் செய்வதிலுள்ள அருமையும் புத்திநுணுக்கத்தையும் கண்டுகொள்க

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலிருந்த முறையானே சுத்தாவத்தை யுணர்த்துகின்றார்

இருவினைச் செயல்களொப்பில் ஈசன்றன் சத்தி
தோயந்து, குருவருள் பெற்றுஞான யோகத்தைக் கு
றுகிமுன்னைத், திருமலமறுத்துப் பண்டைச் சிறப்பி
லொழிந்தஞானம், பெருகிநா யகன்றன்பாதம் பெறு
வது சுத்தமாமே (௬0)

(இ-ள்) இருவினைச் செயல்களொப்பில் — புண்ணிய பாவமாகிய விரண்டுந் தம்மி லொருகாலத்திற் றலைபொத்த வவசரத்தி லதனைப் புசிக்க வொட்டாம லதனைத் தடுக்கும்

ஈசன்றன் சத்தி தோயந்து — சிவனுடைய சத்திபதிந்த நால்வகையி னுள்ளந் தீவிரசத்தியான சிவனிடத்திற பதியும்பொழுது.

குருவருள் பெற்று — ஞானாசாரியனாலே தீக்கையைப் பெற்று

ஞான யோக — சிவப்பிரகாசமாகிய ஞான போகத்தை
த்தைக்குறுகி — ப் பொருந்தி "மலத்தினு மனாதிமுத்தனை யுமுணர்ந் துணர்தல் ஞானம், முலப்பிலா வவனை வேறற் றுறைதலை யுணர்தல் யோகம்" எனவறிக

முனைந்த திரி — தீபம்வந்தா லந்தகாரம் போமாறு போ
மலம் மறுத்து — ல இந்தஞான போகத்தைப் பொருந்தின தபோபலத்தா லிவனுக்குப் பழையதாய் வரப்பட்டு நின்ற மும்மலமும் போய்,

பண்டைச்சிற — இவனுக்குப் பழையதாய் வரப்பட்டு நிற்
றறிவொழிந்து — கிற கிஞ்சிஞ்ஞபத்துவத்தை விட்டு,

ஞானம் பெரு — சிவனைப் போலச் சர்வஞ்ஞத்துவாதி
கி — குணங்களைப் பொருந்தி,

நாயகன் றன — சிவனுடைய சீபாத கமலங்களை யடை
பாதம் பெறுவ — ந்திருப்பது சுத்தாவத்தை. எ-று

து சுத்தமாமே

"இருவினையொப்பி லொழிந்த சத்திபதி யாதோவெனில் சத்திபதியுங் கமோமலபாகமுற்றினை யொத்த வினையில லார்க்கணுனும்" எனப்பதனுன், மல பரிபாகமே சத்தி நிபாதத்துக்கு முத்தகாரண மெனவறிக

"இருவினை நேரொப்பின்னாடு சத்தி, குருவென வந்து குணமலநீக்கித், தருமரன் ஞானத்தா றனசெயலற்றுத், திரிமலநீங்கிச் சிவமாதல் சுத்தமே" எனவறிக

இதற்குக் கிரணுகமங் காரணம் (௯௦)

---

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சுத்தாவஸ்தை யுணர்த்துதல்.

புண்ணிய பாபங்களுடைய பலமானது இரண்டு ஏககா

லத்திலே ஸ்வர்க்கத்திலும் நரகத்திலும் புசிக்கவுஞ் *சேஷமாயுள்ள சாவகாசம் பக்குவமும் மலபரிபாகமு மானபொழுது பரமேஸ்வரனுடைய திரோதான சத்தியானது மலங்களைச் செலுத்திவந்தது ஏககாலத்தில் சமமாகவந்த விரோதியாகிய பந்தத்தைப் புசிப்பிக்கப்படா தாகையால் திரோதானத்தை யொழிந்து கிருபையாக ஆன்மாவினிடத்திலே பொருந்த, அக்காலத்தில கிருபையினாலே சிவஞானாசாரியமூர்த்தமாக வெழுந்தருளிப் பஞ்சகலா சோதனைப்பண்ணி ஞானபோகத்தைக் கூட்ட, அந்த ஞானயோகத்தினாலே யநாதியே பொருந்தியிருந்த வாணவமாயை கன்மமென்னு மலத்திரயத்தையு மொழித்து அந்த மலங்களினாற் பொருந்தின கிஞ்சிஞ்ஞத்தையு மேகதேசத்துவத்தையு மொழிந்து சர்வஞ்ஞத்துவாதிகளடைய, ஆன்ம நாயகனாகிய சிவனுடனே யிரண்டறச் சிவானுபவியாக நிற்பது சுத்தாவஸ்தை

* சேஷம் - மீதி

இந்த சுத்தாவஸ்தையானது ஜீவன்முத்தி பரமமுத்தி பேதத்தினாலே யிருவகைத்தாம்

இவ்விடத்துச் சொன்னது பரமமுத்தி சுத்தாவஸ்தை

ஜீவன்முத்தி சுத்தாவஸ்தை, 'தன்னிய சாக்கிரமதனிற் றுரியாதீதம்' என்ற பதத்திலே கூறுவாமென்றறிக பொருள்

இருவினைச் செயல்களொப்பிலென்றதற்குச் சிலசாஸ்திரங்களிலே † பிரமஹத்தியா மகாபாதக பலமும் அஸ்வமேத மகா ‡ கிரது பலமும் ஏககாலத்திலே § துல்ய பலமாகப் பக்குவமானபொழுது சத்திநிபாதமென்று சொல்லியிருக்க இவ்விடத்து விருத்த கன்ம துல்ய ¶ சாமியமும் சாவகாசம், பக்குவமும் ஆணவமல பரிபாகமுமானபொழுது சத்திநிபாத மென்று கூறியதென்னையோ வெனின்? உள்ளது.

† பிரமஹத்தியா-பிரமஅத்திதோஷம், ‡ கிரது - யாகம், § துல்ய - சரியான, ¶ சாம்ய - ஒப்பு

கன்மமானது *திருஷ்ட ஜன்ம †போக்யமென்றும், ‡ அதிருஷ்ட ஜன்ம போக்யமென்றும் §நியதகால போக்யமென்றும் மூன்று விதமாம்

* திருஷ்ட - காணப்பட்டது, †போக்யம்-புசிக்கத்தக்கது, ‡ அதிருஷ்டம் - காணப்படாதது, § நியதகாலம்- ஏற்படுத்தியகாலம்

இவையிற்றுள் திருஷ்டஜன்ம போக்கியமாவது? அந்த ஜன்மத்திலே பலிக்கும் * ஆயுர்விர்த்திகரமான ஔஷதி ஓம புத்ர காமேஷ்டியாதிகள்

* ஆயுர்விர்த்திகரம் - ஆயுளை வளர்க்கிறது.

அதிருஷ்ட ஜன்மபோக்கியமாவது? தேகாந்தத்திலே ஸ்வர்க்கத்திலேயாதல் நரகத்திலேயாதல் புநர் ஜன்மத்திலேயாதல் பலிப்பது

நியதகால போக்யமாவது? மஹா புண்ணியங்களுக்குள்ளே பிரதானமானது அஸ்வமேதம், மகாபாதகங்களுக்குள்ளே பிரதானமானது பிரமஹத்தி. நின்ற கன்மமெல்லாம் நியதகால போக்யமல்லவோவெனின்? ஒக்கும் அஸ்வமேத † த்விஜவதம் பரிபாகமல்லா காலத்திலே ‡ இதரகன்ம பரிபாகமானால் அந்த கன்மபலத்தையே புசிப்பிக்கும் இவைகள் பரிபாகமான காலத்திலே இதரபுண்ணிய பாவங்கள் பரிபாகமாகில் பலா § திக்யத்தினாலே இதரபுண்ணிய பாவங்களைத் தள்ளித் தன்னுடைய பலத்தையே புசிப்பிக்கும், ஆதலால் இவைகளே நியதகால போக்யம்.

† த்விஜவதம் - பிரமஹத்தி, ‡ இதர-வேறு, § ஆதிக்யம் - மிகுதி.

இந்தப் புண்ணிய பாபங்களுடைய பலம் மிக்க புண்ணிய பாபபோக காலா * நந்தரம் புசிப்பிக்கும். அந்த விரண்டி னுள்ளே யொன்று நூறுபலமும் ஒன்று பத்துப்பலமுமாகில் பத்துப் பலத்தைத் தள்ளிப் பிரபலம் புசிப்பிக்கும். இரண்டுஞ் சமபலமே யாகில் புண்ணியத்துக்குப் புண்ணியமாகுதல் பாபத்துக்குப் பாபமாகுதல் அந்தக்காலத்திலே பக்குவமாயிருந்தால் சகாயப லத்தினாலே அசகாயத்தைத் தள்ளித் தன்னுடைய பலத்தைப் புசிப்பிக்கும். இரண்டுஞ் சமபலமாய்ச் சமகாலமுமாகில் இந்தக் கன்மங்கள் பரிபாக மாகாதிருந்தால் இந்த விரண்டு கன்மங் களும் † சுந்தோப சுந்தந்நியாயமாக நசிக்க இந்தக் கன்மபல ங்கள் கிரமத்திலே புசிக்கப்படும். சர்வகன்மங்களு மேககால த்திலே பரிபாகமாகில் ஆணவமல பக்குவ பரிபாக மாகாமலிரு ந்தால் சர்வ கன்மங்களும் நசிக்க விஞ்ஞான கேவலருவர். ஆணவமலமும் பக்குவமாகில் சத்திபதியும்.

* அநந்தரம் - பின்பு, † சுந்தன் உபசுந்தன் - இரண்டசு ரர்கள், இவர்களின் நாசம் பாரதக்கதையா லுணர்ந்து கொள்க.

அசுவமேதத் த்விஜவதமென்றது ஸ்வர்க்கநரக ஏதுவாய * அந்யோந்ய விருத்தமுமாய சமபலமுமாயிருக்கிற † ஆமுஷ்மிக புண்ணிய பாபங்களுக்கு ‡ உபலக்ஷணம். * ஐஹிகத்தி லுள்ள † நபும்சகராகிறதுக்கு ஏதுவான பாபமும் புருஷராகி றதுக்கு ஏதுவான புண்ணியமும் அந்யோந்யவிருத்தம். இவ் வாறெல்லாங் கண்டுகொள்க.

* அந்யோந்ய - ஒன்றுக்கொன்று, † ஆமுஷ்மிகம் - மறு மை, ‡ உபலக்ஷணம் - ஞாபகம் * ஐஹிகம் - இம்மை, † நபு ம்சகன் - அலி

[illegible]
[illegible]

னும், சுத்தாவத்தை யென்றும், காரணாவத்தை மூன்றுபிர காரமாம் அந்த மூன்றினுள்,

சகலாவத்தையிற் றத்துவ தாத்துவிகங்களை மேல்விடுத்தல் முறைமையிற் கேவலாவத்தையைக் கீழ்த்தீண்டி முறைமையிற்செல்வது கீழாலவத்தை

கேவலாவத்தையைக் கீழ்விடுதல் முறைமையிற் சகலாவத்தையை மேற்றீண்டி முறைமையிற் செல்வது மேலாலவத்தை

கேவலாவத்தை சகலாவத்தை யிரண்டையுந் தீண்டி மத்தியமாயிருப்பது மத்தியாலவத்தை

கேவலாவத்தையைத் தீண்டாது சகலாவத்தை மாத்திரத்தைத் தீண்டி நிற்பது பிரேரகாவத்தை.

கேவலாவத்தை சகலாவத்தைக ளிரண்டையுங் கீழ்முறைமையில் விட்டுச் சுத்தாவத்தையை மேன்முறைமையிற் றீண்டி மூச் சிவத்துவாபிவியத்தி முறைமையிலுண்டாம் பொருட்டு, இருதயத்தினின்றும் புருவமத்தியந்நுனி மட்டில், கண்டத்தினின்றும் பிரமரந்திர நுனிமட்டில் புருவமத்தியத்தினின்றும் துவாதசாந்த நுனிமட்டிலோரோட்டாக இதயத்தினின்றும் துவாதசாந்த நுனிமட்டாகற்றான், இவைகளிற்போயத் தகுவது நின்மலாவத்தையென்ற பேர்பெற்ற மேலாலவத்தை

இப்படிக் காரணாவத்தை மூன்றும் காரியாவத்தை யைந்துங்கூட்டி எட்டுப்பிரகாரமாம்

எட்டினுள் முறைமையிற் கேவலாவத்தாலக்கணங் காணப்பாய —

விஞ்ஞான கைவல்லியத்திற்றான், பிரளய கைவல்லியத்திற்றான், நித்திய நித்திரா கைவல்லியத்திற்றான், சிவதத்துவத் தானமாயிருக்கும் பிரணவபஞ்ச கலாவிரப்பூக வதிகுஞ்சமை முதலிய ஐந்து வாயுக்கொடு கலை முதற் பிருதிவி முடிவாகி

ய முப்பது கலைகள் மாயை மகாமாயையி லொடுங்கித்தான, தொழிலற்றிருக்கத்தான, மலகலுஷிதஞ்செய்த்தான, மலகன்ம கலுஷிதஞ்செய்தான, நித்திரா முத்திரித் தத்துவதாத்துவிக மலகன்மமோக கலுஷிதஞ்செய்தான, சும்மாவிருத்தல்

சகலாவத்தா லக்ஷணங் காண்பிப்பாம் —

திரும்பச் சுத்தா சுத்தகலைகள் கூட்டச் சுத்த பேதத் முத்தஞ்யும் அசுத்த பேதத்ஞ்யும், சுத்தமாயா புவனங்களிலேயும் அசுத்த மாயா புவனங்களிலேயும் போகத்தைப் புசித்திருத்தல் நித்திய பெத்த மத்திய நித்திரா கேவல நீங்கஅப்போ தப்போத போகத்தைப் புசித்திருத்தலுமாம்

சுத்தாவத்தா லக்கணம் காண்பிப்பாம் —

சுத்தசகலத்தத்துவ மென்று முன்சொல்லிய அபர முத்தியும் பரமுத்தியும், அந்த விரு முத்தியின்பொருட் போசனையுமாம்.

கீழாலவத்தா லக்கணங் காண்பிப்பாம் —

நித்திய நித்திராகேவலப்பட்டு முறைமையிற் பூதங்களைந்தும் தன்மாத்திரை ஐந்தும் சீவியாதிருப்ப, தூலசரீர சம்பந்தத்தாத்துவிகமாயிருக்கும் வாயுக்கள் பத்தும், சூக்கும சரீர சம்பந்தத்தத்துவமாயிருக்கும் வாக்காதி கன்மேந்திரியங்களைந்தும், கிரியா சத்தியோடு கூடிய கன்மேந்திரிய தாத்துவிகக் கிரியையென்கின்ற வசனாதி யைந்தும், சூக்கும சரீர சம்பந்தத் தத்துவ மென்கின்ற ஞானேந்திரிய மைந்தும், ஞானசத்தியோடு கூடிய ஞானேந்திரிய தாத்துவிக ஞானத்துக்கு விஷயமாகிய தாத்துவிக சத்தாதியைந்தும், தத்துவமென்கின்ற அந்தக்கரணங்களும், புருடதத்துவ மொன்றும், ஆக முப்பத்தைந்தும் கேளாமற் கேட்டுத் தொடாதுதொட்டுப் பாராமற் பார்த்து ரசியாது ரசித்து மணவாது மணந்து இலாடத்திற் சீவித்து நின்றல் கீழாலவத்தையிற் சாக்கிரம்.

இந்திரியம் பத்துஞ் சீவியாதிருப்ப, வாயுப்பத்தும், வசனாதியைந்தும், சத்தாதியைந்தும், மனமுதலந்தக்கரண நாலும், புருடதத்துவமொன்றும் ஆக இருபத்தைந்தும் நித்திரா மயக்கத்திலே அது வென்பதை இதுவென்று ஆபாசமாயறிந்து கண்டத்திற் சீவித்து நிற்றல் கீழாலவத்தையிற் சொப்பனம்

வாயுவொன்பதும், வசனாதியைந்தும், சத்தாதியைந்தும், மனமுதலந்தக்கரண மூன்றும், சீவியாதிருப்ப; பிராணவாயுவு மனோவஸ்தா விசேஷ சித்தமும், புருஷதத்துவமுமாக மூன்று மினிமேல்வருஞ் சாக்கிரத்தில் வசனிக்கப்படாத வஸ்து சிந்தனத்தைப் பண்ணி, இருதயத்திற் சீவித்து நிற்றல் கீழாலவத்தையிற் சுழுத்தி.

சித்தஞ் சீவியாதிருப்ப, பிராணவாயு புருடதத்துவ மாகவிரண்டுஞ் சரீரக் காப்புச் சூக்கும சிந்தனங்காணப்பித்து நாபியிற் சீவித்து நிற்றல் கீழாலவத்தையிற் றுரியம்

பிராணவாயுஞ் சீவியாதிருப்பப் புருடதத்துவமொன்றும் இனிமேல்வரும் சாக்கிரத்திற் சுகமாய நானித்திரை பண்ணினே னென்பதற்குச் சூசிக்கப்பட்டு அந்தர சரீர தமோ மாத்திரத்தை விஷயீகரித்து மௌட்டியத்துள் மூழ்கி வேதனத்தையொழிந் தொழியாமலிருக்கும் சிவதத்துவ காப்பனாத மணங்கலாதிகலுஷிதமாய்ப் பண்ணி லிங்கத்திற் சீவித்து நிற்றல் கீழாலவத்தையிற் றுரியாதீதம்

மேலாலவத்தா லக்கணங் காண்பிப்பாம் —

கலாதி பஞ்சகஞ்சுக புருஷன் பிரணவ கலைகளைந்தினு— போதமூல வதிசூக்குமைக்குக் காரணமாகிய சிவதத்துவ மென்கின்ற நாதத்தோடுகூடி லிங்கத்தில் மலத்தோடு மணந்து சீவியா நிற்றல் மேலா லவத்தையிற் றுரியாதீதம்.

நிருவிகற்ப ஞானமூல சூக்குமைக்குக் காரணமாகிய சுத்தத்துவமென்கின்ற விந்துவோடு கூடி நாபியில் மாயையோடு மணந்து சீவியா நிற்றல் மேலாலவத்தையிற் றுரியம்.

சவிகற்ப ஞானமாதலுக்கு யத்தனமாகா நிற்கும் நிருவிகற்ப ஞானமூல பைசந்திக்குக் காரணமாகிய சதாசிவதத்துவமென்கின்ற மகாரத்தோடு கூடி இருதயத்திற் சித்சமூலப் பிரகிருதியோடு மணந்து சீவியா நிற்றல் மேலாலவத்தையிற் சுழுத்தி

சவிகற்ப ஞானமூல மத்திமைக்குக் காரணமாகிய விசுத்தத்துவமென்கின்ற வுகாரத்தோடு கூடிக் கண்டத்தில் அந்தக்கரணத்தோடு மணந்து சீவியா நிற்றல் மேலாலவத்தையிற் சொப்பனம்

பிறனுடைய செவிக்குட் போய்ச் சொல்லிய முறைமையில் விகற்ப ஞானத்தை யுண்டாக்கும் வைகரி வாக்குக் காரணமாகிய சுத்த வித்தியா தத்துவமென்கின்ற அகாரத்தோடு கூடி லலாடத் தானத்திற் புறக்கரணத்தோடு மணந்து சீவியா நிற்றல் மேலாலவத்தையிற் சாக்கிரம்

மத்தியாலவத்தா லக்கணங் காண்பாம் —

முன் கண்ட புருஷனைத் தூரத்திற் கண்டு நாமசாதிகளினது மறதி மத்தியாலவத்தையிற் சாக்கிராதீதம்

பெருமூச்செறிந்து விசாரித் தறிவோமென்பது மத்தியாலவத்தையிற் சாக்கிர துரியம்.

முன்கண்ட விடமாத்திரந் தோற்றுதல் மத்தியாலவத்தையிற் சாக்கிர சுழுத்தி.

முன்னவிடத்திற் கண்ட புருஷனிவனென்பது மத்தியாலவத்தையிற் சாக்கிர சொப்பனம்.

சந்தோஷத்தோடு பார்த்துக் கட்டிக்கொள்ளுதல் மந்தியாலவத்தையிற் சாக்கிர சாக்கிரம்

பிரேரகாவத்தா லக்கணங் காண்பிப்பாம் —

பிரணவ பஞ்சகலா ரூபமா யிருக்கிற திருக்கின்ற சிவதத்துவமைந்தும் கலைமுதல் வித்தியா தத்துவ மேழும், ஆன்மதத்துவத்துக்குள் அந்தக்கரண நாலும், புறக்கரண மைந்தினுரூபாதிக குசிதமா யிருக்கின்ற வொன்றும், தன்மாத்திரைகளொ டொற்றுமை யுடைமையா யிருக்கும் பூதங்க ளைந்தினுள் நேத்திராதிக குசிதமா யிருக்கின்ற வொன்றும், ஆகப் பதினெட்டுத் தத்துவமுஞ் சீவியா நிற்பது பிரேரகாவத்தை

அந்தப் பிரேரகா வத்தையிற் றத்துவங் களின் ஞெழின முறைமை மானதப் பிரத்தியக்ஷப் பிரசங்கத்திலே காண்பித்தோம், கண்டு கொள்க.

அந்தப் பிரேரகா வத்தையில் ஒரு பொருளைக் கண்டது சாக்கிரம்

நிச்சயித்தது சொப்பனம்

கலந்தது சுழுத்தி

அதிலாவேசந் துரியம்

அதி லவசம் துரியாதீதம்

நின்மலாவத்தையென்கின்ற மேலா லவத்தை யிலக்கணங் காண்பிப்பாம் —

அது வெகுபிரகாரமாயிருக்கும், அதிலொரு பிரகாரங் காண்பிப்பாம்

புறக்கரண முட்கரணங்களோடு கூடத் தன்னைக் காண்பது சாக்கிரம்

புறக்கரணம் நீங்கி யுட்கரண விர்த்தி மாத்திரத்தோடு தன்னைக் காண்பது சொப்பனம்.

உட்கரணம் நீங்கிச் சொல்லுதற் கரிதாயு மறிதற் கரிதாயுந தனனைக காணபது சுழுததி.

சினமாததிரமாய்த தனனைக் காணபது துரியம.

சிவனுககொபபச சிவததுவாபிவியததி மாருகத தனனைக் காணபது துரியாதீதம

இருமப அதிலொருப பிரகாரங காணபிபபாம் —

பிணடதது மணடததும உளளுமபுறமபும அபரநாதம அபரவிநது, பரநாதம, பரவிநது ரூபமாயச சதகாாததமாயிருககினற சிவகததுவமுதற சுததவிததையீறுகுஞ சிவதததுவ பஞசக ரூபியாகும பிராசாத சோடசககலைகளைப பறறி வருவ தோர அவததை ஞானசிததியிற சொல்லபபடடது

மூலாதாரததைத தொடடு இருதயததிற பிராசாத மநதிரததின துறபததி சாககிரம

கணட முதற்றுனம பறறிச சமனுநதமாகச சினமாததிரனமா மணபப மநதிரம் நடபபது சொபபனம.

உனமனு ரூபமாய் மநதிர மகாமாயையி லயிததல் சுழுததி

உனமனுசூனியம் துரியம்

உனமனுமூல சுழுததித தானததுச சினமாததி ரானமாவாகிய ஆனமதததுவ மாயிருநது உனமநியநதக துரியதகானததுப பரமெனகினற பரமானமாவாகிய விததியா தததுவமாயிருநது சிவததுவாபி வியததிபொருநதிச சிவமெனகினற சிவானமாவாகியசிவதததுவமாயமாநதிரீகனாயிருத்தல் துரியாதீதம்

இருமப அதிலொரு பிரகாரங காணபிமபாம —

பிராசாத கலைகள்போல முனசொனன பிரகாரம சிவதத்துப் பஞசக ரூபியாய்ப் பிராசாதகலா கர்ப்பங்களாயிருக்கினற அகராதி நாதாநத பிரணவ பஞ்ச கலைகளைத்தொட் டிருதயமு

தற்றுவாதசாந்த வியாபகப் பிரமரந்திர முடிவாகும் பஞ்சாதாரத்துச் செல்லுந் தன்னையுஞ் சிவனையும் சாக்கிராதி துரியாதீதாந்த சாட்சிரூப பிரமாதி சதாசிவாந்த தேவதாகாரமாய்க் கண்டு, அந்த அவத்தையைந் தம்விட்டுக் கடந்து போமிடத்துச் சமஞ்ஞந்தத்தில் தற்காண்டல் சாக்கிரம்

தற்பரம் பார்த்தல் சொப்பனம்

தற்பர சம்பாவேசம் சுழுத்தி

தற்பரகோடியிற் றுக்குதல் துரியம்.

தான் துவான்று துரியாதீதம்

திரும்ப ஒருபிரகாரம் காணப்படும் —

ஞானசித்தியிற் சொல்லிய மூவாவத்தைக்குட் காணிக்கப்படும் அவாந்தராவத்தா பேதம் ரௌரவாதிகளிற் காணிக்கப்பட்டது அவைவருமாறு —

சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சாக்கிரசுழுத்தி, சாக்கிரதுரியம், காலபரம், அதீதம், பரதரிசனம், விசுவக்கிராசம், உபசாந்தம், சிவதரிசனம், சாயுச்சியம் எனனும் பேதத்தினுலே இந்தமேலாலவத்தைப் பதினொருபேதம்

சாக்கிர சாக்கிரமுதற் காலபராந்தம் ஆன்மசாக்கிரமுதல் ஆன்ம துரியா தீதாந்தமாகிய ஆன்மாவின தஞ்சவத்தை

சாக்கிரதுரியமுதல் விசுவக்கிராசாந்தம் பரசாக்கிர முதற் பரதுரியா தீதாந்தமாகிய பரன தஞ்சவத்தை

பரதரிசனமுதற் சாயுச்சியாந்தம் சிவசாக்கிரமுதற் சிவ துரியா தீதாந்தமாகிய சிவன தஞ்சவத்தை.

சாயுச்சிய கோடிக்குட் டசதுரிய முதற் றுறியகற்பனைகள் விழுந்திருக்கும், மேற்போகா.

அவற்றுள் ஆன்மசாக்கிரம் காரியவிசுவவியாத்தி யென்கின்ற காரியவிசுவரூபம்.

ஆன்மசொப்பனம் காரிய விசுவக் கிராசம்.

ஆன்மசுழுத்தி காரிய விசுவோப சாந்தி

ஆன்மதுரியம் ஆன்மதரிசனம்

ஆன்மதுரியாதீதம் ஆன்மசாயுச்சியம்

பரசாக்கிரம் காரண விசுவ வியாத்தி யென்கின்ற காரண விசுவரூபம்.

பரசொப்பனம் காரண விசுவகிராசம்

பரசுழுத்தி காரணவிசுவோப சாந்தி

பரதுரியம் பரதரிசனம்

பரதுரியாதீதம் பரசாயுச்சியம்

சிவசாக்கிரம் வாசஞ் விசுவவியாத்தி யென்கின்ற வாசஞ் விசுவரூபம்

சிவசொப்பனம் வாசஞ் விஸ்வக்கிராசம்

சிவசுழுத்தி வாசஞ் விசவோபசாந்தி

சிவதுரியம் சிவதரிசனம்

சிவதுரியாதீதம் சிவசாயுச்சியம்

சிவசாயுச்சியஞ் சித்திக்கும் பொருட்டு ஆன்ம சுழுத்தி முந்ற காலபரானந்த தியானத்தானம், அதீதமுங்ல விசுவக்கிராசாந்தம் சமாதித்தானம். உபசாந்தமுந்ற சாயுச்சியாந்தம் சாக்ஷாத் காரத்தானம்

இரும்ப வகிற பிரமாதி பரகாந்தாந்தமாகிய வஸ்துக்களி லே பார்த்தல், கிரகித்தல், தழுவுதல், ஆவேசித்தல், அவசமாதல் அஞ்சும் ஒவ்வொன்றுக்கு அஞ்சவத்தை யறியப்படும்

இரும்ப முன்சொல்லிய விந்தப பதினைந்தவத்தைகளைத் தனக்குள் வைத்த ஞானசித்தியில் மூலாவத்தை அருளினுடனே சிவத்துவாபி வியத்தி சூக்குமசிவத்துவாபி வியத்தி பரசிவத் துவாபி வியத்திகள் கிரமத்திலே வரும் பொருட்டு மூலைந்து பதினை ந்தவத்தைகள் காண்பிப்பாம்.

இதயத்தைச் சிவபாவனை பண்ணுமிடத்துக் குவிந்து, இதயமுதல் இதயாக கிராந்தத் துவாத சாந்தத்திற் சிவபாவனை பண்ணுமிடத்தில் விரிந்து, இதய முதற் றுவாதசாந்தம் வியாபித்திருக்கும் பூதானம் அந்தரானம் சத்துவானம் சீவானம் மந்திரானம் சாலம்ப சிவயோகங்களி னொன்றிறுற பூதானமாதி மந்திரான மாந்த ஆன்மாக்களி னந்தில் மற்றை நாலு முள வைத்த ஒன்றைச் சயம் பண்ணி, நிராலம்ப சிவயோகம் பண்ணுமிடத்து இதயமுதற் புருவமத்தியாந்த மட்டாகத் தூலசாக்கிராதி தூல துரியாதீதாந்த மாகிய வைந்தவத்தைத் தூலானம் தூலபர தூலசிவந் தோற்ற முண்டாகத் தூல சிவத்துவாபி வியத்தி தோற்றும் பொருட்டுக் காணப்படும்.

கண்ட முதற் பிரமரந்திராந்த மட்டாகச் சூக்கும சாக்கிராதி சூக்கும துரியாதீதாந்த மாகிய வைந்தவத்தை சூக்குமானம் சூக்குமபர சூக்குமசிவந் தோற்ற முண்டாகச் சூக்குமசிவத்துவாபி வியத்தி தோன்றும் பொருட்டுக் காணப்படும்.

புருவமத்திய முதற் றுவாதசாந்த மட்டாகப் பரசாக்கிராதி பரதுரியாதீதாந்த மாகிய வஞ்சவத்தை, பரானம் பராபர சிவந்தோற்ற முண்டாகப் பரசிவத்துவாபி வியத்தி தோற்றும் பொருட்டுக் காணப்படும்.

திரும்ப விதுதானே ஒரொட்டாக முன் சொல்லிய மூலாவத்தையின் றக்கிரமுமாம்.

பின்னொருபிரகாரங் காணபிப்பாம் —

இதய முதற் றுவாதசாந்தாந்தமாக, முன்சொல்லிய இதப பதினைந்தவத்தைகளைத் தனக்குள் வைத்த மூலாயத்தையில் இதய முதற் றுவாதசாந்தாந்தந் தொட்ட பிரமரந்திராந்தமாகப் பூதானமா வென்கின்ற பஞ்சபூதங்களிலே காண்க. பஞ்ச பூதங்களோடு கோத்த பஞ்சகலைகளிலேதான் காண்க.

பஞ்சகலைகளோடு கோத்த தஞ்சு பகுப்பாய்த் தத்துவானமா வென்கின்ற தத்துவங்களிலே தான் காண்க.

பஞ்ச கலைகளோடு கோத்த அநந்தரானமா வென்கின்ற அதிசூக்குமாதி வைகரியாந்தமாகிய பஞ்ச வாக்குகளிலேதான் காண்க.

பஞ்ச கலைகளோடு கோத்த தூலதர தூல்சூக்கும சூக்குமதர சூக்குமதம சிவானமா வென்கின்ற அகங்காரங்களிலே தான் காண்க

பஞ்சகலைகளோடு கோத்த மந்திரானமாவென்கின்ற மந்திரகலைகளிலே மூலாவத்தை ஞானசித்தி வசனப்படி முன்பு தானே காண்பித்தோம்

இப்படிக் காண்பித்த சுத்தாவத்தா பேதங்களெல்லாஞ் சாக்கிராதி துரியாதீதாந்தமாய் முன் சொல்லிய அசுத்தமாகிய கீழாலவத்தை ஐந்தையும் முறைமையிற் சயம்பண்ணும் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி சாட்சாத்காரம் என்கின்ற அங்காங்கியோக ரூபமாகும் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீத மென்கின்ற அவத்தை யைந்தாய், ஒன்றாயிருக்கிற சுத்தாவத்தை யொன்றிலே சுருக்கப்படும்

---

## சிவஞானயோகியருளை வருமாறு.

—o—

மேற்கூறிய பத்தனுள், சத்தமாதியாம் விடயங்களிற் புரிவதுஞ்செய்தல் கழித்தற் கேதுவாகிய இருவினை யொப்பும், போகபோக்கியக் கருவிகளின் செறிவு கழித்தற் கேதுவாகிய சத்தினிபாதமும், உருக்கழித்தற் கேதுவாகிய குருவருளும், எல்லாவேனியும் புகக்குழலுதல் கழித்தற்கேதுவாகிய ஞானசாதனமும்,

சென்று திரிகருதலாகிய ஏகதேசத்தன்மை கழிதற் கேதுவாகிய மும்மலநீக்கமும், சத்தமாதியாம் விடயங்க டன்னி னுகாவது கழிதற்கேதுவாகிய வாதனை நீக்கமும், பாசவறிவிச்சை செயல்கள் கழிதற்கேதுவாகிய ஞானப்பெருக்கமும், முறையே கிடைப்ப, அவற்றின் காரியம் பந்தம் நீங்கப்பெற்றுத் திருவருளைக் கூடுதல் சுத்தமென்பதாம்.

சத்திநிபாதத்திற்கு மூலமாகிய மலபரிபாகமும் இருவினையொப்புக்கு மூலமாகிய சிவபுண்ணியமுமென்னு மின்னோரன்னவற்றை ஈண்டுக் கூறுதொழிந்தார், மேற்கூறிய காரியம் பந்தம் நீங்குதற் கேதுவாவன மாத்திரையே யீண்டுக் கூறப்புகுந்தாரன்றி அனைத்துங் கூறப்புகுந்தா ரல்லராகலின் அவையெல்லாம் முன்னாகக் கூறப்படும்.

இதனானே மலங்களெல்லாமோவினபோது சுத்தமுடையனுமாறு வகுத்துக் கூறப்பட்டது 'புருடனே யறிவனுகில்' என்றது முதல் இத்துணையும் 'வெவ்வே றனைத்தும்' என்ற வினைருங்கூற்றை வகுத்தோதிய வாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் சுத்தவவத்தையை யருளிச்செய்கிறார்.

இருவினைச்செயல்களொப்பில் - புண்ணியபாவங்களிரண்டினாலும் உண்டான விதாவகிதங்களை யொன்றுக்கொன்று ஏற்றமற் குறையாம லிரண்டுஞ் சமமாய் ஒருகாலத்திலே புசிக்கு மவசரத்திலே,—ஈசன்றன் சத்திதோய - பரமேஸ்வரனுடைய சத்தி இவனிடத்திலே பதிய அதனாலே,—குருவருள்பெற்று -தேசிக கடாக்ஷமுண்டாய் அந்தக் கடாக்ஷத்தினாலே,—

ஞானயோகத்தைக்குறுகி - சிவஞானத்தைப் பொருந்து முறைமைகளினாலே சென்று பொருந்தி அந்தப்பிரகாசத்தினாலே,—முன்னைத் திரிமலமறுத்து-அநாதியேயிவனைக் கூடிநின்று மறைக்கிற அந்தக் காரியமாகிய மூன்று மலங்களையும் போக்கி அதனாலே,—பண்டைச் சிற்றறிவொழிந்து-பழைய வான்மபோதமுங் கெட்டு,—ஞானம்பெருகி - அநாதியே யிவனிடத்திலே அப்பிரகாசமாய் நின்ற ஞானமும் பிரகாசித்து இங்ஙனஞ் சொல்லிப் போந்த முறைமைகளினாலே,—நாயகன்றன் பாதம் பெறுவது சுத்தமாமே- சகலலோக நாயகனாகிய பரமேஸ்வரனுடைய சீபாதத்தை இந்த வான்மா இரண்டறச்சென்று கூடுகிறவதுவே சுத்தவவத்தையாம்

இதனாற் சொல்லியது, இருவினையொப்பும் சத்திநிபாதமும் குருகடாக்ஷமும் ஞானத்தைப் பெறுகையும் பாசக்ஷயமும் உண்டான வவதாரத்திலே இவனுக்கு முன்புள்ள சிற்றறிவும் போய் பேரறிவுமுண்டாய் அந்த வறிவாலே பரமேஸ்வர னுடைய சீபாதத்தை வேறறச்சென்று கூடுமதே சுத்தவவத்தையென்னு முறைமை யறிவித்தது

'கேவலசகலசுத்தம்' என்று எடுத்த திருவிருத்தத்துக்கு வியாக்கியானம் 'அறிவிலன்' 'உருவினைக்கொண்டு' 'இருவினைச் செயல்கள்' என்றமூன்று திருவிருத்தத்திலும் வந்து முடிந்தது.

கேவலமென்றது மாயை மாமாயை காமியம் என்று சொல்லப்பட்ட மலங்களெல்லாநீங்க ஆணவமலத்தாலே சருவான்மாக்களும் மறைப்புண்டு கிடக்கிற் சருவ சங்காரத்தை. சகலமென்றது சிருஷ்டி தொடங்கிச் சருவசங்காரமளவும் ஆன்மாக

கள எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிகள்தோறும் கன்மத்துக்கீடாகப் பிறந்து இறந்துவருகிறதைச் சுத்தமென்றது பரமமுத்தியை இவை மூன்றும் காரணவவத்தை என்னுமது கண்டுகொள்க

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

இருவினைச் செயல்களொப்பின் - மேற்கூறிய பத்திஞால் சுத்தமாதியாம் விடயங்கள் தன்னிற் புரிவதுஞ் செய்தல் கழிந்ததற்கேதுவாகிய இருவினையொப்பும்,— ஈசன்றன் சத்திதோய- போக போக்கியக் கருவிகளின் செறிவு கழிந்ததற் கேதுவாகிய சத்திநிபாதமும்,— குருஅருள்பெற்று - உருக்கழிந்தற் கேதுவாகிய குரு அருள்பெறுதலும்,— ஞானயோகத்தைக்குறுகி- எல்லாயோனியும் புக்குழலுதல் கழிந்தற்கேதுவாகிய ஞானசாதகமும்,—முனைந்த திரிமலமறுத்து-சென்று திரிதருதலாகிய ஏகதேசத்தன்மை கழிந்தற்கேதுவாகிய மும்மல நீக்கமும்,—பண்டைச் சிற்றறிவொழிந்து - சத்தமாதியாம் விடயந் தன்னில் நுகர்வது கழிந்தற் கேதுவாகிய வாதனைநீக்கமும்,— ஞானம்பெருகி - பாசவறிவிச்சைச் செயல்கள் கழிந்தற் கேதுவாகியஞானப்பெருக்கமும் முறையே கிடைப்ப,— நாயகன்றன் பாதம் பெறுவது சுத்தமாமே-அவற்றுனக்காரியப்பத்து நீங்கப்பெற்றுத் திருவருளைக் கூடுதல் சுத்தாவத்தை யென்பதாம்

இதனானே மலங்களெல்லா மோவினபோது சுத்தமுடையனுமாறு கூறப்பட்டது

‘புருடனே யறிவனுக்’ என்பது முதல் விகற்பத்தையும் ‘வெவ்வேறனை தரும்’ என்ற மூன்றாங் கூற்றை வருத்தோதியவாறு.

☞ ௪-சூ, ௩-அ, முடிந்தது.

☞ நான்காஞ் சூத்திரம் முற்றிற்று

“ நாற்பான்”

என்ற நான்காஞ் சூத்திரம்

நாற்பது

முடிந்தது

பாயிர முட்பட செய்யுள்—௨௩0

*௩-௪-சூ-ள், பஞ்சலக்கண ' இவ்வதிகாரங்களின் பொருளை உரையாசிரியர்கள் வெவ்வேறாகக் கூறுவதை முகவுரையிற் கூறுதும்

சிவமயம்.

# சிவஞானசித்தியார் சுபக்கம்.

## (ரு)—சூத்திரம். பாசமோசநலக்ஷணம்.



## மறைஞானதேசிகர் உரை.



*மேலஞ்சாஞ்சூத்திர மென்னுதலிற்றோ வெனில்? இவ்வா ன்மாக்களிடத்துத் தம்முதலுபகார முணர்த்துத னுதலிற்று*

*இத்தலைச்செய்யு ளென்னுதலிற்றோ வெனின்? அந்தக்க ரணங்களு மான்மாவுங் கூடியிருந்தாலு மல்லாத்தையுங் காட் டுமாத்தைக் காணும் பொறிபோலக் காட்டுங் கடவுளைக் காணு தென் றுணர்த்துத னுதலிற்று*

பொறிபுலன் கரணமெல்லாம் புருடனா லறிந்தா
ணமாவை, யறிதரா வவையேபோல வான்மாக்க ளெ
த்துமெங்கும், செறிதருஞ் சிவனாலே யறிதருஞ்
சிவனைக்காணு, வறிதருஞ் சிவனேயெல்லா மறிந்தறி
வித்துநிற்பன். (க)

(இ-ள்.) பொறிபுலன் கரணமெல்லாம் புருடனாலறிந்தானமாவை யறிதரா வவையேபோல

இந்திரியாதி விடயங்க ளான்மாவோடே கூடி யறியாநிற்கவு மவை யந்தவான்மாவை யறியமாட்டாத முறைமைபோல,

| | |
|---|---|
| ஆன்மாக்கள் ஊனத்து மெங்கு ஞ் செறிக்கருஞ்சி வனருளே ய றிக்குஞ் சிவனைக் காணா | ஆன்மாக்களுக்கு மெங்கும் பரிபூரண மாய் நிற்கிற சிவனருளே யெல்லாத்தையு மறி யாநிற்பார்களாதலு மந்தச்சிவனை யறியமா ட்டார்கள் |
| உறிக்கருஞ்சிவ னே யெல்லா ம றிந்தறிவித்து நி ற்பன் | எல்லாத்தையு முள்ளபடி யறியுஞ் சிவன் முன்னே யறிந்த ஆன்மாக்களையு மறிவித்து நி ற்பன் என்று |

ஏகாரம் தேற்றம்

இதற்குச் சிவஞானபோதம் (க)

---

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.

———o———

முதற் சூத்திரத்திலே சகத்துக்குக் கர்த்தா வொருவனுண் டென்று ஏது *வுபபத்திகளினாலே நிச்சயித்துப் பாரிசேஷத்தி னாலே அந்தக் கர்த்தா சிவனென்றுங்கூறி, இரண்டாஞ் சூத்திரத் திலே சிருஷ்டிக்கிரமங்கூறி, மூன்றாஞ் சூத்திரத்திலும் நாலா ஞ்சூத்திரத்திலும் தேகேந்திரி யாந்தக்கரணாதிகளுக்கு அந்ய னான்மாவென்றும், ஆன்மலக்ஷண மிவ்வாறென்றுங்கூறி, மே லஞ்சாஞ் சூத்திர மொன்பது விருத்தத்தினாலுஞ் சிவ ஞானமா க்களிடத்தி லந்தரியாமியாய் நின்று பிரேரிக்கு முறைமையைச் †சங்கோத்தரங்களினாலு முதாஹரணங்களினாலுங் கூறுகி ன்றது

* உபபத்தி - சாதனம், † சங்கை - சந்தேகித்தல், உ த்தரம் - மறுமொழி

ஆணமாகக ளினைத்துமெங்குஞ் செறிதருஞ் சிவனறனாலே யறிகிறுஞ் சிவனைக்காணு-சாவானமாகக்குஞ் சாவவியாபியாகிய சிவனுடைய பிரோ"னயினாலே சாவ வஸதுககளையு மறியும. இவவாறறிநதும சிவபபிரேரணையினாலே யறிகிறு மெனகிறதனைகயுஞ் சிவனையுமறியாாகள அதெனபோல வெனனில்?—

பொறிபுலன கரணமெலலாம புநட ஞ லறிநகானமாவை யறிதரா கவையேபோல - அநதககரணஙகளும ஞானேநதிரியஙகளும புருஷனாலே விஷயஙகளைக கணடு புருஷனாலே யறிகிறு மெனகிறதையு மநதப புருஷனையு மறியாததுபோல வெனனில்? 'ஐநதையுஙகொண டறிவதொன றுணடதானமாவைமபொறி யறிநதிடாவே' எனறும, 'உணாவன கரணமெனணி லொனறையொன றுணராவெனறும அநதககரணஙகளையும ஞானேநதிரியஙகளையு முனனே ஜடமெனறு சொல்லிப்போந திவவிடதது விஷயஙகளை யறியுமெனறது விரோதமெனனில்? அலல இநதிரியாநதக கரணஙகளறியு மெனறு சொனனது முகய விருததியாகவலல, லக்ஷணையாக காரண காரியோப சாரமாசச சொனனது அது விஷயோனமுகமான வனம ஞானததினுடைய விஷய ஞானோதயததுககு இநதிரியாநதக கரணஙகள சஹகாரி காரணமாயிருநது ஆனமசமயோகததினாலே சஹகாரி யானு மெனபதையு மானமாவையு மறியாததுபோலவென றாதகம

லக்ஷணையானது, ஆகாரம காரணம காரியம் சமீபம உபசாரம * தாமாறுகரதம எனறுறுவிகமாம அவையாவன —

* தருமாறு கிருதம - தருமததைத் யொசுகுதல

ஆதாரமாவது, மஞசா கூரோசநதி யெனறது, மஞசநு ஜடமாகையால் சேதனதாமமான † ஆகரோசம முகய விருததியாகக் கூடாதாகையா லநத ‡ மஞசஸ்தனு யிருககிற புரு

க்ஷனுடைய ஆக்ரோசத்தை ஆதாரமாக விருக்கிற மஞ்சத்துக்கு லக்ஷணையாகச் சொன்னது

† ஆக்குரோசம் - கூப்பிடுதல் ‡ மஞ்சஸ்தன் - கட்டிலி லிருக்கிறவன்

காரண லக்ஷணையாவது, பொன்மழை பெய்ததென்றபொழுது மேகம் ஸ்வர்ணத்தை வர்ஷியாததாகையால் மேகம் வர்ஷித்த ஜலத்தினாலே § சஸ்யாதி யபிவிருத்தித் துவாரா தான்யலாபப் ¶ பிரயுக்த ஸ்வர்ணலாபம் வருகையால் பரம்பரா காரணமாயிருக்கிற தண்ணீரை வர்ஷித்தது பொன்மழை யென்பது + காரணே

§ சஸ்யம் - பயிறு, ¶ பிரயுக்த - உண்டான. + காரணே - காரணத்தில்

காரிய லக்ஷணை யாவது, பருத்திப் புடவை யென்றபொழுது பருத்தியே புடவை யாகாததாகையால் பருத்தியினுடைய காரியமாகிய நூற்புடவை காரியத்தினாலே காரணத்தை லக்ஷணையாகச் சொன்னது

சமீபலக்ஷணையாவது, கங்கையிலே யிடைச்சேரி யென்றபொழுது கங்கை பிரவாகிக்கிற தாகையாலதிலே குடியிருக்கிறது முக்கியமாகக் கூடாததாகையால் கங்கைக் கரையிலே யிடைச்சேரியென்றது.

உபகார லக்ஷணையாவது, பிக்ஷை யிந்த வூரைவிட்டுப் பாறப்போக வொட்டாதென்றபொழுது பிக்ஷை தகையக் கையைப் பிடித்து நிறுத்த முக்கியமாகக் கூடாதபடியாலே பிக்ஷா × சௌகரியத்தினாலே இந்த வூரைவிட்டுப் போக மனதுவாராதென்பது.

× சௌகரியம் - சுளுவாய்ச் செய்யக்கூடுமானது,

தர்மாநுக்ருதி லக்ஷணையாவது, சிங்கோமாணவக: என்றபொழுது — மாணவகனை முக்கியமாக சிங்கமாகா னாகையால் சிங்கதர்மமான சௌரியத்தை யுடையவனென்பது.

— மாணவகன்-மாணாக்கன்

தது³க்தம் ஶ்ரீமத்³ரௌரவே ஶ்ரோத்ராதி³ காரணகாரணே
ஸர்வே வை காரகா: | யதா² ராஜ்ஞோ ப⁴வந்த்யேவ
ஶிவலக்ஷணா: ஸம்ஸாரே ஜடா: || இதி.

இந்த லக்ஷணைகளிந்த சாஸ்திரத்திலே வந்த விடங்களோர்ந்து கண்டுகொள்க.

சித்ரூபியாயிருக்கிற ஆன்மாவுக்கு ஜடமாயிருக்கிற இந்திரியாந்தக்கரணங்களை திருஷ்டாந்தமாகச் சொன்னது விரோதமென்னில்? அல்ல; ஆன்மாக்களனைத்துமென்று சர்வான்மாக்களையும் * பக்ஷீகிருததேசம் பண்ணுகையால் சபக்ஷமில்லை. அதன்றிக் கேவல வியதிரேகியானது கொண்டு வியதிரேகமாக ஜடத்தை திருஷ்டாந்தமாகச் சொல்லுவது † உசிதமே

* பக்ஷீகிருததேசம் - இடத்தைக் குறித்தல் † உசிதம் - யோக்கியம்

தது³க்தம் ஸர்வஜ்ஞானோத்தரே — ஶிவஜ்ஞானோத்தயே
இந்த்³ரியாணி பஶவோ ஜ்ஞானஸ்ய ஸாவி ஸம்
ஸாந்த இதி |

ஜடத்துக்குச் சித்பிரேரணையில்லாமல் பிரவிருத்தியில்லை யென்பதன்றிச் சித்துக்கு * சிதந்தராபேக்ஷையாக ஆன்மாக் களை சிவன் பிரேரிப்பனென்கிறபொழுது † அநவஸ்தை வரு மென்னில்? அதற்குத்தரமாக,—

* சிதந்தரம் - வேறுசித்து, † அநவஸ்தை - முடிவில்லாமை,

அறிதருஞ சிவனேயெலலா மறிந தறிவிததுநிற்பன - ஆன்மாகக ளறியுமபடிககுப பணணுகிற சிவன அநயப பிரகாசததை யபேக்ஷியாமற றனே யெலலாததையு மறிநது ஆனமாககளுககு மறிவிதது வேறாநிறபன

சிவனேயென்ற வுகாரததினுலே தானே யறிநதும பிறாககுமறிவிககிறவன சிவன

ததபிரத்யேகி சைதநயமான ஆனமாககள சிவனுலே யறிகிறதொழிநது தாஙகளாக வறியமாட்டாாகள, ஒருவாக கறிவிககவுமாட்டாாகள

சைதநய ஸவரூபம சமனுயிருகக விவவாறு பேதமெபபடியெனில்? கணணும பிரகாசருபமும ஆதிதயனும பிரகாசரூபமாயும, கண ணுதிதத பரகாசததினுலே காணபதொழிநது தானுகக காணவுமாட்டாது வேறொரு கணணுககுக காட்டவு மாட்டாது, ஆதிதயன றனனுடைய பிரகாசததினுலே யெலலா வஸதுவையுந தானே கணடு கணகளுககுங காட்டுவதுபோல வெனனவறிக

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

இவவானமாககளிடததுத தமது முதலுபகார முணாத்துகிறா

பொறி - பஞசேநதிரியஙகளாகிய புறககரணஙகள —கரணம எலலாம-மனுதி நானகாகிய உடகரணஙகள,—புலன - விடயஙகள,—புருடனுல-ஆனமாவால,—அறிநது-சிறசததியோடு புணாநதுணாநததலால் அறிநதென றுபசரிககபபட்டது,—ஆனமாவை - பிரேரகனுகிய புருடனை,—அறிதரா - காணு —அவையே போல-அநத இருவகைக கரணஙகளைபோல,—ஆனமா

க்கள்,—அனைத்தும் - எல்லா விஷயங்களையும்,—எங்குஞ் செறி தருஞ் சிவன்றானே - எவ்விடத்தும் பரிபூரணனா யிருக்கு மீசுரனே,—அறிந்திடும் - தால ஆக்கும் பாசரீங்களைப் புணர்த்திட்ட போதிப்ப வுணர்,—சிவனைக் காணு -பிரேரகனாய் நிற்கு மீசுரனைப்பாரா —அறிகருஞ் சிவனே - சுதந்தர வறிவனாகிய வீசுரனே,—எல்லாமறிந் தறிவித்து நிற்பன - முன் சொல்லிய முன்றமையிற் சகலமு முணர்ந் துணர்த்தி யிருப்பன்



## சிவஞானயோகியருரை வருமாறு.



நான்காஞ் சூத்திரத்திற் பசுவியல்பு கூறியவாசிரியர் அதன்மேலின்ற பாசத்தினியல்பு கூறுவாராய், அதனை யுள்ளடக்கி நிற்குந் திரோதான சத்தியினியல்பு ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறுகின்றார்

தன்னை யறியமாட்டார்த பொறி முதலியவற்றைத் தான் றிந் தறிவித் துடனிற்கும் புருடன் அதுபோலத் தன்னையறிய மாட்டாத் வப்புருடனை அறிந் தறிவித் துடனிற்பது சிவமென்பதாம்

சிவனே யெல்லா மறிந் தறிவித்து நிற்பனென்ப பொருட்க ஞேதியத்னை உவமையினு மேற்குமா றிசைவித் துரைத்துக் கொள்க

திரோதான சத்தியினியல்பை உபசாரத்தாற் சிவன்மே லேற்றிக் கூறியவாறு.

அறிதருஞ்சிவன் முடிவினக ஞணமையறிவைத் தரக்கட வோனாகிய சிவன்.

அறி முதனிலைத் தொழிற்பெயர்.

இச்செய்யுள் முதனூலஞ்சாஞ் சூத்திரம்போல இருகூற்றதாமாறு கண்டுகொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மூன்றாஞ் சூத்திரம் திருவிருத்தம் - ௪ நாலாஞ்சூத்திரம் திருவிருத்தம் - ௪௦ ஆக திருவிருத்தம் - ௪௪

இது ஆன்ம இலக்கணம்.

இதில் மூன்றாஞ் சூத்திரத்தில் முதற்றிருவிருத்தம் 'உயிரெனப்படுவது' என்ற திருவிருத்தம் ஒன்றுக்கும் மற்றுள்ள நாற்பத்துமூன்று திருவிருத்தமும் வியாக்கியானம் அவைவருமாறு —

'உயிரெனப் படுவதிந்த வுடலின்வே றுளதாயுற்று' என்ற பதத்திற்கு வியாக்கியானம், 'உடலின்வே றுயிரோனிந்த' என்ற திருவிருத்தமுதல் 'சுத்தமா மானமசித்தை' என்ற திருவிருத்தமீறாக இருபத்திரண்டு திருவிருத்தமளவும் வந்து முடிந்தது.

'செயிருறு மிச்சாஞானச் செய்திக ளுடையதாகிப், பயில வருமிப்பதனப் பலன்களுந் துகரும்' என்ற பதத்துக்கு வியாக்கியானம், 'அசித்தருவியாபகம்' என்ற திருவிருத்தமுதல 'அறிவுடல சிந்தை' என்ற திருவிருத்தமீறாகப் பத்துத் திருவிருத்தமளவும் வந்து முடிந்தது

'பாகநிற்ற றுயிலொடு மஞ்சவத்தைப் படுமுண்மை துரியாதீதம்' என்ற பதத்துக்கு வியாக்கியானம், 'கண்டுணா புருடன்' என்ற திருவிருத்தமுதல, 'இருவினைச் செயல்கள்' என்ற திருவிருத்தமீறாகப் பதினொரு திருவிருத்தமளவும் வந்துமுடிந்தது

ஆக நாற்பத்துநாலு திருவிருத்தத்துக்கும் வகை கண்டுகொள்க.

நாலாஞ்சூத்திர முடிந்தது

* இதனை இவ்வுரை நாலாஞ்சூத்திர முடிவிற் சேர்த்துக் கொள்க

மேல் உணர்த்து முறைமை.

முன்சொன்ன ஆன்மலக்ஷணத்தில் ஆன்மாக்கள் படுகிற வகுத்த தன்மை சொல்லி அநாதியேயுயிர்க்குயிராய் நின்றுணர்த்துகிற சிவனை ஆன்மாக்க ளிழந்து நிற்கிற முறைமைக்கு ஒருதிட்டாந்தமிட் டருளிச் செய்கிறார்

பொறிபுலன் கரணமெல்லாம் புருடனாலறிந் தான்மாவை யறிகிறாது—இந்திரியங்களும் அந்தக்கரணங்களு மற்றுமுண்டான தத்துவங்களும் பிரபஞ்ச விடயங்களை யான்மாவினாலே யறியாநிற்கும் அந்தத் தத்துவங்கள் ஆன்மாவினாலே யல்லோ எல்லாத்தையு மறிகிறோமென்று ஒன்று மறியாமலான்மாவை யிழந்து நிற்கும் —அவையேபோல வான்மாக்க ளனைத்து மெங்குஞ் செறிந்தருஞ் சிவனாலே யறிந்திடுஞ் சிவனைக் காணா - அந்த விந்திரியங்களும் அந்தக்கரணங்களும் ஆன்மாவை யறியாதாற்போலச் சர்வான்மாக்களும் சட்சித்துக்க ளிரண்டிலும் விட்டுநீங்காமல் நிற்கிற பரமேசுரனுடைய வருளாலே யறிந்து புசியா நிற்கச் சிவனுடைய ஞானத்தாலேயல்லோ வறிந்து புசிக்கிறோ மென்கிற முறைமை யொன்றையு மறியமாட்டாது அருளானது அதீதத்திலே வேண்டத் தக்கக் கருவிகளைக் கூட்டியுணர்த்த அந்தக் கருவிகளைக் கூட்டி யான்மாப் புசிக்கும் தொழிந்து இவன் புசிக்கிற விடமெல்லாந் திருவருளை கூடிநின்று புசிக்க வேண்டியதில்லை என்ற சைவரை நோக்கி யருளிச் செய்கிறார் — அறிந்தருஞ் சிவனே யெல்லா மறிந்தறிவித்து நிற்பன - சர்வஞ்ஞன் பரமேஸ்வரன்றானே ஆன்மாக்கள் முன்புசெய்த கன்மத்துக்குத் தக்க சுகதுக்கங்களையு மறி

ந்த முறைபிறழாமற் கூட்டிப் புசிப்பிப்பன், ஆன்மாக்கள் கி ஞ்சிஞ்ஞராகையால்.

திருவருள் அதீதத்தில் வேண்டத்தக்க கருவிகளைக் கூட்ட, அந்தக் கருவிகளை ஆன்மாக்கூடித் தனக்குவேண்டின விடயங்களைத் தானே புசிப்பனென்று சைவர் சொன்னதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம் "அறிவாயறியு மறிவுயிர்கேவ லத்-தறிவில விருமொழிமே பிறிவில ணையுணல்-கலே" என்னுமத னுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, கருவிகரணாதிகள் ஆன்மாவினாலே யறிப்பச்செய்யாதே ஆன்மாவை யறியாது நின்றதனைப்போல், சர்வ ஆன்மாக்களும் சிவனாலே யறிகைச் செய்யாதே சிவனை யறிந்து நின்றமுறைமையும் இதற்கொத்தென்றும், இவனுக்குண்டான கன்மங்களைச் சிவனேயறிந்து கூட்டிப் புசிப்பிப்பனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—o—

பொறிபுலன் கரணமெல்லாம் புருடனால் - ஐம்பொறியுந் தத்தரண முதலியன மேற்கூறிப்போந்த புருடனாலே புலன்,— அறிந்து - தத்தம் விஷயங்களை இஃதின்னதென் றறிவிட்டறிந்தும்,— ஆன்மாவை யறிகிலின அவையேபோல - அறிகின்ற தன்மையும் தம்மை யதிட்டித்து நின்று செலுத்துமப் புருஷனையும் அறியமாட்டா அவைபோல,— ஆன்மாக்களைத்து மெங்குஞ் செறிந்தருஞ் சிவனாலே - ஆன்மாக்களனைத்தினும் எவ்விடத்தும் வியாபகமாகியமுதல்வனது சிற்சத்தியால்,— அறிந்திருஞ் சிவனைக்காணா-வினைப்பயன்களையறிந் தனுபவிக்குந் தம்மையுந் தம்மைச்செலுத்தி நிற்குந் திருவருளையு மறியமாட்டார்.—

அறிதருஞ் சிவனே யெல்லாமறிந் தறிவித் தநிற்பன - முடிவின்கண் உண்மையறிவைத் தரக்கடவோனாகிய சிவன, தன்னை யறியமாட்டாத பொறிமுதலிய வற்றைத் தானறிந்து மறிவித்து முடனிற்கும் புருஷனைப்போலத் தன்னை யறியமாட்டாத அப்புருஷனை யறிந்து மறிவித்து முடனிற்பன என்பதாம

திரோதான சத்தியி னியல்பை யுபசாரத்தால் சிவன மேலேற்றிக் கூறியவாறு

இச்செய்யுண் முச்ணூலோதாஞ் சூத்திரம்போல இருகூற்றதாமாறு கண்டுகொள்க

---

## மறைஞானதேசிகர் உரை.

—◦—

அருகன, சாவானமாக்களுக்குஞ் சிவனறிவிப்பானாகின எல்லார்க்கு மொருபடித்தாக வறிவிக்க வேண்டாவோவென,

அந்தச்சிவன கன்மத் தக்கிடாகக் கொடுப்பனென்ன றுணர்த்துகின்றார

இறைவனே யறிவிப்பானே லிணடறி வெவர்க்குமொக்கும, குறைவதி கங்கடத்தங் கன்மமேற் கோமானவேண்டா, முறைதரு செயற்குப்பாரு முளரிகடிரவியும்போ, லறைதருந் தத்தங்கன்மத் தளவினுக்க ளிப்பனுந்தி (உ)

(இ-ள) இறைவ உமக்காத்தா வெல்லார்க்கு மறிவுகளை னே யறிவி க்கொடுப்ப னென்று நீர சொல்லில்? அப்பானேவீ பொழுதறிவெல்லார்க்கு மொத்திருக்க வேண்டறி வெவாக ணும.

குமொக்கும

குறைவதிகங கடதகஙகணம மேற கோமான வேணடாம

கனமததுக கிடாகவே யான்மாக்களுக் கறி வேறியுங குறைநதும வருமாகிற காத் தா வகனைக கொடுக்க வேணடிய தில்லைக் காணும

முறை தருஞ செயறகுப பாரும

பூமி யெல்லார்க்கும பொதுவா யிருக்கவு மிருவரொருகாலததிலுழுது விரைவிரைக்க வுங கணடோம, ஒருவனுக்கு வீரபோகமாக வுணடாயு மொருவனுக கொனறுங காணும ற போகவுங கணடோம, அதுபோலவும,

முளரிகட கிர வியுமபோல

தடாகததிற றாமரை யருமபினுறறும பககுவமானததை யாதிததனலாததுமா றுபோல மாயையாகிற தடாகததிலே மய ஙகிககிடககிற வானமாககளாகிற பதுமததைச சிவனாகிற வா தித்தன பருவமறிந தலாததுவன

அறைதருந தததங கணமத தெளிவினுக களிப பனறே

அவைபோலென றுவமிததுச சொல்லப் பட்ட சிவனும, மானமாககள கனமததுக கீ டாக வறிவை யேறவுங குறையவு முணடா கருவன, காததாவை யறியுணடாக மாட டாதகாண எ-று

இதறகுப் பௌடகரததுமதஙகததுமறிக (உ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

மேல் காததாவே யறிவிககச சாவானமாககளுககு மறி வொகக வேணடுமெனனுஞ சஙகைககு சூததிரம

இறைவனே யறிவிப்பானே லீணடறி வெவர்க்கு மொக்கு ம் - சாவானமாககளுககுங் கர்த்தாவே யறிவிப்பானுகி லறி

வான தெல்லார்க்கு மொருபடித்தா யிருக்கவேணும்—குறை வதிகங்க டத்தங் கன்மமேற் கோமான் வேண்டா - அறிவினு டைய * தாரதம்யமான தவர்க ளவர்களுடைய கன்ம தாரதம் யத்தினாலே வருமெனனில், அப்பொழு தீஸ்வர னறிவிப்பனெ ன்னத் தேவையில்லை யெனனில்? கன்மஞ் ஜடமாகையாற் று னே பலத்தைக் கொடாது கன்மங் குணமாக வீஸ்வரனே யறியப்பண்ணுவ னென்பதற் குதாரணமாக—முனைதருஞ் செயற்குப்பாரு முளரிகட் கிரவியும்போ லறைதருந் தத்தங்கன் மத் தளவினி லளிப்பனுந்தி - உழவு ஏருழுதலாகச் செய்யுங்கோ ளாற்றுக்கேற்ற பலன்களைப் பூமிகொடுக்குமாப்போல ஆன்மா க்கள் பண்ணும் புண்ணிய பாவங்களுக்கேற்ற வறிவு முதலான பலன்களைக் கொடுப்பதும், பக்குவமாகிய தாமரை முகைகளை † யாதித்தியன் ‡ விகசம் பண்ணுமாப்போல மலபரிபாகமான ஆன்மாக்களைப் பக்குவானு குணமாகச் சாவஞ்ஞத்துவாதிகளைப் பிரகாசிப்பிப்பதும் பதார்த்தத் திரயங்களுக்குள்ளே ஆதிபக § வாசயனென சிவனென்று ஆகமங்க ளறையாநிற்குமென் றிரு ன்பொருள்

* தாரதம்யம் - ஏற்றக்குறைவு, † ஆதித்தியன் - சூரியன், ‡ விகசனம்-மலரச்செய்தல், § வாசயன் - சொல்லத்தக்கவன்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

அருகன் ஈசுர னறிவிப்பானாகில் அறிவு அனைவர்க்கு மொ ருபடித்தாக வேண்டுமென்ன மறுத்துரைக்கின்றார்

இறைவனே யறிவிப்பானேல்-சிவனே போதிப்பனாகில்,— நுண்டறிவெவர்க்கு மொக்கும்-இவ்விடத் துணர்வு எல்லார்க்கு

மேருத் துறைபாது ஒத்திருக்க வேண்டும்—துறைவதிசயகட்டு தங் கன்மமேல்-அறிவின்றியாச்சி தாழ்ச்சி புண்ணியபாவ பாக தாரதம்மியத்தாவென்று நீர் சொல்லில்,—கோமான வேண்டா - ஒரு காரியத்துக்கு இருகாரணங் கற்பிப்பது கற்பனா கௌரவமென்னுந் தோஷம் வருமாதலால் ஈசுரனறிவிப்பா னென்பது சொல்ல வேண்டுவதில்லை, சத்தியம், நீ சொல்லியது அநேகாந்திகத்துவிற்று அதெப்படி?—முறைசருஞ் செயற்குப்பாரும் - மந்த தீவிராதி நெய்ப்பிறந்து மந்த தீவிராதி பலம் பலிக்கும் பொருட்டு வேறு காரணமாகிய பூமியும்,—முளரிகட்கு- பக்குவ முறைமைத் தப்பாதலருந் தாமரைப் பூவுக்கு,—இரவியும் போல்-சூரியனும் போல,—ஆசி-ஈசான,—அறை தருந் தத்தங் கன்மத்தளவினுக்கு அளிப்பன் - சொல்லப்பட்ட பலவித பக்குவ சக்காரி கன்மங்களைப் பின்சென்று உயிர்களைப் போதிப்பன்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அவற்றுள், முதற்கூற்றுப் பொருளை உள்ளடக்கி நிற்கு மிரண்டாங் கூற்றை அவ்வம் மதம் பற்றி யாசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்துகின்றார்

அறிவித்தற் பொருட்டு இறைவன் வேண்டப்படுமெனக் கொள்வாரகும், அறிவுக ளொருபெற்றியவாதலின்றி வேற்றத் தாழ்வுகளாய நிகழ்ச்சிக்குக் காரணங் கன்மமெனக் கொள்ள வேண்டுதலின் அதுவே யனைத்தும் வேறு மோ ரறிவிப்பானைக் கோடன் மிகையாமாலெனின்? அற்றன்று. பங்கயத்தின் அலர்ச்சிக்குப் பங்கயமேயன்றி இரவியும், உழவுமுதலிய செயல்களின் பயனுக்கு அச்செயலேயன்றி விளைநிலமுங் காரணமாதல்

கண்டாமன்றே! அவைபோல் அவ்வக் கன்மம் பக்குவமாகலு ம் பயன்றந்தலும் வேறோ ரிறைவனையின்றி யமையாமையின் மினைக்கயாதல் யாண்டைய தென்பதாம்.

குறைவதிகங்கடத்தங்கன்மமெனக் காரணத்தைக் காரிய மாக வுபசரித்தார்.

செயல் ஆகுபெயர்.

முறைக்குஞ்செயல், உழுதல் எருப்பெய்தல் விதைத்தல் நட்ட ல் நீர்காலயாத்தல் காத்தலென்றிம்முறையாற்றப்படுஞ்செ யலென்க.

அற்றேல் கன்மத்தோடு கூடிய வுயிரே அதற்குக் கார ணமாதலமையும், வேறுமோ ரிறைவனொன்றுக் கென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

ஆன்மா தானே யறியுமொழிந்து சிவனறிவிக்கவேண்டு வதில்லை, சிவனறிவிக்கில் எல்லார்க்கு மறிவொத்திருக்கவேண் டும் என்ற அவிகாரவாதியை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

இறைவனே யறிவிப்பானேலீண்டறிவெவர்க்கு மொக்கு ம் - பரமேசுவரன் சர்வான்மாக்களுக்கு மறிவுகளைக் கொடுப்ப னென்று சொல்லில் இவ்விடத்துச் சர்வான்மாக்களுக்கும் அறிவு ஒத்திருக்கவேணும் — குறை வதிகங்கடத்தங்கன்மமேற் கோமானவேண்டாம் - தங்கள் கன்மத்துக்கீடாக ஆன்மாக் களுக்குப் பிரஞ்ஞை யேறிக்குறைந்திருக்குமாகில் கர்த்தாவேவ ண்டியதில்லை கன்மம் ஜடமாகையாலும் ஆன்மாவுக்குத் தன க்கென்ன வறிவில்லாதபடியாலும் சர்த்தாவே கன்மத்தையறி

ந்து கூட்டவேண்டும் கர்த்தா வப்படி யறிந்து கூட்டில் விகாரியாகாரோ வெனின்? அப்படிக் கூட்டினுங் கர்த்தா விகாரியாகான் அதெங்ஙனே யெனின்?—முறைதரு செயற்குப்பாரும - கிருஷிசெய்வாருக்குச் செய்யப்பட்ட செய்திக்கீடாகக் கிரமத்திலே பலிக்கிற க்ஷேத்திரமும்,—முளரிகட் கிரவியும்போல-பக்குவப்பட்ட தாமரைக்கு ஆதித்தனைப்போலவும், (செய்த செய்திகளுக்குத் தக்க பயனைக் கொடுக்கச்செய்தே பூமியானது விகாரமற்று நின்றமுறைமை போலவும், ஆதித்தனுமே காரியப்படுகைச் செய்தே ஆதித்தன் விகாரமற்று நின்ற முறைமைபோலவும்),—அறைதரு தத்தங் கன்மத் தளவினி லளிப்பனாகி - சொல்லப்பட்ட தந்தங் கன்மத்துக் கீடாக ஆன்மாக்களையும் பிரபஞ்ச விஷயங்களையுங் கூட்டிக் காரியப்படுத்துகைச் செய்தேயும் சிவனுக்கு விகாரமில்லை

ஆன்மா தானேயறியுமென்ற அவிகாரவாதியை மறுத்தற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் "இருந்தன கேவலி திருந்திடுமியாக - வறிவினதாயிற் பொறிபுலனென்னை - மற்றவைபற்றி யுற்றறிந்திடலி - னறிவெனவழங்கு முயிரோனவுணா தகல-காணுநர்கண்ணினை கைகொடுத்திட்டவிப-பூணும் பொருளின் பெயர்பல்புகற-லென்னுங்கிளவித் தனதெருத்தகுமே" என்னுமதங் கண்டுகொள்க

இதனாற் சொல்லியது, சிவன் சர்வான்மாக்களுக்கும் அறிவிப்பனாகில் அறிகிறமுறைமை யெல்லார்க்கு மொத்திருக்க வேண்டும் என்றும், அவரவர் கன்மத்துக்கீடாக அறிவு ஏறிக் குறைந்திருக்கு மெனில்? சிவன் வேண்டுவதில்லை என்றும், அவிகாரவாதி சொல்ல, பூமியானது செய்தசெய்த தொழிலுக்குத் தக்க பயனைக் கொடுக்கச்செய்தேயும், ஆதித்தன் தாமரையைப் பக்குவப்படுத்துகைச் செய்தேயும் விகாரமற்றின்ற தன்

மைபோல சிவனும் ஆன்மாக்களையும் பிரபஞ்ச விஷயத்தை யும் கூட்டிப் புசிப்பிக்கச் செய்தேயும் விகாரமற்று நிற்பனென் னும் முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

அறிவிப்பா னிறைவனே லீண்டறி வெவ்வாக்கு மொக்கும்- அறிவித்தற் பொருட்டு இறைவனே வேண்டப்படுமெனக் கொ ள்வார்க்கு மறிவுக ளெவ்வார்க்கு மொருபெற்றிய வாதலின்றி,—கு றைவுதிகளுட் டத்துவ சனமமேல் நோமான வேண்டா-ஏற்றத் தாழ்வாய நிகழ்தற்குக் காரணம் கன்மமெனக் கொள்ள வேண் டுதலி னதுவே யமையும் வேறுமோ ரறிவிப்பானைக் கோடன் மிகையாமா லெனின்? அற்றன்று —முளரிகட் கிரவியும் - பங்க யத்தி னலர்ச்சிக்குப் பங்கயமேயன்றி யிரவியும்,— முறைதரு ஞ் செயற்கும் பாநும்போல -உழுதல் எருப்பெய்தல் வித்தல் கட்டல் நீர்கால்யாத்தல் காத்த லிம்முறையாற் றரப்படும் உழ வுமுதலிய செயல்களின் பயனுக்கு அச்செயலேயன்றி விளைநில முங் காரணமாதல் கண்டா மன்றே! அவைபோல,—அதைதரு கத்தங்க கன்மத்தளவினுக களிப்பறுத்- சொல்லுகின்ற வவ்வ க்கன்மம் பகுவமாதலும் பயனற்ருதலும்,— வேறோரிறைவ னையின்றி யமையாமையின் மிகையாதல் யாண்டைய தென்ப தாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

உமதுகர்த்தா வுணர்த்த வேண்டா, ஆன்மாத்தானே யறியுமெ ன்று சொல்லுவானை நோக்கி மறுத்துணர்த்துகின்றார்

அறிந்திடுமான்மா வொன்றை மற்றொன்று லறி
தலானு, மறிந்தவை மறத்தலானு மறிவிக்க வறித
லானு, மறிந்திடுந் தன்னையுந்தா னறியாமை யானுந்
தானே, யறிந்திடு மறிவனன்று மறிவிக்க வறிவனன்
றே (௫)

| | |
|---|---|
| (இ-ள்) அறிந்திடுமான்மா வொன்றை மற்றொன்று லறிதலானும் | ஆன்மா யாதாமொன்றை யறியும்பொழுது தானாகவறியான், ஒவ்வொரு விடயங்களை யொவ்வோ ரிந்திரியங்களினாலே வியாபித்துக்கொண் டறிகையாலும், |
| அறிந்தவை மறத்தலானும் | இப்படி யறிந்தபொருளை மலமேலீட்டினாலோரோ ரவத்தரங்களிலே யதனை மறந்து விடுகையாலும், |
| அறிவிக்க வறிதலானும் | ஒருபோதறிவன முன்னிலையாக நின் றுணாதலானும், |
| அறிந்திடுந் தன்னையுந்தா னறியாமை யானும் | எல்லாத்தையு மறிகிற தான றிரோதாயி மறைக்கத் தன்னை யறியாதிருக்கை யாலும், |
| தானே யறிந்திடு மறிவனன்றும் | சிவனைப்போலத் தானே யறியத்தக்க வறிவுகளை யுடையனல்லன். |
| அறிவிக்க வறிவனன்றே | ஆகையா லொருத்தன் போதிக்க வறியா நிற்பன் எ-று. |

இதற்குப் பௌடகாரத்தும நிச்சுவாசத்து மறிக (௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

மேலான்மாக்கள் ஸ்வதந்த்ரமாக வொன்றையு மறியார்கள் சிவனறிவிக்கவே யறிவார்க ளென்பதை ஏது பூர்வமாகக் கூறுகின்றார்.

சர்வத்தையு மறிய யோக்கியனாகியுள்ள ஆன்மாவானவன் சப்தாதி விஷயங்களை ச்ரோத்ராதி யிந்திரியங்களினாலே யறிகையினாலும், அந்த வஸ்துக்களை மறக்கையினாலும், ஒருத்தராலே போதிக்க வறிகையினாலும், அல்லது விஷயங்களை யறியுந் தன்னைத்தா னறியாமையாலும், தானே யறியுஞ் ஞான ஸ்வரூபியல்ல † ஸ்வரூப பரப்பிரகாசனான சிவனறிவிக்க வறியும் ஞானஸ்வரூபியேயென்றிதன் பொருள்.

† ஸ்வபரப்பிரகாசன் - தன்னையும் எதிரியையும் தெரிவிக்கிறவன்.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

கருத்தா வறிவிக்கவேண்டியதில்லைக் கன்மத்துக் கீடாக ஆன்மாவே யறிவானென்னின், மறுத்துணர்த்துகின்றார்.

அறிந்திடுமான்மா - அறியுந்தன்மையை யுடைய உயிர்,—ஒன்றை - சத்தமுதலிய விடயங்களி லொரு விடயத்தை,—மற்றொன்றால் - சோத்திரமுதலிய விந்திரியங்களி லோரிந்திரியத்தால்,—அறிதலானும் - உணர்தலானும்,—அறிந்தவை மறத்தலானும் - உணர்ந்த சத்தமுதலிய விஷயங்களை மலத்தோடு தமோகுண மருவ நினைவறுதலானும்,—அறிவிக்க வறிதலானும் - அறிந்தவன் போதிக்க வறிதலானும்,—அறிந்திடுமே தன்னை

யுந்தா னறியாமை யானும் - தன்னை நானென்று சுவசம்வேதனப் பிரத்தியட்சத்தினின்று நின்று கர்த்தாவாகி யறிக்காலும், சாவஞ்ஞனுயும் சாவகர்த்தாவாயும் சிவனைப்போலிருக்குந் தன்னை யுள்ளபடி யுணரா திருத்தலானும்,— தானே யறிந்திடு மறிவனன்றும் - மலம் சிற்சத்தியை மறைத்தலால் மறைப்பில்லாத முத்தியிற் சுதந்திர வறிவனுனுலும் பெத்தத்திற் சுவதந்திர வறிவனல்லனும்,—அறிவிக்க வறிவனன்றே - சிவன் பரதேகனுக்குத்தேகந் தூலதேகமாகும் திரிதேகங்களைக் கூட்டிப் போதிப்பக்கின்றின்று விருப்பனன்றே

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இந்நான் கேதுக்களானும் அறிவு நிகழ்ச்சிக்குப் பொறிபுலன் முதலியவற்றோடொப்ப வேறுகாரணத்தை யவாய்நிற்பதன்றி உயிர் தானே யறியவற் றன்றென்பதாம்.

ஒன்றை யொன்றின்றி யறிதலே யதனியல்பென்பாரை நோக்கி அறிந்ததை மறத்தலானு மென்றும், அறிந்ததனைப் பின்னறியு வேண்டாமையின் மறக்கலாயிற் றென்பாரை நோக்கி மீளவறிவிக்க வறிதலானு மென்றும், எவ்வாற்றானு மறிதலிற் றிரிபிலனன்றே யென்பாரை நோக்கி அறிந்திடுந் தன்னையுந்தா னறியாமையானு மென்றுங் கூறினார்.

இதனுனே சாங்கியமதம் பரிகரித்து முதற்கூற்றை வலியுறுத்தவாறாயிற்று.

விதந்து கூறுத ஒன்றை யொன்றினு லென்ப பொதுப்படக் கூறியது மதன்பொருட்டு.

அற்றேல் ஈண்டொன்றுணர்த்தினதெனப்பட்ட மாயேயமே யத்தக்கமையும், இறைவனெற்றுக்கென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

ஆன்மா தானே யறிவன் அவனுக்கொருவ ரறிவிக்க வேண்டுவதில்லை யென்ற அவிகார வாதியை நோக்கி மேலுமருந்தருளிச் செய்கிறார்

அறிந்திடு மான்மாவொன்றை யொன்றுலறிதலானும் - தானே யறியுமென்று நீ சொன்ன வான்மா வவ்வொரு விஷயங்களை யவ்வொரு இந்திரியங்களைப் பொருந்தி நின்று அறிய வேண்டுகையாலும், அதுவன்றியும்,—அறிந்ததை மறத்தலானும்- ஒருவரறிவிக்க வறிந்ததையிறையும் மறந்து விடுகையாலும்,—அறிவிக்க வறிதலானும் - அந்த மறந்ததை தன்னையும் மீளவுமொருவ ரறிவிக்க வறிகையாலும்,—அறிந்திடுந்தன்னையுந் தானறியாமையாலும - இந்த முறைமைகளிலே அறிந்துவருகிற தன்னுடைய வுண்மையையும் தானறியமாட்டாதாகையாலும்;—தானேயறிந்திடு மறிவனன்றும - இங்ஙனஞ் சொன்ன முறைமைகளால் இந்த வான்மா தானே யறியத்தக்க வறிவை யுடையவனல்லன். ஆனால் இவனறியும்படி யேதென்னில்?—அறிவிக்கவறிவனன்றே - பரமேஶ்வர னறிவிக்க வறியுமதொழிந்து ஆன்மா தானாக வொன்றையு மறியமாட்டான்

இதனாற் சொல்லியது, சிவனறிவிக்க வான்மா வறியுமதொழிந்து பல பிரகாரத்தாலும் தானாக வறிவனென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அறிந்திடுமான்மா - அறியப்பட்டுவரு மிவ்வுயிர்,—ஒன்றை யொன்றினு லறிதலானும் - ஒவ்வொருவிடயங்களை யொவ்வொரு இந்திரியத்தா லறிதலானும்,—அறிந்தவை மறத்தலானும் - அறியப்பட்டவற்றை மீளமறத்தலானும்,—அறிவிக்க வறிதலானும் - ஒருவனுணர்த்த வுணர்தலானும்,—அறிந்திடுந் தன்னையுந் தானறியாமையாலும் - இவ்வாறறிகின்ற தன்னையுந் தானறியாமையாலும்,—தானே யறிந்திடு மறிவனன்றும் - முதல்வனைப்போல சுதந்திரவறிவின்றி,—அறிவிக்க அறிவனன்றே - அறிவிக்க அறியுந் தன்மையது

இதனானே சாங்கியமதம் பரிகரித்து முதற்கூற்றை வலியுத்தவாறு மாயிற்று

---

## மறைஞானதேசிகருரை.

முதல் விருத்தத்திற் றெரிந்தனையாம்படியே கர்த்தாதானே
கருவிமுதலிய வொன்பதானு முணர்த்து முறைமை
யுணர்த்துகின்றார்

கருவியாம் பொருளாற்காட்டுங் காலத்தாங் கரு
மத்தனானு, முருவினா லளவானுலா மொருவரா லுண
ர்த்தலானு, மருவனு யுண்மைதன்னி லமியாது நிற்ற
லானு, மொருவனே யனைத்தினாலு முணர்த்துவ னரு
ளினாலே. (ச)

(இ - ள்) கருவி தத்துவங்களாலும்

யால

| | |
|---|---|
| பொருளால் | விடயங்களாலும் |
| காட்டால் | சோமசூரியாக்னிப் பிரகாசங்களாலும் |
| காலத்தால் | செல்காலமுதலிய மூன்று காலத்தாலும் |
| கன்மத்தினால் | புண்ணியபாவமாகிய கன்மத்தாலும் |
| உருவினால் | தநுவாலும் |
| அளவால் | அளவைகளாலும் |
| நூலால் | சாத்திரங்களாலும் |
| ஒருவரால் | வேறொருவராலும் |
| உணர்த்தலானும் | இப்படிப் பலவித்தத்தா லறிவிக்க வேண்டுமையாலும் |
| அருவாயுண்மைத்தனி லறியாது நிற்றலானும் | அந்த ஆன்மா நமக்கு அரூபமே யுண்மையான வடிவென்று முறைமையை யறியாமனிற்கையாலும், கேவலாவத்தையிலே யருவமே வடிவாய வொன்றையு மறியா னிற்கையாலும், |
| ஒருவனே யனைத்திறனுமுணர்த்துவனருளினாலே. | தனது காருண்ணியத்தினாலே காத்தாவானவ னிவைக ளெல்லாவற்றையுங் கொண்டிவனுக் குணர்த்தா நிற்பன் என்று (௮) |

உமமை தொசகது

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலிதவுமது

ஞானேந்திரியங்களினாலும் விஷய பூத பதார்த்தங்களினாலும் § சௌராதிப பிரகாசங்களினாலும் வசந்தாதி ருதுகாலங்களினாலும் பாருடைய ‡ யகேஷிதாதிக் கிரியைகளினா

னும் பிரத்தியக்ஷானுமான ஆகமங்களினாலும் தத்தக் காரியா + பிஞ்ஞரா யிருக்கிற ஆப்தராலும் அறிவிக்கையினாலும் அநாதி சித்தமாகிய கேவலாவஸ்தையிலே அரூபியுமா யோரறிவு மற்றிருக்கையாலும் ஜக தேகநாயகனாகிய சிவனே கிருபையினாலே கீழ்ச்சொன்ன சகலஏதுக்களினாலு மான்மாக்க ளறிவைப் பிரகாசிப்பிப்பார்

§ சௌரம்-சூரியனது ‡ நயனேங்கிதம்-கண்சாடை + அபிஞ்ஞா - அறிந்தவர்

---

## ஞானப்பிரகாசருணா வருமாறு.

---

இவனைப்போதிக்கு முறைமையைப் போதிக்கின்றார்.

கருவியால் - பிரகிருதி குணதத்துவ நீங்கலாக்க கலாதத்துவம் முதல் இந்திரியமீறுக்குங் கரணங்களால்,—பொருளால்-பூதந்தன்மாத்திரைமுதலிய தத்துவத்திரட்சித்தாதுவிகாரமாலை சந்தனம் மகளிர்முதலிய போக்கியவஸ்துவினால்,—காட்டால்- சூரியப்பிரகாசமுதலிய வொளியால்,—காலத்தால்-நியதி துணையாகுஞ் சூக்குமகாலதத்துவப் பிரேரண சகாய தூலகாலதத்துவகாரியமாகிய செலகால நிகழ்காலம் வருங்கால மென்கின்ற காலத்தால்—கருமந்தனாலே - புண்ணியபாவ மென்கிற வதிஷ்டத்தால்,—உருவினால்-(கருவியாலென்பது சூக்கும தேகத்தாலென்று பொருளாதலால்,) உருவினாலென்றது தூலசரீரத்தால்,—அளவால் -(முன் கருவியா லென்றது கொண்டு பொருள் மறைப்புப் பொருந்தாத கருவிகளுக்குஞ் சிற்சத்திப் பிரத்தியட்சஞ் சித்தித்தலால்,(இவ்விடத்து அளவாலென்றது பொருள் மறைப்புப்பொருந்திய கருவிகளுக்கு மிலிங்கஞ்சேர்க்கச் சிற்சத்தியனுமானத்தால்,)—நூலால்-பொருள் மறைப்புப் பொரு

த்துங் கருவிகட்குஞ் சத்தாஞ் சாரத சிற்சத்தியாகு மாசமத்தால்,—ஒருவனால் - ஆகமத்தடங்கும் உலோகவாதத்தால்,—உணர்த்தலானும் - போதித்தலானும்,— உண்மைத்தன்னி லருவனு யறியாமைநிற்றலானும் - கேவலத்தத்தில் சூக்குமபர தேகங்க ளில்லாதிருக்கவுஞ் சுதந்தர வறிவனுயத் தோற்றுவித்தலானும்,(சிவன் முதலியத்தி பண்ணுமிடத்துக் கருவியின் மறையாது பனலரி உணர்த்தி நிற்றலானும் என்னும் பொருள் ) ஒருவனே-ஒப்பற்ற சிவனே,—எல்லாத்தானும் - சொல்லிய கருவிமுதலியவற்றால்,—அருளினாலே - அவற்றின்மறைந் தவற்றைச் செலுத்துஞ் சிவசத்தியால்,—உணர்த்துவன் - போதிப்பன்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

கருவிமுதலிய வெட்டும் ஒருசேதனப் பொருளுங் கூடி நின் றொருவிடயத்தை யுணர்த்த உயிருணர்தலானும், அலனுழி யுணராமையானும், இவையனைத்தையுங் கொண்டுகூட்டி யறிவிப்பா னொருசேதனன் வேறு வேண்டப்படுமாகலான், இறைவனையின்றி அறிதலமையா தென்பதாம்.

கருவி உயிர்செலுத்தப்படு மான்மதத்துவம்.

பொருள் தாத்துவிகம்

காட்டு உயிரினறிவிச்சை செயல்களை விளக்குவனவாய கலைமுதலியன

காலம் கன்மத்தை முந்தாது பிந்தாது வரையறுத்துச் செலுத்துங் காலதத்துவம்.

கருமம் கன்மத்தை யேறாது குறையாது நிறுத்து நியதி தத்துவம்.

உரு உடம்பு

அளவை பிரமாணம்.

நூல் நூல்கட்குக் காரணமாய நால்வகை வாக்கு.

ஒருவிடயத்தை யறிதற்கண் இவ்வாறு ளொன்றையின்றியு மமையாமை கண்டுகொள்க.

கருமமும் நூலும் ஆகுபெயர்
இயற்பெயர் பொருளாகவைத் துரைப்பாருமுளர்
தன்னுண்மை உண்மையெனத் தலைக்குறை
உண்மையிலொன்று மில்லாதல்பற்றி அருவனென்றார்

இவைமூன்று செய்யுளானும், முறையே கன்மமு முயிரு மாயையுமென்னு மிவையே ஆண்டைக் கலையுமென்னு மாருகதர் மீமாஞ்சகர் சாங்கியர் முதலியோரை மறுத்துப் பரிசேடவளவையான் அறிதற்கு சிவனேயெல்லா மறிந் தறிவித் தறிதல் வலியுறுத்தப்பட்டது

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

சிவன், ஆன்மாவுக்கு அறிவிக்குமிடத்துப் பல பிரகாரத்தானு மறிவித்தா லறியுமதொழிந்து தானாக வொன்றையு மறியா னென்று மேலு மருளிச் செய்கிறார்.

கருவியால் - இந்திரியங்களாலும்,—அந்தக்கரணங்களாலும்,—பொருளால் - விஷயங்களாலும்,—காட்டால் - இவனுக்குக் காட்டாய் நிற்கிற சுத்த தத்துவங்களாலும்,—காலத்தால் - வித்தியா தத்துவங்களாலும்,— கன்மத்தினால் - புண்ணியபாவங்களாலும்,—உருவினால் - பூதங்களாலும்,—அளவால் - அளவைப் பிரமாணங்களாலும்,—நூலால் - சாத்திரங்களாலும்,—

ஒருவரால் - அவன் அவள் அவராலும்,—உணர்த்தலானும்-முன் சொல்லப்பட்ட இவையிற்றைக் கொண்டு அறிவிக்கவேண்டுகையாலும்,—அருவன்று யுண்மைதனி லறியாது நிற்றலானும்-தன் னுடைய வுண்மையான கேவலத்தைச் விசாரித்துப் பார்க்கில் அ ரூபியுமாய்த் தானுகவொன்றையு மறியமாட்டாமல் நிற்கையாலும்,—ஒருவனே யெல்லாத்தாலு முணர்த்துவ னருளினாலே-பரமேசுவரனே யிவையெல்லாத்தையும் ஆன்மாவுக்குக் கொடுத்துத் தன்னுடைய காருண்ணியத்தினாலே யறிவியா நிற்பன். ஆகையால் ஆன்மா தானுக வறிபான்

இதன்று சொல்லியது, ஆன்மாவுக்குக் காட்டாய் நிற்கிற சுத்தத் தத்துவங்கள் முதலாயுள்ள கருவிகரணங்களாலும் புண் ணிய பாவங்களாலும் அளவைப் பிரமாணங்களாலும் சாத்திரங்களாலும் அவன் அவள் அவராலும் ஆக இவையிற்றைக் கொண்டு அறிவிக்க வேண்டுகையாலும், தனக் குண்மையான கேவலத்தில் தானுக வொன்றையும் அறியாதிருக்கையாலும், பரமேசுவரன் தன்னுடைய காருண்ணியத்தினாலே இவை யெல்லாத்தாலும் அறிவியாநிற்பன், ஆன்மா பாசபந்தியாகையால் என் னு முறைமையு மறிவித்தது.

'அறிந்திடுங் கருவியால்' என்ற திருவிருத்த மிரண்டுக்கும் முன்னற திருவிருத்தத்துக்கு இட்டப் பிரமாணம் என்னுமது வு கண்டுகொள்க

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

கருவியால் - உயிர்செலுத்தப்படும் ஆன்ம தத்துவத்தாலும்,—பொருளால் - தாத்துவிகமாகிய பொருளாலும்,— காட்டால்-உயிரி னறிவிச்சை செயல்களை விளக்குவனவாய் கலைமுத

வியன வற்றாலும்,—காலத்தால்-கன்மத்தை மூக்காது பக்குவ வரையறுத்துச் செலுத்துங் காலதத்துவத்தாலும்,—கருமந் தன்னால் - கன்மத்தை யேறாது குறையாது நிறுத்தும் நியதித் தத்துவத்தாலும்,—உருவினால்-உடம்பாலும்,—அளவால் - பிரமாணங்களினாலும்,—நூலால்-நூல்கட்குக் காரணமாகிய நால்வகை வாக்குகளாலும்,—ஒருவராலுணர்த்தலானும்-ஒரு சேதனப் பொருளா லொருவிடயத்தை யுணர்த்தவுயிருணர்தலானும்,—உண்மைதன்னி லருவனாலறியாது நிற்றலானும் - அல்லுழித் தன்னுண்மையி லருவனா யுணராமையானும்,— எல்லாத்தாலு மருளினாலே யுணர்த்தவனொருவனே - இவை யனைத்தையுங் கொண்டு கூட்டி யருளாலறிவிப்பானொரு சேதனன் வேறு வேண்டப்படுமாகலா னிறைவனையின்றி யறிதலமையா தென்பதாம்.

இவை மூன்று செய்யுளானும்,முறையே கன்ம முயிரு மாயையுமெனுமிவையே யாண்டைக் கையுமெனு மாருகதா மீமாஞ்சகா சாங்கியா முதலியோரை மறுத்துப் பாரிசேடவளவையா னறிதருஞ் சிவனே யெல்லா மறிந்தறிவித்து நிற்றல் வலியுறுத்தப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை



மேலதனை வற்புறுத்தி யுணர்த்துகின்றார்

கருவியும் பொருளுங்காட்டுங் காலமுங் கன்மந்
தானு, முருவமு மளவுநூலு மொருவரு முணர்த்தலி
னறி, யருவனு மகிலமெல்லா மறிந்தவை யாக்கிவேறா,
யொருவனே யுயிர்கட்கெல்லா முயிருமா யுணர்த்தி
நிற்பன். (௫)

| | |
|---|---|
| (இ-ள்.) கருவியு மபொருங காட்டுங காலமுங கனம நதாறு முருவமு மளவு நூலுமொருவருமுணாதத லினறி | முற்கூறிய வொன்பதாலு மொருவராலு முணாதத வுணாாமற சாவததையு மறிநத வருன படியாலே பரமகாததாவாய் நினறும,அபபொழுத ரூபியாயோ வரூபியாயோ வெனனில? |
| அருவனு யகில மெலலா மறிநது | அநதக காததாவான ரூபசொரூபமாயய பிரபஞச மெலலாததையு முளளபடியறிநது. |
| அவை யாககி வேறாய் | அவையிறறை யுணடாககித திதியுஞசெய் தவையிறறுககுத தான வேறுமாய, ஆறு லெபபொழுதும வேறுமா யிருபபனு வெனனில்? |
| ஒருவனே யுயி ர்கட்கெல்லா முயிருமா யுணாத தி நிறபன. | இபபடிச சிவனெல்லாததையு மறிந தான மாககளுககுப் பிரபஞசததுககு வேறாயிருந தானே யாகிலும வியாததியிறைலே யந்தக ாததா தானே யுயிருககுயிராய்ச சாவான மாககளுககு மறிவைக கொடுத தறிவியா நி றபன எ-று |

இநதவிரணடிககு நிசுவாச காரிகை ஏனவறிக (௫)

---

## சிவாகரயோகியருளை வருமாறு.

——o——

சிவனாறு னெவவா றறிவரென்னில்? மேற் சிவன ஸ்வதந்த்ர ஞானப பிரகாச ஸ்வரூபராய் தேகேந்திரியாதி ரஹிதராக வே யெல்லாததையு மறிந தெல்லாப் பிரபஞ்சததையு முண்டா

கசி யெல்லாவுயிர்கட்கு முயிருமா யறிவித்து நிற்ப னென்பது கூறுகின்றது

இழச சொல்லிப்போநத தேகேநதிரியாதி நிரபேக்ஷைடா கவே சகலததையு மேக காலததிலே * யதாவததாக வறிந து தேக † ரஹிதனுக நின்றே சகல ஜகததையு முணடாககி ய தற கநயமுமாய, சகலானமாககளிடததிலு மநதாயாமியாக நின்று பரிபாகாநு குணமாக வறிவுகளைப பிரகாசிபபிடப னெ னறிதனபொருள

* யதாவத - சரியாய, † ரஹிதன - இல்லாதவன.

தத்ரோக்தம் - ரௌரவே — நித்யோதிதா நவக்ஷி
ஞவிஹேதோ ரீஶ்வரஸ்யாபக் । ஜ்ஞேயா யிஷேய கா
யாநாளா நகாலே மஹாஸ்வாதிகம் வரூ ॥ தேந ஸக்திவ
ராவெக்ஷாஸ்ரவீஶ்வரஸ்யாஜ்யே। நகா லிஷி
ஷஸம்ஜ்ஞாநம் தீயேவ விஷய ஹை ஐதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சிவன கலாதததவாதி கருவி விளககுக சலப்பினறி நின மல சிறசததி மாததிரததாற சுதநதிர வறிவனுயிருபப னெனபது ேறாறுவிக கினறா.

வெளிபபொருள

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

இறைவனுககுக் கருவிமுதலியன கூடி அறிவு நிகழ வேண டாமையின உயிர்கட்குபபோலத் தனக்குமே லொருவ னவாவ

படும் போலுமென்னு மகவத்தைக் கிடமின்றித் தானே தமிய னாயறிந்து மாக்கியு முணர்த்தியு நிற்குமென்பதாம்.

உலகெலா மறிந்தென்றது கேவலத்திற் சூக்குமவைந்தொ ழில் செய்தன மேற்று.

ஆக்கியென்வே இனம்பற்றி ஏனைநான்கு தொழில்களு மு டன்கொள்ளப்படும்.

அவை தூலவைந்தொழி லென்பது.

உணர்த்தி நிற்பனென்றது முதலவத்தை யடைந்துயிட்ட தே செய்றபாலனவாய ஈண்டெடுத்துக் கொண்ட வதிசூக்கு மவைந்தொழின் மேற்று.

அறிதலு மாக்குதலுமாகிய இருதிறத் தைந்தொழிலும் மு தல்வன செயலாதன்மேற் கூறிப்போந்தமையின் அவைபோ லிவையும் முதல்வன் ரெழிலேயா மென்பார், அறிந் தாக்கி யுணர்த்தி நிற்பனென வுடன் கூறினார்.

இதனானே மேற்கூறியதுபற்றி அகவத்தை யின்றுமாறு கூ றப்பட்டது.

அற்றுயினும், கருவியறிதலால் வரும் பயன் உயிர்க்காயவா றுபோல உயிரறிதலால் வரும் பயனும் அதற்கே யெய்தக்கப்படு மிறைவனுக் காவான் செல்லும் செல்லவே யிறைவனும் பந்த முறுவ னெனப்பட்டு வழுவாமாகலின், இறைவன் உயிர்போ லறிவிப்ப னென்றால் இழுக்காம் போலு மென்னு மவவாதிகளை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யு ளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இப்படி யறிவிக்கிறதும் அறிவிக்க வறிகிறதும் எல்லா மத் தச் சிவன் தானேயாயிருக்க, ஓரான்மா வுண்டென்றதென நம் பு என்ற பரிணமவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

கருவியும் பொருளுங் காட்டுங் காலமுங் கன்மந்தானு முருவமு மளவுநூலு மொருவரு முணர்த்தலின்றி - இந்திரியங்களாலும் அந்தக் கரணங்களாலும் விஷயங்களாலும் சிவதத்துவங்களாலும் வித்தியா தத்துவங்களாலும் புண்ணிய பாவங்களாலும் பூதங்களாலும் அளவைப் பிரமாணங்களாலும் சாத்திரங்களாலும் அவன் அவள் அவராலும் அறிவிக்க வேண்டுவதின்றி,—அருவனா யகிலமெல்லா மறிந்து - அரூபியாயிருந்து பிரபஞ்சத்தை யெல்லாந் தன்னுடைய ஞானத்தினாலே யறிந்து,—அவையாக்கி - அந்தப் பிரபஞ்சத்தையெல்லாந் தன்னுடைய கிரியாசத்தியாலே யுண்டாக்கி,—வேறாய் - அந்தப் பிரபஞ்சத்திற் றோயாமல் விலகாதிருந்து,— ஒருவனே யுயிர்கட்கெல்லா முயிருமா யுணரா நிற்பவன் - அந்தப் பரமேசுவரனே சர்வான்மாக்களுக்குப் பிராணனுமாய் அவரவர் கன்மத்துக்கீடாகப் பிரபஞ்ச விஷயத்தை யறிவித்துநிற்பவன் ஆகையால் அறிவிக்கிற முதலும் அறிவிக்கு முதலும் இரண்டு மான்மா வல்ல அறிவிக்க அறிகிற முதல் ஆன்மாவென் றறிவாயாக.

இதற்குப் பிரமாணஞ் சிவஞானபோதம்-௫-சூ,௩-வெ "வெய்யோ னொளியி லொளிபெற்று விளங்காது, வெய்யோனை யாகாத மீன்போல்-வெய்யவனிற், கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம் புலனைக், கண்டுண மன்னுக்கிலை காண்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சிவதத்துவ முதலாயுள்ள கருவிகரணங்களாலும் புண்ணியபாவங்களாலும் அளவைப் பிரமாணங்களாலும் சாத்திரங்களாலும் அவன் அவள் அவராலும் ஆக இவைபிறரைக்கொண் டறிய வேண்டுகையின்றி அதேகியாய் நின்று பிரபஞ்சத்தை யெல்லா மறிந்து உண்டாக்கியும் அதிற்றோய்வற நிற்பனென்றும், சர்வான்மாக்களுக்கும் பிராணனுமாய்

அவரவர் கன்மத்துக் கீடாகப் பிரபஞ்ச விஷயத்தை யறிவித்து நிற்பன் பரமேஶ்வரன் என்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—0—

ஒருவனே - இறைவனே,—கருவியும் பொருளும் காட்டும் காலமும் கருமத்தானு முருவமு மளவு நூலு மொருவரு முணரா தவின்றி யருவனாய் வேறுப - தனக்குக் கருவிமுதலியன கூடி யறிவு நிகழவேண்டாமையி னுயிர்கட்குப் போலத் தனக்குமே லொருவன் வரப்படும்போலு மென்னு மனவத்தைக் கிடமின்றித் தானேதமியனாய்,— அகில மெல்லாமறிந்து - கேவலத்தி றாக்கும் வைகதொழில் செய்தும்,—அவைபாக்கி - தூலவைக தொழில் செய்தும்,— உயிர்கட் கெல்லாம் - ஆன்மாக்கட் கெல்லாம்,—உயிருமா யுணர்த்தி நிற்பன - அதிசூக்கும ஐந்தொழில் செய்து நிற்பன

இதனானே மேற்கூறியதுபற்றி யனவத்தை யின்றாமாறு கூறப்பட்டது

---

## மறைஞானதேசிகர் உரை.

—0—

இப்படி யுமதுசிவ னெல்லாத்தையு மறிந் தான்மாக்களுக் கறிவிப்பனு லவனுஞ் சுகதுக்கங்க ளனுபவிப்ப னெனின்? அவன் சுகதுக்கங்களை யறிந் தனுபவிப்பதில்லை “காட்டுவாரக் குண டோகளிப் பிந்திரசாலத் - தாட்டுவாரக்குந் தோற்கூத்தாம்” என் பதனா லான்மாக்களுக்குச் சுகதுக்கங்களையு மறியு மறிவையு ங் கொடுத்துத் தானதிகாரியாய் நின்று சுகாதிகளையு மனுபவி

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

இவ்வாறான்மாக்க ளிடத்தில் அந்தர்யாமியாய் நின்று † நாநாவிதமாகப் பிரேரிக்கையால் சிவன் விகாரி யெனின்? விகாரமானது மாயாசம்பந்தம் சிவன் அநாதி நின்மலனாகை யால் மாயை பொருந்தாது ஆன்மாக்களுடைய அறிவு பிரகா சிப்பது சிவன் சந்நிதிமாத்திரத்திலே யென்பது மேற்கூறுகி ன்றது

† நாநாவிதம் - பலவிதம்

மீமாம்சகன் ஈச்சுவர னான்மாக்களைப் பிரேரிக்கையால் விகா ரியெனவில்லைக் காந்தக் காலின் சன்னதியிலே பிரபஞ்ச சேஷ்டையு ண்டாமென்னும் வேதவாக்கியத்தை வேதவாதியாயிருக்கிற நீயு மிவ்விடத்து மறந்தாய்? விகாரமாவது மாயாசம்பந்த மாகை யால் சிவன் மாயையைப் பொருந்தான் மாயைசடமாகையால் பிரகாசத்தி னிடத்தி லந்தகாரம் நில்லாததுபோல நித்திய வி யாபக சித்ரூபியான சிவனிடத்தில் மாயைபொருந்தா தாகை யால் சிவன் நிர்விகாரியே? அகில ஆன்மாக்க ளறிவைப் பிரகாசி ப்பிப்ப தெவ்வாறெனின்? தேகேந்திரியாதிகளை யுடைய ஆன் மாக்களுக் கெல்லா மல கன்ம பரிபாகானுகுணமாக வறிவான து + அயக்காந்த சன்னிதியிலே ‡ அயசுக்கு சேஷ்டை யுண் டானதுபோலச் சிவன் சன்னதி மாத்திரத்திலே பிரகாசிக் குமென்றிதன்பொருள்

+ அயக்காந்தம் - ஊசிக்காந்தம், ‡ அயம் இரும்பு

தத்ஸ்தம் ஸ்ரீசிவஜ்ஞாநபோதேய — த்ரிகாரிஸி வஸ்ஸ்ரு காஷ்டாமயாவஸ் ஸத்ருஸோஸ | இதி.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவன் சித்தசித்துக்களைச் சேட்டித்தாலும் மாயை முதலிய சடபதார்த்தத்தோடு விகாரதோஷமு மசேதனதோஷமும் வருமாதலாற் சமயோக சம்பந்தியாயிரான் மாயைமுதலிய வஸ்துவும் அவனிடத் தசேதன தோஷம் வருமாதலாற் சமவாய சம்பந்தியாயிரா விகாரதோஷமும் ஏகான்மிய பிரசங்கமு முறைமையில் வருமாதலால் ஆன்மாக்களிடத்து மவ்விருவகைச் சம்பந்தியாயிரான் காந்த சன்னிதி மாத்திரத்தால் இரும்பீர்ப்பதுபோற் சித்தசித்துக்களைத் தொடாது சங்கற்பசத்தியை விஷயீகரித்தலாகிய தனது சன்னிதி மாத்திரத்தாற் சித்தசித்துக்களிற் சாரிபங்காணு மென்று செப்புகின்றார்.

வெளிப்பொருள்

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

இறைவருளன்றியுயிர் சேட்டியாமைக்கு மேற்காட்டிய பாரிசேட வளவையேயன்றி ஆகமவளவையு மினிது விளங்கக் கிடத்தலின் அதனையு மறியாது மறித்து மறித்துப் பிணங்குகின்றபேதாய்! எல்லாவற்றினு நிறைந்து நின்ற விறைவன் சன்னிதியி னிகழு மவ்வறிவின் பயன், வினைக்கீடாய வரும் வடிவுடைய உயிர்கட்கே யுண்டா மதுவன்றி இறைவனுக்காதல் செல்லாது, சடமாகிய வுலக மவனெதிர் முனைந்து நிற்றலாற்றுமையா லென்பதாம்.

மறந்தாரென்பது வினையுருபேற்ற பெயர்.

மாயையும் உணர்வும் ஆகுபெயர்.

உயிர்கட்கு உதிக்குமென வினையும்.

பிரிநிலை யேகாரம் விரித்துரைக்க

ஐம்பொறிபோலன்றி உணர்த்தப்பய னுயிர்க்கேயாதற்கு ஏ துக்கூறுவார், உருவுடை யுயிரென விசேடித்தார்

சந்திக்க ணுடுணர வுதிக்குமென்றது மதன்பொருட்டு

"வினையாற் கண்டறிந்து நிற்குங்கா - ணென்றுணர்ந்து சி வனைச்சந்தை யினறு" என்றார் முதனூலாசிரியரும்

இதனானே அறிவித்தல்பற்றி இறைவனுக்குத் தொடக்கின் மை கூறப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

சிவனுடைய சந்நிதியிலே பிரபஞ்சங் காரியப்படுமென்று வேதஞ் சொல்லுகைச் செய்கை நீரொரு ஞானமா வுண்டென்று சொன்னதென்ன நம்புதல் என்ற பரிஞானவாதியைப் நோக்கி மேலு மருளிச்செய்கிறார்

இறைவன்றன் சன்னிதிக்கண் ணுலகின்றன் சேட்டையெ ன்று மறைகளுரைத்ததாய - பரமேஶ்வரனுடைய சன்னிதியிலே அவனைப்பொழிந்துள்ள பிரபஞ்சங் காரியப்பட்டு வருமென்று வேதஞ் சொல்லாநின்றது, அந்தவார்த்தையை யறிந்தாயிலை வி ஶ்வரூபியா யிருக்கிற சிவன் விஶ்வத்தைவிட்டு நீங்கித் தனித் தொரு முதலாயிருப்பனோ வென்னில்? அவனுடையகலப்பிலே, விஶ்வமாய் நின்றொழிந்து அவனை விஶ்வமாகான அதெங் ஙனே யெனில்?—மாயைமருவிடான சிவன - நிர்மலனாயிருக் கிற பரமேஶ்வரன் மாயாசம்பந்தமாயுள்ள பசு முதலைப்போல இந்த மாயாகாரியமாயுள்ள பிரபஞ்சத்திற் படான் இவனல் லோ பிரபஞ்சத்திற் படான், இந்தப் பிரபஞ்சத்தான சிவனை

கூடி நிற்குமென்று நீ சொல்லில்?—அவன்கண் ணுறைதரா தசேதனத்தால் - ஆதித்தன் சன்னிதியில் அந்தகாரமில்லாதாற் போலச் சத்தான சிவனுடைய விடயத்தில் அசத்தான மாயை பொருந்தி நின்று சீவியாது, ஆகையால் இவையிரண்டுந் தன்னிற் கூடாது இவைகூடிக் காரியப்படுகிற முறைமை யெங்ஙனே யென்னில்?—உருவுடையுயிர்கட்கெல்லா நிறைபரன் சன்னிதிக்க ணேயினா வுதிக்குமென்றே - தேகத்தையுடைய வான்மாக்களுக் கெல்லாம் அநேகியாய்ப் பூரணமாயிருக்கிற பரமேசுவரனருளாலே அநாதியே ஆன்மாக்களுக்கு நிலைபெற்றுள்ள கன்மத்துக்கீடாகப் பிரபஞ்ச விஷயங்கள் தோன்றிக் காரியப்படா நிற்கும்.

இதற்குப் பிரமாணம், சிவஞானபோதம் ௫ சூ ௨-வெ, "மன்னுசிவன் சன்னிதியின் மற்றுலகஞ் சேட்டித்த, தென்னு மறையினியல் மறந்தாய்—சொன்னசிவன், கண்ணா வுளம்வினையாற் கண்டிருந்து நிற்குங்கா, லெண்ணானவன் சத்தை யின்று" என்றும், சங்கற்ப நிராகரணம் பரிணாமவாதி மறுப்பு "தன்போலறிஞருந் தலைவருமிலரால்-மின்போ னிலைமையை வேண்டலும் பழுதே" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சிவனுடைய சன்னிதியிலே பிரபஞ்சங் காரியப்படுமென்று வேதஞ் சொல்லுகிற முறைமையையறிந்தாயில்லை யென்றும், சிவனுக்கு அசேதனமாயுள்ள மாயாசம்பந்தமில்லையென்றும், சர்வான்மாக்களுக்கும் சிவனுடைய சன்னதியிலே பிரபஞ்ச விடயங்கள் தோன்றிக் காரியப்படு மென்றும், பரிணாமவாதியை நோக்கி மறுத்தருளிச் செய்த முறைமை அறிவித்தது.

| | |
|---|---|
| (இ-ள்) உலகமே யுருவமாக | இருநூற்றிருபத்துநாலு புவனமும் திருமேனியாக |
| யோனிகளுறுப்பதாக | எழுவகை யோனியிற் றோற்றிய வெல்லா வுயிர்களு மவனுக்கங்கமாக |
| இலகுபேரிச்சா ஞானக்கிரியையுட் கரணமாக | மிகுந்த பிரகாசத்தையுடைய விச்சாஞானக் கிரியைகளவனுக் குட்கரணமான சைதன்னியமாக |
| அலகிலாவுயிர்கட்கெல்லாமிருடயஞ்சகி | தானொருவனாயிருந்தெண்ணிறந்த வான்மாக்களிடத்திலும் வியாபித்து நின்றவர்களுடைய வறிவுக்கறிவாய் நின்றதனாலவர்களுக் கிருபையையு மாரச்சிக்கப்பண்ணி |
| ஐந்தொழிலகளோ டாடக்கடிப்பஞ்சன | சிவன் றிருவடி முதலிய பஞ்சகிருத்தியங்களை நடத்துமதே மிகுந்த தொழிலாக வனவரதமுந் திருநடத்தைச் செய்யாநிற்பன். எ-று. (எ) |

இதற்குச் சித்தாந்தத்திரட்டுங் காஞ்சிபுராணத்து மறிக

---

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.

—o—

சிவனெவ்வாறு நின்று ஆன்மாக்களுக்கறிவைப் பிரகாசிப்பிப்பனென்னில் விசுவரூபியாக நின்று அனாதித்துவமென்னு முறைமை கூறுகின்றது.

புவனங்களிருநூற்றிருபத்துநாலுந் தனு ரூபமாகவும் எண்பத்துநான்குநூறாயிரபேத யோனிகளு மவயவங்களாகவும் மகத்தாகப் பிரகாசிக்கு மிச்சாஞானக் கிரியைகளந்தக்கரணங்களாகவுங்கொண் டெண்ணிறந்த வான்மாக்களுக்கு விஞ்,

யஞ்ஞானத்தைப் பிரகாசிப்பித்து நலம்பெறும் சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களுக்கு பஞ்சமூர்த்திகளை யதிஷ்டித்து நடனம்பண்ணுவார் ஜகதேகநாதனான சிவனென்றிதனைப்பொருள்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

சரீரிகட்கே காக்கிருத்துவங் காணப்படுவதலாற் சரீரமில்லாத பரசிவனாற் பிரபஞ்சங் காரியப்பட்டமுறைமை யெப்படியென்னை? ஆன்மாவினது சங்கற்ப மாத்திர சன்னிதானத்தாற் றனது சரீரத்தில் நடத்தல் இருத்தல்முதலிய காரியங் காணப்படுமதுபோலச் சிவனது சங்கற்பமாத்திர சன்னிதானத்தாற் றனது சரீரமாக வுபசரிக்கப்பட்ட பிரபஞ்சத்திற் சிருட்டி முதலிய காரியங்கள் காணப்படுமென்றும், பின்னைந்தச் சிருட்டி முதலிய கிருத்தியஞ் சிவனிடத் தசைதலில்லாமற் பிரபஞ்சத்திலசைதலாயத் தோற்றுமதே நடனமென்றுஞ் சொல்லுகின்றார்

உலகமே யுருவமாக - தாத்துவிக சூக்குமதேகத்தத்துவ புவனபௌவனதேகச்சிறப்பு பொது பொதுச்சிறப்புப்பிரபஞ்சமே உபசாரகற்பனை காட்டிய தூலசரீரமாக,

அல்லது அந்தப் பிரபஞ்சத்திற் பரநாதப் பிரதேசத்திருக்கும் இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகை, யாகித் திவ்விய விந்தத்திருக்கும் நாதாந்த சூக்குமாதி சத்திகலா காப்ப வபரநாத பஞ்சகலா புஞ்சமேதானுபசாரகற்பனை காட்டிய தூல சரீரமாக,

அல்லது அந்த விருசரீரோபாதியுற்ற ஈசானி பூரணி மூர்த்தி வாமை மூர்த்தியென்கின்ற அஷ்டத்திரிம்சத் கலாபேத

பஞ்ச சத்திகளையேதான உபசாரகற்பனை காட்டிய தூல சரீரமாக,—

போலிக்குருப்பதாக - தேவ நரமிருக பசுபட்சி முதலியவற்றின் றூலசரீரங்க ளுபசார கற்பனை காட்டிய புறவுறுப் பவயவங்களாக,

அல்லது அவ்வுடம்புப் பாதியுற்ற அனந்த சத்திகளேதா னுபசார கற்பனை காட்டிய புறவுறுப் பவயவங்களாக,

வியாபினி, வியோமரூபை, அனந்தை, அநாதை அநாசிருதை ஆகிய நிவிர்த்தியாதிகத் திச்சத்திருக்குப் பாதாதிப் பஞ்சகலா புஞ்ச முபசார கற்பனை காட்டிய புறக் கரணங்களாக,

அல்லது அந்த விந்துவியாபகமுற்ற தாரணி சனனி ரோதயித்திரி என்கின்ற திரிசத்திகளேதான உபசார கற்பனை காட்டிய புறக்கரணங்களாக,—

இங்கு பேரிச்சா ஞானக் கிரியையுடன் சாணமாக - திவ்விய லிங்கத் துச்சந்தாகக்கிருக்குளு சமாருசலை சார கற்பனை காட்டிய அந்தக் கரணமாக,

அல்லது அந்தச் சாருகலை யுபாதியுற்ற ஆதி சத்தி முன் பின்னுகப் பிரகாசித்துப் பெரிதாகும் இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தித் திரிகலா புஞ்சந்தான உபசார கற்பனை காட்டிய அந்தக் கரணமாக,

புறக்கரண முட்கரண மிரண்டிற்கு சூக்கும தேக மாதலால், உன்மனை யுபசார கற்பனை காட்டிய பரதேகமாக,

அல்லது அந்த உன்மனை யுபாதியுற்ற பராசத்தி தான உபசார கற்பனை காட்டிய பரதேகமாக,

இப்படி விசுவசரீர, வயிந்தவசரீர, சாந்தசரீரத் திரிசரீரத்திலுல,—

அலகிலா வுயிர்கட் கெல்லா மிருப்பனுக - எண்ணிறந்த

ஆன்மாக்களுக்கெல்லாம் பக்குவா பக்குவம் பார்த்துப் புத்தி முத்திகளுண்டாகும் பொருட்டு,—

ஐந்து நலமிகு தொழில்களோடு நாடக நடிப்பவனுதன - சிவன் பஞ்ச கிருத்தியமாகிய நிருத்தம் பண்ணுவன்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

புருடன் உடம்பு முதலியனவற்றைக் கொண்டுநின்று ஆணுமாறுபோல், இறைவன் உலக முதலியனவற்றைக் கைக்கொண்டுநின்று ஆணாதலுடையனென்பதாம்.

எனவே, தன் உடலப்பொறிகரணங்களைச் செலுத்துதற்கண் உயிர்க்கு விகாரமில்லாமைபோல இறைவனுக்கு அதுபற்றி விகாரமில்லையென்றவாறாயிற்று.

புலன் ஆகுபெயர்.

இறைவன் ஐந்தொழில் செய்பக்கல், உயிர்கள்போலக் கரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரையால் செய்வனென்பது தோன்ற நாடகநடிப்பனென்றார்.

ஈண்டைந்தொழிலென்றது அறிவித்தற்கட்படும் மறைக்குமவைந்தொழிலை.

இதனானே அதுபற்றி விகாரமின்மை கூறப்பட்டது.

அறிவிலை இவை நலமிகுதொழிலாமாறு யாங்ஙனமெனப் பாரை நோக்கியெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

பிரபஞ்சமெல்லாஞ் சிவசொரூபமாய்ச் சிவசத்திகளினுடைய கிருத்தியமாயிருக்க ஓரானமா வுண்டென்று எங்கே காணப்

பட்டதென்று பரிணாமவாதி சொல்ல, இந்தக் கிருத்தியங்களெல்லாம் ஆன்மாக்களைப் பிரேரிக்கைப்பொருட்டாகையால் ஆன்மா வுண்டென்று அருளிச்செய்கிறார்.

உலகமேயுருவமாக - சருவலோகங்களுந் தனக்குத் திருமேனியாக,—யோனிகளுறுப்பதாக - எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிகளும் அவயவங்களாகச் சொல்லப்பட்ட புறக்கரணமாக,—இலகுபேரிச்சாஞானக் கிரியையுட் கரணமாக - விட்டுவிளங்காநின்ற இச்சாசத்தியும் ஞானசத்தியும் கிரியாசத்தியும் இவை யுட்கருவிகளாக,—அலகிலா வுயிர்ப்புலன்கட் கறிவினையாக்கி - எண்ணிறந்த வான்மாக்களுடைய வறிவுகளுக்கு அறிவைக்கொடுத்து,—ஐந்து நலமிகுதொழில்களோடு நாடகம் நடிப்பனுந்தன் - அனுக்கிரகமே மிகுத்திருக்கப்படாநின்ற பஞ்சகிருத்தியங்களுடனே திருக்கூத்தைச் செய்யாநிற்பன் பரமேஸ்வரன்

இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம், பரிணாமவாதி மறுப்பு, "அதுகளியாறு மிகுதொழில்பிறாக்கோ - தனக்கோ வின்னு வெனக்கேட்டியம்புக - விவெண்ணிறயித்தா மானுறுதொழில்போற - நலமையுமறிவு மிலதெனவிகழவா - தனக்கெனிலஃது மிலைப்பதுதொன்றனறே-தன்போலறிஞருந் தலைவருமிலரான-மின்போலவில்லைப் வேண்டலும்பழுதே" எனனுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, பரமேஸ்வரன் பிரபஞ்சமெல்லாந் தனக்குத் திருமேனியாகவும் எல்லா யோனிகளுந் தனக்கவயவங்களாகவும் தனது சத்திகளுட்கரணமாகவும் நின்று பஞ்சகிருத்தியங்களைச் செய்கிறது ஆன்மாக்களைப் பிரேரிக்கைப் பொருட்டாகையால் ஆன்மா வில்லையென்ற பரிணாமவாதியை நோக்கி, ஆன்மா வுண்டென்னு முறைமையுமறிவித்தது.

ற்குப பிரமாணம் முன்னை திருவிருத்தத்துக் கிட்ட பிரமாணத்திலே கண்டுகொள்க

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு

———o———

(புருடனுடம்பு முதலியவற்றைக் கொண்டுநின் றுணருமாறுபோல) —நாதன் - முதல்வனும்,— உலகபேயு மாக-தனக்கு இருநூற்றிருபத்துநாலு புவனமுந் திருமே னிகவும்,— யோனிகளெழுபத்தாக - எண்பத்துநான்கு நூறாயிரம் யோனி பேதங்களும் அவயவங்களாகவும்,— இலகுபே ரிச்சாஞானக் கிரியையுட காரணமாக - மிகுந்த பிரகாசத்தை யுடைய விச்சா ஞானக் கிரியைகளுட காரணமாகவும்,—அலகிலாவுயிர புணர்க்ட கறிவினையாக்கி-எண்ணிறந்த வுயிர்களிடத் தறிவுக் கறிவாய் நின்றுணர்த்துதலைக் கைக்கொண்டு,—நலமிகு தொழில்களோ தொடும் - நன்மை மிகுந்த வைந்தொழில்களையுமே,— நாடக நடிப்பன - நாடகமாக நடிப்பன

இதனுனே யதுபற்றி விகாரமின்மை கூறப்பட்டது

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படித் திருநடனத்தைச் செய்யுஞ்சிவ ஞானமாகக்ட
கிந்திரிய த்வாரத்தாலே யறிவிப்பிக்கு முறை
மை யுணர்த்துகின்றார்

தெரிந்துகொண் டோரோவொன்றுகச் சென்
றைந்து புலனுமபற்றிய, புரிந்திடு முணர்வினோடு
போகமுங் கொடுத்துயோனி, திரிந்திடு மதுவுஞ்செ

யந்து செய்திகண் டுயிர்கட்கெல்லாம், விரிந்திடு முணர்
வுங்காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன். (அ)

(இ-ள்) தெரிந்த கொண்டொரோ றொருக்கச் செறிந்த புலனு மயற்புரிந்திடு முனைவிற்குப் போகமுங் கொடுத்து — ஆன்மாக்கள், பொறிகள் மேற்சென்று ஒவ்வொரு பொருளாகத் தனித்தனியே சென்றவற்றால் விடயங்களை யதுவதுவாக வறிந்து பின்னரவ் விடயங்களோடிசைதலையுஞ் செறிந்து நின்று சுகதுக்கமாகிய போகங்களைக் கன்மத்துக்கீடாக யோனிகளை யெடுத்துப் புசித்து,

யோனி திரிந்திடுதலுஞ் செய்து — யோனிகடோறும் ×பூட்டையு நீரும்போல மாறிமாறிப் பிறப்பது மிறப்பதுஞ் செய்து

செய்திகண்டு — இவ்வான்மாக்கள்படுகிற துயரத்தை யறிந்து தனது காருண்ணியத்தினாலே,

உயிர்கட்கெல்லாம் விரிந்திடு முணர்வுங் காட்டி — ஞானாசாரியனை யதிட்டித்துக்கொண்டு பக்குவப்பட்ட வான்மாக்களுக்கு இருவினை யொப்பை யறிந்து ஞானதீக்கையைச் செய்து சர்வஞ்ஞத்துவாதியான வாறுகுணத்தையு முண்டாக்கி,

வீட்டையு மளிப்பன் மேலோன் — அநந்தசிவன் றனக்குச் சமமான முத்தியையுங் கொடுப்பன் எ-று

உம்மை யெதிரது தழீஇய வெச்சம்

இதற்குப் பௌட்கரமுஞ் சிந்தியவிசுவ சாதாக்கியத்து மறிக (அ)

× பூட்டை-இறைகூடை.

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

உயிர்ப் புலன்கட் கறிவிஷயாசக்தி யென்றதற் கிது சமசாரமே யாகையால் கிருபையினாலே கிருத்தியங்களைப் பண்ணுவனென்ற செய்படி யென்னை? இவ்வாறு போகத்தினாலே மலபரிபாகஞ்செய்து மலபரிபாகத்திலே மோக்ஷத்தைக் கொடுப்பனென்பது மேற்கூறுதல்.

ஆன்மா அந்தக்கரணத் துவாரா பஞ்சேந்திரியங்களைப் பொருந்தி யிந்திரியார்த்த சம்யோகத்தினாலே சப்தாதி விஷயங்களை யறிந்து காஹிக்கும் போகத்தையுங் கொடுத்து யோகி மாறிய பிறக்குமபடியுஞ்செய்து, இவ்வாறு சகலாவஸ்தையிலா னமாக்களுக்குக் கன்ம*சாம்யமானதை நோக்கிக் கன்ம சாம் யமான வான்மாக்களுக்கெல்லாம் பூர்வமுள்ள கிஞ்சிஞ்ஞனை யொழித்து சர்வஞ்ஞத்து வாதிகளைப் பிரகாசிப்பித்துப் பரம மோக்ஷத்தையுங் கொடுப்பன், சர்†வோத்கிருஷ்டனாகிய சிவன்.

வீட்டையும் என்றவும்மை முன்சொன்ன போகமாத்திரமேயல்ல மோக்ஷமுங் கொடுப்பனென்பது.

வீட்டையு மளிப்பனென்பது போதும், விரிந்திடுமறிவுங் காட்டி யென்பது வேண்டாமெனினோ? சர்வஞ்ஞத்துவாதிய பிவியக்தித் துவாரா பரமமுத்திப் ‡பிரதிபாதிதமாகையால் க்ரமமுத்தி §பரிபாகநாத்தமாக விரும்பப்படுமவேணும்.

விரிந்திடு மறிவென்ற வும்மை பந்தத்தையில் கிஞ்சிஞ்ஞத்துவாதிக ளன்றி முத்தியிலே சர்வஞ்ஞத்துவாதிகளையும் பிரகாசிப்பிப்பனென்பது.

* சாம்யம் - ஒப்பு, † உத்கிருஷ்டன் - உயர்ந்தவன், ‡பி

ரதிபாதிதம் - சொல்லப்பட்டது, § ப்ரதிபாதனம் - சொல்லுதல்

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவன் அவ்வான்மவர்க்கத்தாருக்கு மலத்தின் பக்குவம் அபக்குவம் பார்த்து, முறைமையிற் சிற்றறிவு பேரறிவு சிற்சத்தியில் விளங்கப்பண்ணி, முறைமையிற் போகமோக்ஷங்களைப் புணர்த்துவனென் றுணர்த்துகின்றார்.

ஓரோவொன்றாக - ஒவ்வொன்றாக,— தெரிந்துகொண்டு - விசாரித்து ஐயந்திரிபற்ற அறிவிற்குக் கிரகிக்கும்படிப் பண்ணி,—சென்றெய்து புலனும்பற்றி - பஞ்சேந்திரியவழி யறிவு விளங்கச் சத்த பரிச ரூப ரச கந்தங்களோடு சம்பந்தித்து,—புரிந்திடு முணர்வினோடு - மாலையிது, சந்தனமிது, வனிதையிவள், பாம்பிது, தேளிது, முள்ளிது, விஷமிது, சிங்கமிது, உதிரமிதுவென் றென்றென்றிறப் பண்ணிடும் புத்தியத்தியவசாயத்தினது அசித்மய புத்தி விருத்தி, சித்மய சிற்சத்தி விருத்தி மிச்சிர சிற்றறிவோடு,—போகமுங்கொடுத்து - திரும்ப வசரூர புத்தியிலமாலை முதலானவற்றில் ஒவ்வொரு வஸ்துப் பிரதிவிம்பத்தாற் பரிணமித்த சுகதுக்க மோகங்களிற் சுகமிது துக்கமிது மோகமிதுவென் றுட் சுகதுக்க மோகமயமாய் வரும் உள்ளாத்தியவசாயத்தினது சித்மய சிற்சத்திவிருத்தி அசித்மய புத்தி விருத்தியில் அழுந்தி வித்தியாதத்துவ மாத்திரத்தோடு கிளம்பி யதின்மேல் விழுந்து பிரிக்கரிதாய் விளங்குஞ் சிற்சத்தி விருத்தி விளங்குதலாகிய போகத்தையுங் கொடுத்து,—விரிந்திடு மறிவுங்காட்டி - சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ லக்ஷண சிவத்துவரூப சிற்சத்தி விருத்தியெனகின

றபேரறிவு பெருந்தொழில்களை விளக்கி,—வீட்டையு மளிப்ப
ன் - தனக்கொப்பாகிய மோட்சத்தையுங் கொடுப்பன்.
மற்றவை வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

இறைவன் இங்ஙன மேகதேசவறிவை நிகழ்வித்துச் சிறு போகங் கொடுத்துப் பிறவியிற் படுத்துதலன்றிப் பருவமுதிர்வித்து வியாபகவறிவை நிகழ்வித்துப் பரபோகமுங் கொடுத்தற்பொருட் டென்பதாம்.

ஏகதேசவறிவு நிகழ்ந்தன்றிச் சிறுபோகநுகர்ச்சி செல்லாமையும் வியாபகவறிவு நிகழ்ந்தன்றிப் பரபோகநுகர்ச்சி செல்லாமையு முணர்த்துதற்கு புரிந்திடு முணர்வினோடு போகமுங் கொடுத்தென்றும், விரிந்திடு மறிவுங்காட்டி வீட்டையு மளிப்பனென்றுங் கூறினார்.

இதனானே தூலவைந்தொழிற்கட் படுவதாகிய அவ்வதிசூக்கும வைந்தொழிற்குப் பயன் கூறப்பட்டது.

அற்றேனும் அதனா லிறைவனுக் காக்கக்கடவ தென்னையென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

—

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

பரமேசுவரன் ஆன்மாக்களுக்குப் போகத்தைக் கொடுக்கு முறைமை யெப்படி ! மோக்ஷத்தைக் கொடுக்கிற முறைமை யெப்படி! என்ற மாணாக்கனை நோக்கி, இரண்டினையு மருளிச் செய்கிறார்.

தெரிந்துகொண் டோரோவொன்றாகச் சென்றைந்து புலனும்பற்றி - முற்சனனத்தி லுண்டான கன்மத்துக்கீடாக நாடிக்கொண்டு ஒவ்வொரு விஷயங்களாக ஐந்து விஷயங்களையும் சென்று பொருந்தி,—புரிந்திடு முணர்வினோடு போகமுங் கொடுத்து - இவையிற்றாலே விரும்பத்தக்க வறிவுகளுடனே சுத்தக்கங்களையுங்கூட்டி,—யோனிதிரிந்திடு மதுவுஞ்செய்து-எண்பத்துநான்குநூறாயிர மசுக்களதோறு மாறிப் பிறப்பதுஞ் செய்து, இப்படி எண்ணிறந்த பல பிறப்புகளிலும் பிறந்திறந்து கன்மத்தைப் புசித்துத் தலைத்து மலபரிபாகம் வந்த வவசரத்தும்,—செய்திகண்டு - ஆன்மாக்களுடைய பக்குவத்தைத் தன்றிருவுள்ளத் தடைத்து,—உயிர்கட்கெல்லாம் விரிந்திடுமறிவுங்காட்டி-இந்த முறைமையிலே பக்குவப்பட்ட ஆன்மாக்களுக் கெல்லாம் ஜடசித்துக்க ளெல்லாம் வியாத்தமாயிருக்கிற ஞானத்தையுந் தரிசிப்பித்து,—வீட்டையு மளிப்பன்மேலான - மோக்ஷத்தையுங் கொடாநிற்பன் சாவத்துக்கு மேலாயிருக்கிற பரமேசுவரன்

இதனுற் சொல்லியது, பரமேசுவரன் ஆன்மாக்களைச் செய்த கன்மத்துக்கீடான போகங்களைப் புசிப்பிக்கிற முறைமையுட அது புசித்துத் தலைக்க வவசரத்து ஞானத்தைப் பிரகாசிப்பித்து மோக்ஷத்தையுங் கொடுப்பனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

மேலோ னைம்புலனும்பற்றி யொரோவொன்றாகத் தெரிந்துகொண்டு சென்று - இறைவ னிங்ஙனமைப்பொறி வழியாக விடயங்களி லொவ்வொன்று யறிந்து செல்லுதற்கே

வாகிய,— உணர்வினோடு புரிந்திடும் - ஏகதேச அறிவை நிகழ்வித்து,—போகமுங் கொடுத்து-சிறுபோகங் கொடுத்து,— யோனிதிரிந்திடு மதுவுஞ்செய்து -பிறவியிற்படுத்துதலும்,— உயிர்கட்கெல்லாஞ் செய்திகண்டு அதனுலுயிர்கட்குப் பருவமுந்தாவித்து,—விரிந்திடு மறிவுங்காட்டி - வியாபகவறிவை நிகழ்வித்து,— வீட்டையுமளிப்பன - பரபோகமுங் கொடுத்தற்பொருட்டென்பதாம்.

இத்தனை தூலவைந்தொழிற்கட் படுவதாகிய அவ்வதிசூக்கும வைந்தொழிற்குப் பயன் கூறப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை.

இப்படியான்மாக்கட் கநுக்கிரகஞ் செய்யுமிடத்துச் சிவனவேணுமோ, முதன்மையான வனுக்கிரக சத்தி யமையாதோ வென்னை, அவ்விருவருந் தம்மிற் பேதமில்லையாயினு மதற்குத் தலைமை யீசனென்பதற் குதாரணமிட் டுணர்த்துகின்றார்

அருளது சத்தியாகு மரன்றனக் கருளையின்றித், தெருளுசிவ மில்லையந்தச் சிவமின்றிச் சத்தியில்லை, மருளினை யருளால்வாட்டி மன்னுயிர்க் களிப்பன்கண்கட், கிருளினை யொளியாலோட்டு மிரவியைப் போலவீசன். (௬)

(இ-ள்) அருள சிவனுடைய வருட்சத்திதானே யனுக்கிரசத்தியா ரகத்தை யுண்டாக்கும அவ்விருவருந் தம்முள் மாறு பிற பேதமோ வென்னில்?

மக்கு

*அருளையின்றித் தெருள்சிவமில்லை*

அந்தச் சத்தியையின்றி வேறேபிரகாசத்தினை யுடைத்தாகிய சிவமுமில்லை இந்தச் சிவத்தையின்றிச் சத்திதானே வேறொருமுதலாக நிற்கவற்றோ வெனில்?

*அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை*

அக்கினிக்கு வெம்மையானது பிரிக்கப்படாதிருக்குமாறுபோல, அந்தச்சிவசத்தியானது மவனிடத்துப் பிரிக்கப்படுவதுமில்லை

*மருளினை யருளாலவாட்டி*

ஆகையினாலே பரமேசுரன் பருவஞ்சேர்ந்த வான்மாக்கட்குத் தன்னுடைய சத்தியா லிவனுக் கறியாமையாகிய விருளின் வலிமை கெடுத்து,

*மன்னுயிர்க்களிப்பன்*

தன்னிடத்து நிலைபெற்றிருக்கிற வான்மாக்கட்க் கனுக்கிரகத்தைச் செய்வன் அஃதென்போல வெனில்?

*கண்கட்கிருளினை யொளியா லோட்டுமிரவியைப் போலீசன்*

ஆதித்த னானவ னொளிபடித்த தன்னுடைய கிரணங்களினாலே யிருளையோட்டிக் கண்ணுக்குக் காட்சியைக் கொடுக்குமாறுபோலச் சிவனு மான்மாக்கட் குண்டாகிய வாணவாதி தோடத்தை நீக்கி ஞானத்தைப் பிரகாசிப்பிப்பன் எ-று

இதற்கு வாதுளோத்தரத்து நிசுவாசத்துமறிக

இவைமைந்து சூத்திரத்தானும் பதிபசுபாச விலக்கணத்தைப் பொதுவியலாற் கூறியதெனவறிக (௫)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

இரண்டாஞ் சூத்திரத்திலே அருளுரு வென்றதற்கு அருளென்பது கிருபை; கிருபை குணமாகையால். ஸ்வரூப மென்ப

தெவாறென்ற சங்கைக்கிவ்விடத்து * சிங்காவலோக நி யாயமாகமே லுத்தரங் கூறுகின்றது.

* அவலோகம் - பார்வை.

அருளொன்றது அரனுடைய சத்தி பரியாய நாமம் சத்தி, சத்திமானாகிய சிவனுக்கு பிந்நமோ அபிந்நமோ வெனின்? சத்தியைவிட்டுச் சிவனில்லை, சிவனைவிட்டுச் சத்தியில்லை ஆகையால் பேதமோ அபேதமோ வென்னுஞ் சங்கைக் கிடமில்லை, சத்தி சிவரூபமென்றறி. ஆதித்தன் றனுடைய பிரகாசத்தினாலே யிருளைக்கெடுத்துக் கண்களுக்கு † ரூபவத் பதார்த்தங்களைக் காணும்படி செய்தாற்போலச் சிவனுந் தனுடைய வருளாகிய ஸ்வரூப பிரகாசத்தினாலே ஆன்மாக்களுடைய அஞ்ஞானத்தை நீக்கி விஷய தரிசனங்களைப் பண்ணுவிப்பா னென்றிதன் பொருள்

ரூபவத் - ரூபமுள்ள

இதன்றச் சராசரப்பிரபஞ்சமும் சிவனிடத்திலும், சிவனும் சர்வான்மாக்களிடத்திலும் அந்தரியாமியாகையால் சிவன் * அந்தர்ப்பகிர் வியாபகனாகி நின்று ஸ்வதந்த்ர கர்த்தாவாகித் தேகேந்திரியாதிகளுக்கு ஆன்மாபோல ஆன்மாக்களை அந்தர் † நியமத்தையும் பகிர் ‡ பிரவர்த்தகத்தையும் பண்ணுவனென்றும் ஆன்மாக்கள் ஸ்வர § பரதந்த்ரரென்றுஞ் சொல்லியது

* அந்தர்ப்பகிர் வியாபகன் - உள்ளும்வெளியும் வியாபித்தவன், † நியமநம் - அடக்குதல், ‡ பிரவர்த்தநம் - செலுத்தல், § பரதந்திரன் - உட்பட்டவன்.

[illegible]
[illegible]
[illegible]

ஸகலநிஷ்களம் யோநிஸகலாஜ்ஞாநம் வாக் | ஸோஹமம்யா
த்வியாத்வ காமேர்த்விஷ்ஸ்மேதாசேவ: || உமேய்வ
ஸம்ஸ்தித: விஸ்வம் ஞாயாஸம்ப்ரபேதஜமக்ஷ || ஜஜி.

சிவாகரயோகி பண்ணின சிவஞானசித்தி
ஜந்தாருசூத்திர வியாக்கியானம
சமாப்தம

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

கடகாரியம பண்ணுமிடததுக குலாலனுககுத தணட சக்கராதிபோலச சிவனுககுப போகமோடசகாரியம பண்ணுமிடததுப பினன கரணமிலலை சகசததியே காரணமெனறு சாற்றுகின்றா

அருளது - மலமுத்தி சிவததுவ வியததிரூப வனுககிரக கிருததியமாவது,—

சததியாகும - சிவனது சாமர்ததியமாம சததியின தருளாகிய தொழில் சததியாகாதாதலால ஆகுபெயராககி அருளை அனுககிரக கிருததியததை பணணுவது சததியெனறு தொகைப் பொருள விரிததுப பொருளகொளக —

அரனறனககு,—

அருளையினறித தெருளசிவமிலலை - பிறப்பொருட பிரகாசமாகிய தீபசததியே தறபொருட பிரகாசமாகிய தீபமாயுமிருததல போலத தாதானமிய சமவாய சமபநதினியாய்ப் புறபொருளறிவாகிய சததியே தறபொருளறிவாகிய சிவமுமாயிருததலால், அவ்வனுககிரகததைப் பண்ணுஞ் சத்தியினின் றும பிரிததுப பகருவரனம சிற்சத்தியின தறிவுதொழிற்கலை

த் தன்று சத்தியாகிய கரணத்தால் அலர்த்துஞ் சிவமெனுமொ ரு பொருள் தரிசிப்பதின்று.

அந்தச் சிவமின்றி சத்தியில்லை - தற்பொருட் பிரகாசமா கிய தீபமே பிறப் பொருட் பிரகாசமாகிய தீபசத்தியு மாயிருத் தல் போற் ருதான்மிய சமவாய சம்பந்தியாயத் தற்பொருள றிவாகிய சிவமே பிறப்பொருளறிவாகிய சத்தியாயு மிருத்தலா ல் அந்தச் சிவத்தினின்றும் பிரிந்துச் சத்தியெனுமொரு பொ ருள் சாதிப்பதின்று இப்படி யிருக்குஞ் சத்தியே கரணமென் று சாதித்திருத்தலால்,—

கண்கட்கிருளினை யொளியா லோட்டுமிரவியைப்ப போ ல,—

ஈசன்-சிவன்.—

மன்னுயிர்க்கு- நிலைபெற்றப்பக்குவான்மாவினது சிற்சத்தி யாகிய திருஷ்டிக்கு,—

அருளால் - அநுக்கிரகசத்தியால்,—

மருளினைவாட்டி - மறைக்கு முறைமையுடையமலசத்தி யைத்திரோபு முறைமை யுடையதாகச் செய்து, இருளிகத்தா ற் கண்ணொளி காணப்படே போலெனப் பேகத்தேசவுவமை. விய த்திருத்திய மின்றி யொளி காணப்படுதலால் என்றதில், வி ருப்பமின்றிப் படலமுதலி கிருத்திய மாத்திரத்தாற் காணு திருந்து, பின்பு விரசனு முதலி தேசோபிவியத்திகளை முறை யையி லுண்டாக்கும் அஞ்சன தேவோதத்தேசன கிருத்தியத்தா ற் கண்ணொளி விளங்கிக் காணப்படுதல் போல வெண்பதே மு த்துவமையென்றெண்ணி, மலமுதலி மாத்திரத்தாற் காணுதிரு ந்து மலவாசனுமுதலி சிவத்துவாபிவியத்திகளைச் சர்ப்பகஞ்சுக முத்தி சர்ப்ப சரீர வியத்திபோற் சுடுதி முறைமையி லுண்டா

கருமபோசனுருத்தியோடு தத்தவியத்தியாகுதி கிருத்தியத்தாற் சிவத்துவம் விளங்கிக் காணுமென்று கழறுகின்றார்.

அளிப்பன - விரிந்திடு முணர்வுங் காட்டி வீட்டையு மளிப்பன என்று முன் சொல்லியபடி மலமுத்தி கிருத்தியத்திற பின் வாசனமுத்தி சிவத்துவாபி வியத்திகளைத் தூல சூக்கும பாரதம்மியக்கிரம கிருத்தியத்தால் பெருக்கொழில பிரியாத பேரறிவு பெருக்கிச் சிவத்துவ விளக்கஞ் செய்வன.

## சிவஞானயோகியருரை வருமாறு.

அயங்கனங் கொடுத்துக் காட்டி யளிப்பதாகிய வக்கருணை இறைவனுக் கியற்கைக் குணமெனப்படுஞ் சத்தியாகலான், குணங் குணியைவிட்டு நீங்காமையின் ஞாயிற்றி னொளிபோல இறைவனுக் கவ்வருட் குணமே மேம்படுதலின் வேறு யாண்டைக் காக்கக் கடவது பிறிதில்லை யென்பதாம்.

இதனானே யவ்வருள் இறைவனுக் கணிகலமாதல் கூறப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

இப்படி யான்மாக்களுக்குப் போகமோக்ஷங்களைச் சிவன் கொடுப்பானாகில் விகாரி யாகானோவென்ற அவிகார வாதியை நோக்கி அருளிச்செய்கிறார்.

அருளது சத்தியாகு மரன்றனக்கு - அநாதியே அநுக்கிரகனாயிருக்கிற சிவனுக்கு அந்த வருளானது சத்தியாம். தான் விகாரமற்றின்று அந்தச் சத்தியைக்கொண்டு பிரபஞ்சத்தை ஆட

த்துவன். அப்படிச் சத்தியேன், அந்தச் சிவன் றானே யுமையா தோ வெனனில்?—அருளையன்றித் தெருள்சிவமில்லை - இந்தச் சத்தியையின்றி யறிகைக்குச் சிவனுந் தனித்தொரு முதலல்லன் ஆனால் அந்தச் சத்தியே யுமையாதோ சிவமே யென்னி ல்?—அந்தச்சிவமின்றிச் சத்தியில்லை - அந்தச் சத்தியும் இந்தச் சிவனையின்றித் தனித்தொரு முதலாகக் காரியப்படமாட்டாது. ஆனால் சிவனாற் பய னேதெனனில்?—மருளினை யருளாலவாட்டி மன்னுயிர்கள் களிப்பன -மலத்தாலுண்டாகிய மயக்கத்தைத் தன்னுடைய சத்தியாலே கீழ்ப்படுத்தி அநாதியே நிலைபெற்ற ஆன்மாக்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பன் அதெங்ஙனே யெனில்?—கண்கட்கிருளினை யொளியாலோட்டு மிரவியைப்போலவீசன் - அருளிடமாக நின்று காண்கிறவர்களுக்குக் கண்ணுக்கிருளைப் போட்டிக் காட்டாநிற்கு மாதித்தனைப்போல சிவனும் பிரகாசியாநிற்பன்

இதனாற் சொல்லியது, சிவனுக்கு அவனுடைய வருளானது சத்தியாமென்றும் அந்த அருளையின்றிச் சிவனுந் தனித்தொரு முதலல்லவென்றும் அந்தச் சத்தியும் இந்தச் சிவனையின்றித் தனித்தொரு முதலாகக் காரியப்படமாட்டாதென்றும் அநாதியே நிலைபெற்ற வான்மாக்களுக்கு மலத்தாலுண்டாகிய மயக்கத்தைத் தன்னுடைய சத்தியாலே கீழ்ப்படுத்தி மோக்ஷத்தைக் கொடுப்பனென்றும் கண்ணுக்கு அந்தகாரத்தைப் போக்கிக் காட்டாநிற்கும் ஆதித்தனைப்போல சிவனும் பிரகாசியாநிற்பன என்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—o—

அருளது அரனுக்குச் சத்தியாகும்-அவனுக்குத் தெரித்துக் காட்டி யளிப்பதாகிய வக்கருணையு மிறைவனுக்கு இயற்கை

க் குணமெனப்படுஞ் சத்தியாதலால்,— அருளையின்றித் தெருளசிவமில்லை யந்தச் சிவமின்றிச் சத்தியில்லை - சிவமுஞ் சத்தியுங் குணகுணி முறைமையாக நிற்குணம் குணியைவிட்டு நீங்காமையின்,— கண்கட்கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போல - கண்கட்குப் புறவிருளைக் கிரணத்தாலோட்டிப் பிரகாசத்தைச் செய்கின்ற ஞாயிற்றுக் கொளிபோல,— மன்னுயிர்க்கு மருளினை யருளால் வாட்டி யீசனளிப்பன் - நிலைபெற்ற வுயிர்கட்கு மயக்கத்தினைத் திருவருளா னீக்கி யநுக்கிரகஞ் செய்கின்ற விறைவனுக் கவ்வருட்குண மேம்படுதலின் வேறுயாண்டைக் காகக் கடவது பிறிதில்லை

இதனானே யவ்வரு ளிறைவனுக்கு அணிகலமாதல் கூறப்பட்டது.

☞ ரு - ரு, க—உ, அ, முடிந்தது.

—o—

☞ ஐந்தாஞ் சூத்திர முற்றிற்று

"நவமும்"

என்ற ஐந்தாஞ் சூத்திரம்

முடிந்தது

—

பாயிரமுட்பட செய்யுள்—உ௱க.

சிவமயம.

# சிவஞானசித்தியார் சுபக்ஷம்.

## சு—சூத்திரம். பதிபாசதரிசன இலக்கணம்.

## மறைஞானதேசிகா உரை.

மேலாறாஞ் சூத்திர மென்னுதலிற்றோவெனின்? இப்படியு பதேசித்த சிவஞானத்து வழித் தானமாவென றுணாத்துகின்றது

மேலித் தலைச்செய்யு ளென்னுதலிற்றோ வெனின்? அசத்தச சிவனுடைய சொரூப மறியப்படிற சடம அல்ல தறியப்படாதெ னி லபாவமாதலா லறியாதறிக்வென றுணர்த்துகின்றா.

அறிவுறும் பொருளோவீச னறிவுறா தவனே
யென்னி, லறிபொருளசித்தசத்தா மறியாத தின்று
மெய்ங்குனு, செறிசிவ மிரண்டுமின்றிச் சித்தொடு சத்
தாயநிற்ப, னெறிதருஞ் சத்தினமுன்ன ரசத்தெலா
நின்றிடாவே. (க)

(இ - ள) அறிவுறும பொருளோவீசன — சிவனறியப்படும பொருளோ வறியப்படாத பொருளோ

அறிவுறா தவனே எனனில் — என்று சொல்லின?

அறிபொருள சித்தசத்தாம — ஆனமாவினாலே சுட்டி யறியப்பட்ட பொருளகளெல்லாஞ் சடமுமா யழிந்து போய்விடும்

அறியாத தினறும — அறியப்படாத பொருளாயி னாகாசபுட்பமு முயற்கோடும்போல வில்லாத பொருளாய்விடும்.

பித்துப் போக்குகிறபடி யெப்படியென்ற மாணாக்களுக்கு மே
லருளிச் செய்கிறார்.

முன்னுதிறந்த தனுக்களைச்செய்யுங் கன்மங்கட்கு முன்னில்லை
யா மூவிரண்டா மத்துவாவின் - மூன்றுவகைப்பட்ட வான்
மாக்களும் அநாதியேசெய்த கன்மங்கள் அநாதியே கட்டுப்படு
கைக்கு முன்னில்லையான ஷடாத்துவாக்களிலே,—ஆன்றமுறை
யவையருத்தி யறுத்துமல முதிர்வித்து - அவரவர் செய்தற்கு
த் தக்கதாக வந்தது,அந்தவடைவிலே அவைப்பிறப்பைப்பு
சிப்பித்துத் துலைப்பித்து,மலத்தையும் பக்குவமாக்குவித்து.—
அநுமபருவ மடைந்தும - இந்த வான்மாக்களுக்குச் சொல்
லுகிறதிரான மிக்கப் பக்குவமுண்டாக்வே,—ஆசாருகிதகோ
ணறி - பரமேசுவரன் தன்னு காருண்ணியத்தினாலே ஆசாரிய
மூர்த்தியாக வெழுந்தருளி வந்து,—நுகராதவகை முற்செய்க
ன்மத் துகளறுத்து - முன்பு செய்யப்பட்ட கன்மமாய அத்து
வாவிலே கட்டுப்பட்டுக் கிடக்கிற சஞ்சிதமான புண்ணிய பாவ
ங்களையும் இவன் புசியாதபடி நாசமாக்கி,—அங்கத்துவாத்து
டக்கறவே சோதித்து - அந்தப் பாசநாசம் பண்ணின வவதர
த்திலே அத்துவாக்களி லுண்டான தொந்தங்களையு மறுத்
து,—ஏன்றவுடற் கன்ம மனுபவத்திலேயறுத்து - தேகத்துக்கு
அடைந்த பிராரத்த கன்மத்தை அனுபவத்திலேயே நோக்கவி
லையாக்கி,—இங்கு இனிச்செய்கன்ம மூலமல ஞானத்தா லிடுப்
பண-கன்மங்களெல்லாம் போக்கியும் சரீரமிருக்கையாலே மீளவு
மபிராரத்தமும் ஆகாமியமும் வாதனையாலே போகாது, அது
போகைக்கு இவ்விடத்திலே மேற் செய்யப்பட்ட வாகாமியத்
தையும் அதுக் கேதுவான ஆணவமலத்தையும் பரமேசுவரன்
தன்னுடைய ஞானத்தினாலே இவனுக் கிலலைபாக்கி விடுவன்

இதின்ற சொல்லியது, பரமேசுவரன் மூன்றுவகைப்ப
ட்ட ஆன்மாக்களும் செய்தகன்மம் அத்துவாக்களிலே கட்டின

கிடக்கிறவையிற்றை அடைவிலே புசிப்பித்துத் தொலைப்பித்து மலத்தையும் பாகம்வருத்தி ஆன்மாவுக்கு மிக்கதொரு பக்குவத்திலே ஆசாரியமூர்த்தியாக வெழுந்தருளிவந்து அத்துவசோதனையினாலே சஞ்சிதத்தையும் அனுபவத்தினாலே பிராரத்தத்தையும் மேல் ஏறுகிற வாகாமியத்தையும் ஆணவமலத்தையுந் தன்னுடைய சிவஞானத்தினாலே போக்குவனென்னு முறைமையுமறிவித்தது.

'பலவிதமாசான' என்ற திருவிருத்தமுதல், 'மூன்றுதிறத்த தனுக்கள்' என்ற திருவிருத்த மீறாக, எட்டுத் திருவிருத்தமும் சகலரைப்பற்றியெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், அ-சூ, ங-வெ, "அஞ்ஞான வச்சகலர்க் குருவாய்—மெய்ஞ்ஞானம், பின்னுணர்த்தும்" என்னுமதனுட் கண்டுகொள்க.

'உரைதரும்பசுவர்க்கம்' என்றதிருவிருத்தத்தில் 'சகலர்க்குக் கன்மவொப்பிற் றரையிலாசான் மூர்த்தியாதாரமாகித் தரித்தொழிப்பன் மலஞ் சத்தார் சத்திநிபாதத்தால்' என்ற பதத்துக்கு வியாக்கியானம் இவ்வளவும் வந்து முடிந்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

மூலமலம் - அநாதிமறைப்பாகிய வாணவமலமும்,—இவ் இனிச்செய்கன்மம்-இயல்விட்டது வாசனைபற்றிநிகழும் ஆகாமிய வினையும்,—ஞானத்தாலிடிப்பன-ஒளிமுன் னிருள்போல விரைவினது ஞானசத்தியா லொழிப்பற்பாலன,—மலமுதிர்வித்து-அவ்வாணவமலத்தை முதிர்வித்தற்பொருட்டு,—அணுக்கள் மூன்றுதிறத்துச் செய்யுங்கன்மங்கட்கு-ஆன்மாக்கண் மனவாக்குக் காயமென்று முத்திறத்தா னீட்டப்படும் கன்மங்களை,—மூவிர

ண்டா மத்தவாவி ஞானமுறையனைவயருத்தி யறுத்து,—ஈட்டிய முறையானன்றி யாரத்துவாவின பசுகுவமுறையா னுகாவிக்கப்பட்டு ஞெசிக்கிடந்த கன்ம மலமும்,—முன்னிலைபா மருடருவ மடைதலுமே யாசாஞ்சித் தொன்றி பறுத்து-அதற்கு-டற்றுகக்கொடுத்து நிற்கு முன்னிலையாகிய மாயேயமலமும் பக்குவம வந்தழிக் குருவடிவாய வருதலாற கிரியாசத்தியா லொழிக்கற்பாலன,—என்றவுடற்கன்ம மனுபவத்திலைறுத்து-உடம்பும் கத்துக்கொண்ட பிராரத்த கன்ம மனுபவத்தா லொழிக்கற்பாலன,—நுகராதவகை முற்செய் கன்மத் தகளறுத்த தங்கத்தவாது தொடக்கறவே சோதித்து-இங்ஙனமாகலாற கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையா லெஞ்சி நின்ற கன்மங்களைச் சுத்திசெயதற பொருட்டு அவற்றிற்குப பற்றுக்கோடாகிய அவ்வத்துவாசுத்தியே யீண்டுக் கூறப்பட்டன

இதனானே யத்துவா சுத்தியின் சிறப்புக் கூறப்பட்டது. 'உரைதரும்' என்பதமுக விதத்தினையும 'குருவாகி வந்துணாதி' என்னு முக்கூற்றுப பொருளை விரித்துணாத்தியவாறு

☞ அ-ரு, முதலதிகரண முடிந்தது

---

## மறைஞானதேசிகர் உரை

மேலித்த தீக்கையினாறிப பரமமுத்தி யடையப்படா
தென்பதூஉம் புறச்சமயத்தினக ணின்றுஞ் சதக
னமா னுட்டானத்தினுமேல் சைவசமய வதிகா
ரியாவ னென்பதூஉ முணாத்துகின்றார்

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன் றும புகலுமாச்சிரம, வறத்துறை

களையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைக
ள் பலதெரிந்து மாரணங்கள்படித்துஞ், சிறப்புடைய
புராணங்களுணர்ந்தும் வேதச் சிரப்பொருளை மிகத்
தெளிந்துஞ் சென்று சைவத், திறத்தடைவ ரிதிற்சரி
யை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவ
னடியைச் சேர்வர். (௧௧)

(இ-ள்) புறச்சமய நெறிநின்றும் — உலோகாயதம் பௌத்தம் ஆருகதம் மீமாஞ்சம் மாயாவாதம் பஞ்சராத்திரமென்னு நூலமாகிய புறச்சமயங்களாறில் நின்றும்,

அகச்சமயம்புக்கும் — சைவம் பாசுபதம் வாமம் வைரவம் மாவிரதம் காளாமுகம் என்னுஞ் சூக்குமமாகிய உட்சமயங்களாறினும்புக்கு நின்றும்,

புகன்மிருதி வழியுழன்றும் — மனுமுதலிய வாசாரியராற்சொன்ன தன்மசாத்திரம் பதினெட்டின்வழி யனுட்டித்தும்

அவையாவன? "மனுவே யத்திரி-சங்கு வாசிட்ட மியமம் அங்கிரசம்-யோகீசுரமே வருணம் பராசரஞ்-சாதாதவமே சமவர்த்தமே-யுசநசம் லிகிதம் விட்டுணு தக்கம் -பிரகற்பதிதமே கவுதமமென்றே கட்டுரைசெய்வர் அவர் பதினெண்மர்" மிருதியைப் பண்ணினர் பெயரால் எனவறிக.

புகலுமாச்சிர மவறத்துறைகளையு மடைந்தும் — வேதத்திற் கொண்டாடிச் சொல்லப்படாநின்ற பிரமசரிய முதலியன வாசிரமங்கள் நான்கின்வழியினின் றனுட்டித்தும்.

அவையாவன?

பிரமசரியம் நயிட்டிகம் பௌதிகம் என விருவிதமாம்.

இல்லறம் சாதகன் உதாசீனன் என விருவிதமாம்.

வானப்பிரஸ்தம் சபத்நீகன் விபத்நீகன் என இருவிதமாம்

சந்நியாசம் வித்துவான் விவித்ஷு தவசுவி என மூன்றுவிதமாம்

இதனுள் வைதிகத்தில் ஒவ்வொன்றை நந்நான்காகப் பகுத்துக்கூறும் அவையாவன?

காயத்திரம் பிராமம் பிராசாபத்தியம் நைட்டிகம் எனப் பிரமசாரியம் நான்கு

வார்த்தா விருத்திசாலீந விருத்தியாயாவர் மகோசாரம் எனக் கிரகஸ்தியம் நான்குவிதமாம்.

வைகாநசம் வாலகில்லியம் ஔதும்பரம் ——— ——— என வானப்பிரஸ்தம் நான்குவிதமாம்

•வேகூதகம் குடீசகம் அஙகிசகம் பரமஅஙகிசகம் எனச் சந்நியாசமும் நான்குவிதமாம்

| | |
|---|---|
| அருந்தவங்கள் புரிந்தும் | அனுட்டித்தற்கு அரிதாகிய பஞ்சாக்கினி முதலியவற்றினை அரிய தட்சக்கலைச் செய்து, |
| அருங்கலைகள் பலதெரிந்தும் | கற்பதற்கு அரிதாகிய கலைஞானங்களை யாராய்ந்தும் "கற்றிலேன் கலைகள் பலஞானம் இடைமருதுறை யெந்தைபிரானே" என்னுந் திருவாசகத்தானு முணர்க. |
| ஆரணங்கள் படித்தும் | "நால்வகை வேதம் இருக்கு தயித்திரியம்-சாமம் அதர்வணமெனச் சாற்றினர் புலவர்" எனக்கூறிய வேதங்களைச் சந்தை யிரட்டை முதலியன விலக்கணத்தோ டோதியும் |
| சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் | சிறப்புடைய பதினெண் புராணங்களோதியுணர்ந்தும் அவையாவன? |

பிரமம பாதமம வயினவமே - சைவம பாகவதமென ச சாாவருகாலம - நாரதம மாாககஎ டேயமாககினேயவு- கைவாதத மிலிஙகம வராகங-காநதம வாமனங கருதிற கூர் மம - மசசியங காருட மதிககிற பிரமாணடம-பதினென புரா ணம பணணினா புயவா

வேதச சிறப — வேதாநததிற சொலலிய உபநிடததக பொருளை மிகத களை முபபததிரணடினையு மோதித தெளிந தெளிநதம தும அவைபாவன?

பிரகதாரணயம சாநதோககியம கடவலி முணடகட- ணடவீயம தைததிரியம சாபாலம பிரகதசாபாலம அதாவசி ரசு அதரசிகை பிரமமோபநிடதது கைவலலியம சுவேதாச வததரோபநிடதது நாராயணோபநிடதது காலாசகினியுருதது ரோபநிடதது சாவசஙகறபம சுசிகெ யுநததிரோபநிடதது ஈசோவாசோபநிடதது நாரசிஙகம தாரோபநிடதது சுவரோ பநிடதது கோபாலோபநிடதது பரம அமசோபநிடதது சாபா லோபநிடதது வாசுதேவோபநிடதது காதிசாகை கௌசீதீப ம பாரததுவாசியம

சென்ருற சைவத திறகத கடவா — இவாகள நாடோறு மநுடடிதத தபோ பலததாலே சைவசிததாநதமாகிய காமிகா கம மிருபததெடடையு மதிகரிததற குரித தாவாகள

இதற சரிபை கிரியா யோகஞ செலுததியபின — இஙஙனங கூறிப வாகமஙகளிற சொல லியபடியே ஞானசாரியனிடததில தீடசை யைப்பெறறுச சரிகை கிரியாயோக மிவை களின வழிநின றனுடடிதத தபோபலததி

னாலே கிரியை யென மருவுமவையாவு ஞானங கிடைததற கு நிமிததமெனக கிளககுமென வறிக

ஞானத்தார் ஞானத்திலே தானே பரம முத்தியை சிவனடியைச் சென்றடைவர் எ-று

சேர்வர்

இதற்கு யோகச்சதுஞ் சிந்திய விசுவஞ் சுப்பிரபேதம் தேவிகாலோத்தரம் சைவபுராணத்து மறிக (கக)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.

—o—

மேலிக்க மலபரிபாகம் வருமாறு கூறுகின்றது

புறச்சமய நெறிநின்றும் - வேத * பாஃயமான பௌத்தாதிமதங்களிலே பிரவேசித்து அந்தந்த சாஸ்திரங்கள் சொன்னபடி தவம்பண்ணி[illegible],—

* பாகியம் - வெளிப்பட்டது,

அகச்சமயம்புக்கும் - கருமாதியான சதாசிவ புருஷார்த்தத்தையுஞ் சொல்லும் வைதிகத்திலே பொருந்தி,—

புகன்மிருதிவழியுழன்றும் - ருஷிகளாற் பண்ணப்பட்ட ஸ்மிருதி யுக்தாநுஷ்டான மார்க்கத்திலே நின்று வருந்தியும் மனு முதலியன,—

புகலுமாசிரம வறத்துறைகளவையடைந்து மருந்தவங்கள் புரிந்தும் - மேலு மந்த ஸ்மிருதியிலே சொல்லும் பிரமசரிய கிரகஸ்த வானப்பிரஸ்த சந்நியாச மென்னு மாசிரமங்களை யடைந் தந்தவாச்சிரமங்களுக்கேற்ற கருமங்களை யனுஷ்டித்தும்,—

அருங்கலைகள் பலதெரிந்தும் - வேதாங்கங்களாகிய வியாகரணாதி கலைஞானங்களை யுணர்ந்தும்,—

ஆரணங்கள் படித்தும் - வேதாத்தியயனத்தைக் குறைவறப்பண்ணியும்,—

சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் - அஷ்டாதச மகா புராணங்களையு மறிந்தும்,—

வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்தும் - வேதாந்த சிரவணமனன † நிதித்தியாசனங்களைப் பண்ணியும்,—

சென்றால்-இவ்வாறு உத்தரோத்தர மாகச் சநநங்கடோறு மப்பியாசம் பண்ணிவந்தால்,—

சைவத் திறத்தடைவர் - அந்த புண்ணிய பலத்தினாலே சைவ சமயத்தைப் பொருந்துவார்கள் —

இதிற் சரியைகிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தால் சிவனடிப்பைச் சேர்வர் - இந்தச் சைவத்தில் சரியை கிரியை யோகமென்னும் மூன்று வித்தையுங் கிரமத்திலே யனுஷ்டித்த தவை யிறுக்கக்களின் பலமாகிய சாலோக சாமீப சாரூபங்களை யடைந்து பின்னொரு சனனத்திலே யாசாரியனுடைய வனுக்கிரகத்தினாலே சிவ சாயுச்சியத்தை யடைவார்களென்றிதன் பொருள்

† நிதித்தியாசனம் - தியானம்

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

சிவசமாதி சித்தாந்தத்தன்றிச் சேரப்படாதென்று செப்புகின்றார்

புறச்சமய நெறி நின்றும் - உலோகாயதம் பௌத்தம் ஆருகம் மீமாம்சம் மாயாவாதம் பாஞ்சராத்திரம் என்னும்புறச்சமயங்களினின்றும்,—

புகன் மிருதி வழியுழன்றும் - அப்பொருள்வழி பொருத்திப்போய்,—

வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றால்,—

அகச்சமயம்-சைவம் பாசுபதம் வாமம் வயிரவம் மகாவிரதம் காளாமுகம் என்னு முள்ளறுசமயம்

புக்கும்,—

பின்சைவத்திறத்தடைவர் - சைவசித்தாந்தத்திற் பிரவே சிப்பர்.

இதிலெனைப் பொருள் வழிப் பொருத்திப் பொருளுரைக்க ப த்தக்கிரமத்திற் பொருளுரைத்தாற் சமயக்கிரமம் மாறுபடும்,—

ஞானத்தால் - சிவ தீக்ஷாங்க நிராலம்ப சிவ சமாதியி னால்,—

சிவனடியைச் சேர்வர் - சிவசத்தி சமானமாய்த் தமது சி ற்சத்தி விரிவு திருத்தி யிருப்பார்கள்.

போகமாத்திரத்தை நிமித்தீகரித்துவரு மலபரிபாகத்தி ற்கும், மலபரிபாகமாத்திரத்தை நோக்கிவருஞ் சிவசத்திநிபாத த்துக்கும், சிவதீக்ஷானுக்கிரகத்திற்கும், ஞானத் தியான சமாதி சிவன்முத்தி சாட்சாத்காரக்குறித்த திடசாங்கத்துக்கும், மோ க்ஷத்துக்கும், சாதிக்கிரம மாச்சிரமக் கிரமஞ் சமயக்கிரமங் கா லதேசக்கிரமங் கருதி வருதலில்லாமையாற் சமயக்கிரமத்தினின் று சைவத்திறத் தடைவரென்பது தந்திரமன்று.

சகல சமயிகளுக்கு மிலிங்கோத்தாரஞ் சைவத்திறச் சொல் லுதலால், சைவத்து வந்தமல்லது பரமுத்தி சித்தியில்லை, பதமு த்தியென்று தாற்பரியம்.

மற்றைய வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

இனி, மனனுமருளா லுணர்த்தி' என்னு மிரண்டாங் கூற் றினை இருபத்தைந்து செய்யுளான் விரித்துணர்த்துகின்றார்.

மேற்கூறிய அரும்பருவமடைதல், இங்ஙனஞ் சோபானமு றையாற் பலபிறவிகளினு மேற்பட்டு நிகழ்ந்து முற்றுப்பெறுவ

தன்றி, ஒருங்கே யொருகாலத்து முற்றுப்பெறுவ தன்றென்ப
தாம்.

சைவத்திறமென்றது சைவக்கூற்றின் முடிபாகிய சித்தா
ந்த சைவத்தை.

சென்றுவென்பது சேறலருமை விளக்கி நின்றது.

இதனானே மேற்கூறிய பருவமடையுமுறைமை கூறுமுகத்
தான் மன்னுமருளென்றதன் வகையும் அவற்றிற்கு வாயிலிவை
யென்பதூஉம் வருத்துக் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

இப்படி முன் சொல்லப்பட்ட சிவஞானம் ஆன்மாக்களு
க்கு உண்டாம்படி யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி மே
லருளிச்செய்கிறார்.

புறச்சமய நெறிநின்றும் - உலகாயதன் முதல் பாஞ்சராத்
திரியீறாகச் சொல்லப்பட்ட புறச்சமயங்களிலே சென்றுசென்
று அந்தந்த சாஸ்திரஞ் சொன்ன முறைமையிலே யனுட்டித்
தும்,—அகச்சமயம்புக்கும் - உட்சமயமாகிய பாசுபதம் மாவிர
தம் காளாமுகம் வாமம் வயிரவம் என்றுசொல்லப்பட்ட அந்
தச் சமயங்களிலே புகுந்து அந்தந்தச் சாத்திரங்கள் சொன்ன
முறைமையிலே யனுட்டித்தும்,—புகல்மிருதி வழியுழன்றும் -
சொல்லப்பட்ட மிருதிவழிகளிலே திரிந்தும்,—புகழ்மாச்சிரம
வறத்துறைகளவையடைந்தும்-கொண்டாடப்பட்ட ஆச்சிரம
மான தன்ம நெறிகளைச் செய்தும்,—அருந்தவங்கள் புரிந்தும்-ப
ஞ்சாக்கினியை முதலான அரிய தபசுகளை விரும்பிச் செய்தும்,—
அருங்கலைகள் பலதெரிந்தும் - அரிய சாத்திரங்கள் பலவுமோதி
புணர்ந்தும்,—ஆரணங்கள்படித்தும்- வேதங்களையோதியும்,—

சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் - நன்மைப் பகுதிகளைச்
சொல்லுகிற புராணங்களை யோதியறிந்தும்,—வேதசிரப்பொ
ருளை மிகத்தெரிந்தும் - வேதாந்தத்தினர்த்தங்களைமிகவும் ஆரா
ய்ந்து இதுவே யதார்த்தமென்று அறுதியிட்டறிந்தும்,—சென்ற
சைவத்திறத்தடைவார் - இவையிற்றை வழுவறச்செய்து முடித்
ததுயாதொரு ஜனனம், அந்த ஜனனம்போய் மற்ற ஜனனத்
திலே சைவநெறியைச் சென்று பொருந்துவார்கள்—இதற் சரி
யைகிரியாயோகஞ் செலுத்தியபின் - இந்தச் சமயத்திலே நின்
று சரியை கிரியாயோகங்களைச் செய்து அவையிற்றின் முதிர்ச்
சியினாலே ஞானத்தைப்பெற்று,—ஞானத்தாற் சிவனடியைச்
சேர்வர் - அந்த ஞானத்தினாலே சிவனுடைய ஸ்ரீபாதத்தைப்
பொருந்துவார்கள்.

என்னவே கிரியையாலே மோக்ஷமென்ற சைவரை மறுத்
து ஞானத்தினாலே மோக்ஷமென்றதெனக் கொள்க

இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம், "பல்பணி
ஞான காரணமென்னிற் றொல்பணி தொறும்பயன் றுப்பெற்
றனு-மொருபணிசெய்யாச் சிரபுரச் சிறுவரு-மரசராய் கருணை
த்தலைவரு-முதிரா பரசமயத் திதமுறுமரசரு - ஞானம்பெற்ற
னனையிலு-மீனமில்பணியருட் கேதுவன்றன்றால்- ஞானோ
ற்பத்தி நிமித்தமித்தொழிலென- வேறொற்றிறைநூ லியம்பிற்
றென்னும்" என்றும், சிவஞானபோதம், அ சூ, க-வெ, "தவஞ்
செய்தா ரொன்றந்தவுலோகஞ் சார்ந்து, பவஞ்செய்து பற்ற
றுப்பாராகத் —தவஞ்செய்த, நற்சார்பில் வந்துதித்து ஞானத்
தை நண்ணுதலை, கற்றோர்க்குஞ் சொல்லுமாங் கண்டு" என்னும
துவ கண்டுகொள்க

இதன்றற் சொல்லியது, உலோகாயதன், புத்தரில் சவுத்தி
ராந்திகன் யோகாசாரன் மாத்தியமிகன் வைபாடிகன், அமணரி

ஸ்திகண்டவாதி ஆசீவகன், மீமாஞ்சரில் பட்டாசாரியன் பிரபாகரன் லகாயதிகன் மாயாவாதி பாற்கரியன் கிரீசசுரசாங்கியன் பாஞ்சராத்திரி ஆகப் புறச்சமயத்திற்பேதம் பதினாறும், அந்தந்த முறைமைகளிலே நின்றும், பாசுபதம் மகாவிரதம் காளாமுகம் வாமம் வயிரவம் என்கிற உட்சமயத்திற் பேதம் ஐந்திலும் புக்கு அந்தந்த முறைமைகளிலே நின்றும் ‘புகல் மிருதி’ என்ற பதமுதல் ‘வேதசிரப்பொருளை மிகத்தெளிந்தும்’ என்றபத மீறாக உழன்றும் அடைந்தும் புரிந்தும் தெரிந்தும் படிந்தும் உணர்ந்து மிகத்தெளிந்தும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட முறைமைகளை வழுவறச்செய்து முடிந்தால் சைவநெறியைப் பொருந்துவார்களென்றும், இதிலேநின்று சரியைகிரியை யோகங்களை யனுட்டித்தால் அந்தமுதிர்ச்சியிலே ஞானமுண்டாயந்த ஞானத்தினாலே சிவனுடைய ஸ்ரீ பாதத்தை யிரண்டறச் சென்று பொருந்துவார்கள் என்னு முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

புறச்சமய நெறிநின்றும் - புறச்சமய நூல்வழியே யொழுகியும்,—அகச்சமயம் புக்கும் - அகச்சமய நூல்வழியே சென்றொழுகியும்,—புகல்மிருதி வழியுழன்றும் - சொல்லப்பட்ட மிருதி நூல்வழியே சென்றொழுகியும்,—புகலுமாச்சிரம வறத்துறைகளவையடைந்தும்-வேதங்களிற் கூறியவாறு ஆச்சிரம தருமங்களிற்குறைவின்றியொழுகியும்,— அருந்தவங்கள் புரிந்தும் - செய்தற்கரிய தவங்களைச்செய்தும்,—அருங்கலைகள் பலதெரிந்தும்- அரிய கலைஞானங்களைப் பலபயின்றும்,—ஆரணங்கள் படித்தும் - வேதங்களை யோதியும்,—சிறப்புடைய புராணங்களுணர்

ந்தும் - சிறப்புப் பொருந்திய புராணங்களை யறிந்தும்,—வேதச் சிறப்பொருளை மிகத் தெளிந்தும் - உபநிடதப்பொருளை மிகவு மாராய்ந்து தெளிவுற்றும்,—சென்று சைவத்திறத்தடைவர் - இங்ஙனஞ் சோபான முறையாற் பலபிறவிகளிற் மேற்பட்டுநி கழ்ந்து சென்று சைவக்கூறின் முடிவாகிய சித்தாந்த சைவ த்தைத்தலைப்பட்டுவர்,—இதிற்சரியை கிரியாயோகஞ் செலுத்திப பின் - இச்சித்தாந்த சைவத்தினுஞ் சரியைகிரியா யோகங்களை ய னுட்டித்துமுன்னியபின் — ஞானத்தால் சிவனடியையச் சேரவ ர் - ஞானத்தைப்பெற்று அதனாற் சிவனருளைச் சேரவருசுலின மேற்கூறிய பருவமடைதல் ஒருங்கே யொருகாலத்து முற்றுப் பெறுவதன்று

இதனுலே மேற்கூறிய பருவமடையு முறைமை கூறுமுகத் தான் மன்னுமருளென்றதன் வகையும் அவற்றிற்கு வாயி லிவை யென்பதூஉம் வகுத்துக் கூறப்பட்டன

## மறைஞானதேசிகர் உரை



ஒருநிலை துணிந்தொன்னுங் கந்திரவுத்தியா லுலோகாயதன
முதலியோர் முத்திச் சிறப்பினையுஞ் சித்தாந்த
முத்தியே பரமுத்தியென்று முணர்த்துகின்றார்

இம்மையே பீமொட்டாண்டையதியெழிலாரு மே ந்திழையார் முத்தியென்று மிருஞ்சுவாககமுத்தி, யம் மையே யென்றமுத்தி யைந்துகந்த மறக்கெடுகை யெ ன்றுமட்ட குணமுத்தியென்று, மெய்ம்மையே பா டாணம் போலகைமுத்தியென்றும் விவேகமுத்தி யெ ன்றுந்தன மெய்வடிவாகு சிவத்தைச், செம்மையே

பெறுகைமுத்தி யென்றுஞ்செப்புவர்கள் சிவனடியை
ச் சேருமுத்தி செப்புவதியல்பியாமே. (௧உ)

(இ-ள்) இம்மையே யீரெட்டான தெய்தி யெழிலாரும் போகந் திளைப்பார் முத்தியென்றும் — இந்தவுலகத்தின் மடந்தைப் பருவமுடைய மாதருடன் கூடி யவருடனூடுத லுணர்தல் பிரிவுற்றவிடத்து வாடுதல் வணங்குதல் லீவைகளை யரிய தபசுபண்ணுந்தவர்களிடத்தி லுண்டாகிய சுகத்தை யடைகிறதே முத்தியென்றும்

இருஞ்சுவர்க்க முத்தி யம்மையே முத்தியென்றும் — வேதத்திற் கிரியாபாகத்தைப்பற்றி யனுட்டிக்கு மீமாஞ்சகன் சோதிட்டோம முதலிய வனுட்டானத்தாலே யொரு கன்ம முண்டாயதுதானே பலத்தைக் கொடுக்கும், சுருதி வாக்கியார்த்தமாகிய சத்தமே தேவதையொழிந்து வேறொரு தேவதை கன்மபலத்தைக் கொடுக்க வேண்டுவதில்லை சுவர்க்கத்தை யடைகிறதே முத்தியென்றும்.

கந்தமைந்து மறக்கெடுகை யென்றும் — புத்திதத்துவ முதல் சீழுள்ள தத்துவங்க ளெல்லாங்களும் க்ஷணிகமாயிருக்கும், ஆன்மாவு மீசுரனுமென்பதொன்றில்லை, முத்தி பூதத்தினுடையதா யிருக்கிற கூட்டமேயென்று ரூபக்கந்தமும், சுகதுக்க ரூபமாயிருக்கிற புத்தியினுடைய சத்தியென்னும் வேதனாக்கந்தமும், யாதொன்றுக்கு யாதொரு கந்தக் கூட்டங்களுடைய சத்தி சஞ்ஞாக்கந்தமும், ஞானமிடைவிடாம லிருக்கிறதே ஞானக்கந்தம், இந்த ஞானத்தை விசேடித்தறிகிற சத்தியே விஞ்ஞானக்கந்தம், ஆக விந்தப் பஞ்சக்கந்தங்களும் நோக்கக் கெடுகிறதென் றறிகிறது மிந்த நூலையுபதேசித்த சுகத பகவானையே வழிபடுகை முத்தியென்றும்

அட்டகுணமும் அருகசாத்திரஞ் சொல்லிய அநந்தஞா
ததிவென்றும் னம் அநந்ததரிசனம் அநந்த வீரியம் அநந்த
சுகம் நிர்நாமம் நிட்கோத்திரம் நிராயுஷ்
யம் சகலசம்மியக்பாவம் எனக்கூறிய குணங்களோடு
இது தொகை

அதனை வகுத்தறியில் அநந்தஞானம் ஐந்துவகைப்படும். அஃதாவது? மிதி சுருதம் அவதி மனபரியாயம் கேவலம் எனவரும் இதனை ஞானாவரணியமென்பார்கள்

இனித் தரிசனாவரணியம் ஒன்பது பேதப்படும் அவையாவன? சட்சுதரிசனம் அசட்சுதரிசனம் அவதிதரிசனம் கேவலதரிசனம் நித்திரை நித்திராநித்திரை பிரசலை பிரசலாபிரசலை திட்டானக்கிரந்தியென வரும்

இனி வேதநீயம் இரண்டு சாதவேதநீயம் அசாத வேதநீயம் எனவரும்

ஆயுஷியம் நாலு, தேவாயுஷியம் திரியக்காயுஷ்யம் மனுஷ்யாயுஷ்யம் நரகாயுஷ்யம் எனவரும்

இனி மோகனாவரணியம் இருபத்தெட்டு மித்தியாத்தவம் மிகவு மித்தியாத்துவம் சம்மியக்ம் பிரகிருதி அநந்தானுசந்தி குரோதம் மானம் மாயாலோபம் அபிரதி யாசகியானதி குரோதம் சஞ்வலனம் அதிக்குரோதம் அதிமானம் அதிமாயம் அதிலோபம் சிரிப்பு அரதிருதி சோகம் பயம் நிந்தை மாதாவேதம் புருடவேதம் அலிவேதம் சத்தாவலோகனம் மாதிருதரிசனம் சாகாகிரகணதரிசனம் ஞானம் எனவறிக

நாமம் தொண்ணூற்று மூன்றுபேதப்படும். மயம் சங்தம் இரகம் பரிசம் உத்தியோகம் உச்சுவாசம் வாதாமபரியாத்தி அபரியாத்தி சூக்குமவியாத்தி பிரசித்தம் அப்பிரசித்தம் சிலக தற்பக அதேய அநாதேய சாகாய சகீர்த்தி அபகீர்

த்தி அகுரு இவத உபகாதா பரகாதா ஊனபூரவி இதமுதலா கப பிணடாபிணட பிரகிருதி பேதததிஞலே யவைகளை யறிக.

இனி கோததிரமிரணடு உயாநத கோசதிரம தாழநத கோததிரம எனவரும

இனி அநதராயம அஞசுபேதம, சாநாநதராயம இலாபா நதராயம போகாநதராயம உபபோகாநதராயம வீாியாணியநதராயம எனவரும

இநத வடடவித கனமதகை விசாரிததறியில் நூற்று நாற்பததெடடென வறிக

இதனமேல விரிககிற பெருகுமென வறிக

| | |
|---|---|
| மெயமமையே பாடாணம போலகை முததியெனறும | உணமையாகவே கருவிகரணதிசளொல்லா ம கழிநது பாடாணமபோலே கிடககிறதெனனும பாடாணவாதி முத்தியும |
| விவேசமுததி யெனறும | மாயாவாதி சமூததிரததி னிடததிலே திரைதோனறி யதிறஙனே யொடுஙகுமாறு போலப பிரமததி னிடததிலே சகததுததோனறி யதிலேயதானே யொடுஙகு மாயையிறகாடடில விலடசணமான பிரமசுரூபததை வேதாநத ஞானததிஞலே விவேகிதத றிகிறதே முததியெனபதும |
| தன மெயவடி வாஞசிவததைச செமமையே பெறுகை முததி | சிவசமவாதி யானமாவுககுச சுபாவமான சைதனனியததின முறைமையினையும சிவனது சீபாததததினையுந தானணைசலையு மினறி மயககததாற றனனையே சிவனென மதிககு முததியும |
| என்றுஞ்செப பூவர்கள | உமமையாற சங்கிராநதவாதிய பாசுபத முததியும சமாவேசமாகிய காபாலமூர்த்தி |

கம் நரகமென்ப தேதென்னில்?* மஜ்ஜன போஜன கந்த புஷ்பாதி சௌக்கியமே சுவர்க்கம், இவைகளின்றி தரித்திரத்திலும் வியாதியிலும் பீடிக்கப்படுகிறதே நரகம், அழகையுடைத்தாகிய அவயவங்களையுடைத்தாய பதினாறு வயதாய † மதனகலா வல்லபைகளாயிருக்கிற ஸதிரீகளுடனே கூடி யநுபவிக்கிற வேளையில் ‡ நீவிவிடுகிறதே மோக்ஷமென்னும் லோகாயதனும்,—

* மஜ்ஜனம் - ஸ்நானம், † மதனகலாவல்லபை - மன்மதநூலில் கெட்டிக்காரி ‡ நீவி - துணிமுடிச்சு

இருஞ்சுவற்கமுத்தி யமைப்பென்றும் - வேதோக்தக்கன்மானுஷ்டானங்களினாலே யிந்தப் பூதபரிணாம தேகத்தை விட்டு திவ்விய தேகியாய் மறுமையிலே பெரியபோகத்தை யுடைத்தாகிய சுவர்க்கத்தை யடைவதே மோக்ஷமென்னும் பூர்வமீமாம்சகனும்,—

ஐந்து சந்த மறக்கெடுகை முத்தியென்றும் - ரூபம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமாகிற பஞ்சஸ்கந்தமும் § சந்தானமின்றியில் நிச்சேஷமாகக் கெடுகிறதே மோக்ஷமென்னும் பௌத்தனும்,—

§ சந்தானம் - பரம்பரை.

அட்டகுண முத்தியென்றும் - அனந்தஞானம் அனந்ததரிசனம் அனந்தவீரியம் அனந்தசுகம் நிர்நாமம் நிர்க்கோத்திரம் நிராயுஷ்யம் சகலசமயிதா பாவமென்னு மெண்குணப் பிராப்தி மோக்ஷமென்னும் ஜயினனும்,—

மெய்ம்மையேபாடாணம்போலகை முத்தியென்றும் - ஆத்மா சடமாய ஞானாசரயமாயிருக்கும். அதெப்படி யென்னில்? விளக்குத்தகளியும் விளக்கும்போல அந்த ஞானத்தினாலேசுக துக்கானுபவமுண்டாயிருக்கும் ¶ ஷோடச பதார்த்தவ

¶ ஷோடசம் - பதினாறு

ஞானத்தினாலே சுகதுக்கங்களும் தகேதுவாயிருக்கிற ஞானமும் நீங்கப் பாஷாணம்போல வோரறிவுமற்றிருப்பதே மோக்ஷமென்னும் நியாய வைசேஷிகனும்,—

விவேக முத்தியென்றும் - பிரகிருதிபுருஷ விவேகத்தைப் பண்ணிப் பிரகிருதி விகாரங்களுக்குத் தானன்னியமாகக் காத்திருத்தல் போகத் திருத்துவங்களற்று நிற்பதே மோக்ஷமென்னும் நிரீசுவர சாங்கியனும், மேல் மாயாபுருஷ விவேகத்தைப் பண்ணி மாயையை நீங்குவதே மோக்ஷமென்னும் மாயாவாதியும்,—

தன்மெய்வடிவாகுஞ் சிவத்தைச் செம்மைபெறுகை முத்தியென்றுஞ் செப்புவார்கள் - பாஞ்சராத்திரிகள் மகாவிஷ்ணுவினுடைய கிருபையினாலே பிராகிருத தேகத்தை நீங்கித் தங்களுக்குச் சத்திய ஸ்வரூபமான சுத்த சித்துருபாய விஷ்ணு× துல்யஞாய ஸ்ரீ பூமி நீலாசத்தித்திரய வியதிரிக்தமான சகல போகங்களும் மகாவிஷ்ணுவைப் போலே நித்தியமாயுடைத்தாயிருக்கை மோக்ஷமென்றும், பூர்வ சைவர் சிவானுக்கிரகத்தினாலே யாணவமாயை காமியங்களினீங்கச் சத்தியமும் சுத்தமுமாய்த் தங்கள் ஸ்வரூபமாகிய ஞானக்கிரியை பிரகாசிக்க வந்தால் சாவஞ்ஞத்துவாதி ஷாட்குண்ணியாபி வியத்திபாய்ச் சிவசமமாயிருப்பதே மோக்ஷமென்றுஞ் சொல்லுவார்கள்; ஆதலால் இதெல்லாம் பதமுத்தியே —

× துல்யம - சமானம

சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங்கியாமே - ஆன்மாவுஞ் சிவனு மனாதியே பிரிவற்றது, அந்தப் பிறிவில்லாமையைத் தோன்றுதபடி யனாதியே யாணவசத்தி தடுத்திருக்கையாலித்த வுபாதிகளினாலே யசத்தியமாகிய போகங்களைச் சத்தியமென்று மயங்கினின்று சிவானுக்கிரகத்தினாலே யுபாதித் திரயங்களும் நீக்கக் கண்ணின்று காசகாமலாதி தோஷம்நீங்கக் காக்ஷி

யைப் பெற்றதுபோல,சிவனுடைய பிரிவில்லாமையைச் சிவஞா னத்தா லனனியமாகக் கண்டு சிவானந்த பரவசத்தினாலே சிவ மேயாய் நிற்பது மோக்ஷமென்று சொல்லிய பரமமுத்தியை யடைவது உத்தர சைவராகிய வெம்மொரேரோயென றிதன பொருள

பதமென்ற சொல்லுக்குப பொருள நிசசயம, ரக்ஷை, இரு சகுமிடம, அடையாளம,அடி, ஒருவஸது, இததனையுமாகையா ல், இவவிடத்துச சிவனடியைச சேரவென்றது சிவமாகியவஸ துவைப பொருநதவென்றது

பொருநத வென்றதினு லிரணடிருநது கூடிய தல்ல, தன னுடைய பிளளையானவன வியாதியினாலே மிகவும பீடிககபபட டுக குணமானபொழு திநதப பிளளையை யிபபொழுது பெறறே னென்றதுபோல வுபாதியினாலே சிவானுபவம விளஙகாமலிரு நது விளஙகினபிறகு கூடியதென்று சொலலவேணடியது

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

ஆகலால், லோகாயதன முதலோர முத்தி, முத்திப்போலி யெனபதுந தெரிவிததற்கு, சித்தாநத முத்தித்திறனுஞ் செபபுகின றார.

இரமையே யீரேட்டாண டெய்தி யெழி லாரு மேற்றிழை யார முத்தி யென்றும - முழுகுதல் புசித்தல பூசுதல் முடித்த ல் முதற சுகமே சுவாககம, அநதச சுகமிலலாமை நரகம, மகளி ரை மணதத லிமமையே முததியென்று லோகாயதன சொல லுவன,—

இருஞ் சுவாகக மமமையே முததி யென்றும- பூர்வமீமா ம்சன் சொலலுவன,—

உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞான மென்கின்ற,

கந்தவைந்து மற்றக் கெடுகை முத்தி யென்றும் - புத்தரிற் பிரதீப நிருவாணவாதி பேசுவன —

அனந்தஞான மனந்ததரிசன மனந்தவீரிய மனந்தசுகம் நிர்நாமம் நிர்க்கோத்திரம் நிராயுஷ்யம் சகலசமயசுபாவ மென்னும்,

அட்டகுணமுத்தி - என்று மருக விசைப்பன —

ஞான முதலிய செயற்கைக் குணங்கள்கெட்டு இயற்கை யஞ்ஞானமே குணமாய்,

பெயபமைமயே பாடாணம் போல்கைமுத்தி என்று தார்க்கிகர் சாற்றுவன,—

பிரகிருதி புருஷ,

விவேக முத்தி என்றும் - சாங்கிய ருரைப்பன —

தன் மெய் வடிவாகு சிவத்தை - தனதிந்த வடிவு போற் சாகார சிவமூர்த்தி சாரூப சிவாகாரத்தை,—

செம்மையே பெறுகைமுத்தி - பரமுத்தியாகப் பரியபது முத்தி,

என்றும் - சிவசமவாதி,—

செப்புவன - இப்படி வாதிகள் செப்புவார்கள்

சிவனடியைச் சேருமுத்தி - சிவசத்திக் கொத்து விரிக்குஞ் சாட்குண்ணிய சிற்சத்தி காம சிவத்துவாபி வியத்தியா முத்தி,—

யாம் இங்குச் செப்புவதே.

சில ஆதுநிக சைவாசாரியா யாகு சொல்லு மிந்த முத்தியைச் சாரூப முத்தி சாற்றுஞ் சிவசமவாதி முத்தியாய்த் திருப்பி நமது சிவசித்தாந்த சித்த சிவசாதிர்ச்சிச சிவசாத்தியைக் கிட சிவசுத்தாத்துவைத முத்தித் துவேஷிகளாய் வேதாந்த வி

சேஷுசித்த விசிஷ்டாத்துவைத கோடி [illegible] வி சிவ வித்தி யத்துவைத விசிஷ்டாத்துவைதப [illegible] தி விளம்பி விப்பி ரலம்பராய் விட்டார்கள்

வாதிகளையும் பதமுத்தி [illegible] பகுப்பு வகுப்பாம் —

பூதானம ஞானோபாய [illegible] க்கு முலோகாயதனுக்கும், பூதவிசேஷப் பிராணுனா [illegible] பாய முபதேசிக்கும் தௌத [illegible] ம், விஞ்ஞானகந் [illegible] ஞானோபாய முபதேசிக்கும் [illegible] ருவாண [illegible] கனமேசவர ஞானோபாய முப [illegible], சோதிரானம ஞானோபாய முபதே சிககுஞ சோ [illegible] ர விதநகக்ளுககும், சூரியாககினி சமாத்ம ஞானோபாய முபதேசிககுஞ சூரியாககினி சாமியவாதிகட்கு ம, அவரவாககருகமான பஞச பூசபுவனப் பிராபதிதானே மோட்சம.

பூதாணடகாரணப் பிரம ஞானோபாய முபதேசிககும ஸமாததாககுத தனமாததிர புவனப் பிராபதி தானே மோட்சம.

இநதிரியானம ஞானோபாய முபதேசிககு முலோகாயத னுககுளொருவனுககு இநதிரிடபுவனப் பிராததிதானே மோட்சம

மனுதம ஞானோபாய முபதேசிககு முலோகாயதாககு ளொருவனுககு மனோ புவனபிராபதிதானே மோட்சம.

அகஙகாரானம ஞானோபாய முபதேசிககும வைசேஷிக னுககு அகஙகார புவனப் பிராததிதானே மோக்ஷம.

புததியானம ஞானோபாய முபதேசிககும நையாயிகனுக் கும், புததிவிாததி யானம ஞானோபாய முபதேசிககும புததனு ககும புததி புவனப் பிராபதிதானே மோக்ஷம.

சலஞசல சதசதகுணனம ஞானோபாய முபதேசிக்கு மரு கனுக்குக குணபுவனப் பிராப்திதானே மோக்ஷம்.

பிரமகாரியான்மா ஞானோபாய முபதேசிகளும் ப[illegible] வேதாந்திகளும் நாராயணப் பிரகிருதி காரியானம ஞானோபாயமுபதேசிகளும் பாஞ்சராத்திரிகளும் பிரகிருதி புவனப் பிராப்திதானே மோக்ஷம்

சத்தப்பிரம சிரீடாப்பிரம சித்திரப் பிரமவாதிப் பிரமுகர்களும் பிரகிருதிபுவனப் பிராப்திதானே மோக்ஷம்.

யோகோபாய முபதேசிகளும் பாதஞ்சலர்களும் பிரகிருதி புருஷ விவேக ஞானோபாய முபதேசிகளுஞ் சாங்கியர்களுஞ் சந்நியாசோபாய முபதேசிகளும் வியாத்த வேதாந்திகளு மான்மவாதிகளாதலால் புருஷபுவனப் பிராப்திதானே மோக்ஷம்

சிவ தீக்ஷாங்கியங்க சிவஞானோப கிருத சாகார சிவாத்ம பாவனோபாய முபதேசிகளுஞ் சிவவாதிகளாகும் சைவரிற சைவ பவுராணிகர்க கிராக புவனப் பிராப்திதானே மோக்ஷம்

சாகார நிராகார சிவபாவனு பரசோம சித்தாந்திகட்குக் கலாராக காப்ப வித்தியா புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

சிவாவேச வாதி பாசுப காபாலர்கட்குக் கலாபுவனப் பிராப்திதானே மோக்ஷம்.

காலேசுர வாதிகட்குக் காலதத்துவப் பிராப்திதானே மோக்ஷம்.

சங்கிராந்த வாதியாகிய சைவபாசுபதர் வைதிகபாசுபதர்களுஞ் சமுத்த பத்திவாதி மாவிரத விசேஷர்களும் மாயா புவனப் பிராப்திதானே மோக்ஷம்.

கலாதத்துவாந்த சோதினியாகிய தீட்சாவான்களுக்கு விஞ்ஞான கைவல்லியந்தானே மோக்ஷம்.

சாவஞ்ஞத்துவ மாத்திரவாதி மகாவிரதர்க்குச் சுத்த வித்தியா புவனப்பிராப்திதானே மோக்ஷம்.

பிரயோசசிய காதசிருதநுவ வாதிகடகும் பிரவாகே வர வாதிசடகும அநேகேசவர வாதிகடகும ஈஸ்வர புவனப பிராததிதானே மோக்ஷம

சதாசிவ சாமிப வாதிபாகிய சிவசமவாதிகளுககுச சதாசிவ புவனப பிராபதிதானே மோக்ஷம

சுததசாததாககுச சததி புவனப பிராபதிதானே மோக்ஷம்

வாம தக்ஷிண காருட பூதநாநதிரிகாககுச சததிகலா புவனப் பிராபதி தானே மோக்ஷம

சிவ தீக்ஷா சாகலலிய சுததராயிருநதுஞ் சிவவிபததியை கடியஞ செயபு மியபோதுளள சைவாககு

"சநவக்ஷ கலநதுஜாதீயாத
புநஷம லோகபாவநம"

எனனும வசனததினுற சததி புவனப பிராபதி தானே மோக்ஷம

தீக்ஷா வைகலலிப வானக்ாகில் முறசொலலிப புருஷ புவனப பிராபதி தானே அலலது சிவலோகப பிராபதிதானே மோக்ஷமெனறு சிநதிககபபடும

சிவனுககு வைநதய சரீம வாஸதவ மெனனுஞ சாமானிய சைவாககுச சிவதததுவ புவனப பிராபதிதானே மோக்ஷம

உலோகாயததாதி வேதாநதியநத ஆனமவாதிகளுககு மாணம விவேகப பிரவாததிமானகளாகையாற சிவவாதிகள பணணுஞ சிவவிவேகததிறகு மானம விவேக மடிபபடையாதலான அவவானம விவேககடகு மலபரிபாக நோககுஞ சிவசமான பரமுததி பாரககுமபாததிரமாங கால மெணணிககைக கிசையுமாதலா லவரவா முததி சாதனஙகள சபலஙகளதானே, நிஷபலஙகளனறு.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

ஏனைச் சமயநூலார் கூறு முத்திகளாவன? சோபானமுறையால் நின்முத்து ஞத்மீருயக் கிடந்த முப்பத்தாறு தத்துவங்களிடைச்சட்ட பிவனவாய அரிவைய நினைப்புறூமுதத் முதலாயினவாம். வேதாகமநூ லுண்மையுணர்ந்த யாங் கூறுமுத்தியாவது, முப்பத்தாறு தத்துவங்களுக்கு மப்பாற்பட்ட சிவனடியைச் சேருமுத்தியா மெனப்படும்.

ஏந்திழையை யென்னு மிரண்டாவது விகாரத்தாற் றொக்கது.

ஆமுத்தி வினைத்தொகை.

உரைமேயப் எக்கிரது கழிஇயிரருக்கி ரணைநிச்கூறுந்த சமயமுத்திகளெல்லாம் இவற்றுடனே வைத்துக் கூறிக்கொள்க.

இங்ஙனே புறச்சமயநெறிநிற்றல் முதலியனவெல்லாஞ் சைவசித்தாந்தத்தைக் கருச் சோபானமுறையானவாயினமாறும் அவற்றது பயன் கூறுமுகத்தானே இனிது விளக்கப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

மேல் முத்தித்தொகை யருளிச் செய்கிறார்.

இம்மையேயிரட்டாணை யெய்தியெழிவாரு மேந்திழையார் முத்தியென்றும் - இம்மையிலே பதினாறு வயதைப்பொருந்தி அழகினையும்பொருந்தி ஆபரணங்களையுந் தரித்திருப்பதாயுள்ள ஸதிரீகளுடனே கூடி அவர்களிடத்து ளுண்டான சுகத்தை யனுபவிக்கிறதே முத்தியென்று உலோகாயதன் முறைமையும்;— இருஞ்சுவர்க்கமுத்தி யம்மையென்று - ஏகத்தியாதி கனமக்

களைச்செய்து மறுமையிலே சுவர்க்கத்தைப் பெறுகிறதே முத்தியென்னும் பட்டாசாரியன் முறைமையும்,—முத்தியைந்துக் கந்தமறக் கெடுகையென்றும் - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்கிற பஞ்சகந்தங்களும் நேராகக் கெடுகிறதே முத்தியென்னும் பௌத்தரில் சவுத்திராந்திகன் முறைமையும்,—அட்டகுண முத்தியென்றும் - எட்டு பதினெழு ஆறு என்னும் மூன்றுவகையாயுள்ள குணங்களை விடுகிறதே முத்தியென்னும் சமணரில் நிகண்டாவாதி முறைமையும்,—மெய்ம்மையே பாடாணம் போலகை முத்தியென்றும் - உண்மையாகவே ஆன்மா ஒன்றுமறியாமற் கற்களைப்போலே கிடப்பதே முத்தியென்னும் அகச்சமயத்திற் பாடாணவாதி முறைமையும்,—விவேக முத்தியென்றும் - இந்த ஜீவான்மாவுக்கு விவேகஞான முண்டாகிறதே முத்தியென்னும் மாயாவாதி முறைமையும்,—தன் மெய்வடிவாஞ்சிவத்தைச் சேர்கையே பெறுகை முத்தியென்றும் - ஆன்மா தனக்குள்ளே வித்தசரீரமானது ஸ்வரூபத்தைப் பெற்று நித்தியமாயிருக்கிறதே முத்தியென்னும் அகச்சமயத்திற் சமவாதி முறைமையும்,—செப்புவர்கள் - இப்படிப் பலவாகச் சொல்லுவர்கள் அப்படிச் சொல்லுகிற விவை குற்றத்தைப் பொருந்தின முத்திகளாம்,—சிவனடியைச் சேர்முத்தி செப்புவதிங்கியாமே - ஆகையால் பரமேசுரனுடைய சீபாதத்தைப் பெறுகிற முத்தியே இவ்விடத்தில் முத்தியென்று சொல்லப்படுவதும், யாங் கொள்ளப்படுவது மதுவே.

இம்மையே யீரெட்டாண் டெய்தி யெழிலாரு மேந்திழையார் முத்தியென்றது உலோகாயதன் பிரத்தியட்ச மொழிந்த அனுமான முதலானவை கொள்ளாத படியாலே இம்மைப்பய னாகிய மகளிரிடத்துச் சிற்றின்பமே முத்தியென்று கொண்டா னெனக்கொள்க.

இதறகுப் பிரமாணம பரபடசம,அவனமதம-உ௦-செ "ஊடு வதுணாவததுறற கலவிமங கயனையுளகி, வாடுவததடியில் வீழநது வருநதுவ தருநதவமபின, கூடுவதுணாவு செட்டுக குணமெலா ம வேடகைபாகி, நீடுவதினபமுததிபிததினி ஈருாகள முததா, எனறும, அவன மறுமைபபயன கொளளானெனபதறகுப பிர மாணம பரபடசம, அவனமதம-உ௪-செ "வீட்டினையுளதென ரேஷ மெலிவதிஙி கனவோவீடு, காட்டுவோர கணடோரகேட டோர கரியவையுணடேற காட்டினா,நாட்டினிலரசனுணைக கிசை யவேநடநது நாளுந, மீட்டியபொருளகொண டிஙகே யினபந து விளையநதிடமோ" எனனுமதுங கண்டுகொளக

இருஞசுவாககமுததி யமமையேயெனறது பட்டாசாரிய ன இமமையிலே நிததிய கனமஙகளைச செயய நனமைப பகு திக ளுணடாமெனறும சோமயாக முதலாயுளள யாகஙகளைச செயய மறுமையிலே மகததாகிய சுவாககததைய பெறுகிறதே முததியெனறும சொனனான எனககொளக

இதறகுப் பிரமாணம பரபடசம, அவனமதம-கக-செ "நிததியாலநிததகனம நிகழததிட சுபததைநீஙகாா, திதிலாவிச சா கனமஞ செநதழலோமபிசசெய்ய, வேததானவேணடுந தெலலா மெயதலாஞசோமயாக,மாததா ஞகைவிசி யமைததி டவிடதாமே" எனற திருவிருததததிற கணடுகொளக

அவன செயலகளே முததியைக கொடுககும தொழிநது ஒரு காததா வுணடெனறுகொளளான எனபதறகுப் பிரமா ணம் பரபடசம, அவனமதம கஉ செ "கருதியகனமஞான மி ரணடு காலாக்ககொணடு" எனற திருவிருததததிற கணடுகொ ளக.

முததி யைநதுகநத மறகெடுகை யெனறது சவுததிராநதி கனபிருதிவி யபபுதேயு வாயு எனற பூதரூபம நாலும, அறிவுகக்

தமிரதம் வன்னம் என்கிற உபாதான ரூபம் நாலும், ஆக ரூபகந்தம் எட்டு. குசலாவேதனை அகுசலாவேதனை குசலா குசலாவேதனை என்கிற வேதனாகந்த மூன்று. சோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் மனம் என்கிற குறிப்புக்கந்தம் ஆறு. பொய்சொல்லல் கோட்சொல்லல் கோபித்துச் சொல்லல் பயனில் சொல்லல் என்கிற வாக்கின்குணம் நாலும், களவுக்குப் போகல் வதைத் தொழில் செய்தல் கொலைசெய்தல் ஆக காயத்தின் குண மூன்றும், கொலை நினைக்கை காமப்பற்று ஆசையென்கிற மனத்தின் குணம் மூன்றும், ஆசத் தீக்குணம் பத்து. மெய்யுரைத்தல் வார்த்தை இனியன கூறல் பயன்படு சொல் என்கிற வாக்கின் குணம் நாலும், பள்ளிவலம் வருதல் தவம்புரிதல் தானஞ் செய்தல் என்கிற காயத்தின் குணம் மூன்றும், அருணினைவு ஆசையறுத்தல் தவப்பற்று என்கிற மனத்தின்குணம் மூன்றும் ஆக நற்குணம் பத்து. ஆக பாவனைகந்த மிருபது. சத்த பரிச ரூப ரச கந்தம் சித்தம் என்கிற விஞ்ஞான கந்தமாறு. ஆக இங்ஙனம் நாற்பத்து மூன்றாக எண்ணப்பட்டு வருகிற பஞ்சகந்தங்கள் ஐந்தும் காரணங்கட்கக் காரியங்கட்கு மென்பது மிருத்துரை யில்வழக்குமாயப் பந்தத் துக்கமுமாய இது குற்ற வீடென்றும் கந்தங்களைந்தும் நேராகக்கெட்டு வீட்டின்பத்தை யடையுமென்பதுவே முத்தியின்பமாகக் கொண்டானெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் பரபட்சம் அவன்மதம், ௩௧ செ, "ஒங்கியவுருவமோடு வேதனைக்குறிப்பிரோடு" என்னுந் திருவிருத்தத்திற் கண்டு கொள்க

அட்டகுண முத்தியென்றது நிகண்டாவாதி அட்டகுண முதலாயுள்ள மூன்றுவகைக் குணங்களையும் விடுகிறதே முத்தியென்று கொண்டானெனக் கொள்க.

மூன்றுவகைக் குணமாவன, ஞானவரணீயம் தரிசனுவரணீயம் வேதநீயம் மோகனீயம் ஆயுஷியம் நாமம் கோத்திரம் அந்தராயம் என்கிற குணங்கள் எட்டும், பசித்தல் தாகம் பயம் செற்றம் உவகை மோகம் சிந்தனை பழித்தல் நோய் நசித்தல் வேர்வை கேதம் மதம் அதிசயித்தல் புசிப்பு பிறப்பு உறக்கமென்கிற குணங்கள் பதினேழும் ஆசங்கம் இந்தி ஆரம் சோகம் சுருக்கை பயம் என்கிற குணமாறும் ஆக இங்ஙனஞ் சொல்லப்பட்ட முப்பத்திரண்டு குணமுதலான மூவகைக் குணங்களையும் விட்டு பூர்வத்திலுண்டாகிய கன்மங்களை புசித்துத் தொலைந்த வவதரந் தானே வீட்டின்பமென்றுகொண்டாரெனக் கொள்க.

முதற்சொன்ன ஞானவரணீய மாதியாயுள்ள எட்டுக்கும் பிரமாணம் பரபக்ஷம் அவனமதம் - உ-செ, "ஏறிலாதனவனந்த ஞானமுதலெண்குணங்களொன்று மொன்றகுணம், மாறிலாதமதி மேவுசித்தமென மன்னிவானவர் வணங்கவே, வேறுலாவகுண ஞானவரணீயமாதியெட்டினையும் விட்டசீ, ரேறுபான்மையுடை சிவாமுருகனெங்களுக்கிறைவனென்றனன்"

இரண்டாவது சொன்ன பசித்தலாதியாயுள்ள பதினேழு குணங்கட்கும் பிரமாணம் பரபக்ஷம், அவனமதம் - சா - செ. "பசித்தல்தாகபய செற்றமோடுவகை மோகசிந்தனை பழித்தல் நோய், நசித்தல்வேர்வியொடு கேதமோடுமதம் வேண்டலீண்டதி சயித்தலும், புசிக்கவந்திடு பிறப்புறக்கமிவை விட்டொரட்டகுண பூதனாய், வசித்தவன்னுலகின் மேலிருந்தொருசொலிகலனுக்கருளுமென்றனன்"

மூன்றாவது சொன்ன அரிசசிகமாதியாயுள்ள குணங்களாறுக்கும் பிரமாணம் பரபக்ஷம், அவனமதம்-ரு-செ. "ஏனுமொன்றுடைய வாகியெங்குமனு வாயிரும்புகன மரங்களும், பூணுமது

ஞருவே லாமுமாகுமிவை புறக்கப்பொருள்க ளென்னலாங், கா ணும்வசறு வகைத்தொழில்களை கட்டுவிட்டநெறி கண்மமே ல், மாணின்றுவரு மாறிமாறிமுன் வகைநத்துவிட மாட் சியே" என்னும் பிரமாணங்களாற் கண்டுகொள்க

மெய்ம்மையே பாடாணம் போலக்கைமுத்தி யென்றது பா டாணவாதி அறிவில்லாதவர்கள் அதிற்பட்டுக் கிடக்குந் தன் மைபோல ஆன்மாச் சுத்தாவத்தையிலு மொன்றுமறியாமல் கல் லைப்போலே கிடக்கிறதே முத்தியென்று கொண்டானெனக்கொ ள்க இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "கொத்தை மாந்த ருத்தூறு துயில்போற - காட்சியென்னக் காணுத் துயரா- மாட்சிமை முத்தி யென்வகுத்தனரே" என்னுமதுவுங் கண்டுகொ ள்க

விவேகமுத்தி யென்றது மாயாவாதி நின்மலமாயிருக்கி ற ஆகாயத்தை மேகமறைத்த தன்மைபோல சுத்தமாயிருக்கிற பரப்பிரம மாயா வுபாதிகளினாலே வாதிக்கப்பட்டு இந்தவுட லிலே மயங்கிநிற்கிறதே ஆன்மாவாவது, அந்த ஆகாயத்திலே ஒரு வாயுத்தோன்றி அந்த மேகத்தை நீக்கின தன்மைபோல தன்னிடத்திலே ஒரு விவேகஞானந்தோன்றி யந்த மாயாவவி த்தையை நீக்குகிறதே முத்தியென்று கொண்டானெனக் கொ ள்க இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம், "இவ்வியற் பந்தப் பவ்வமத்தகல - வின்முத்தாந்த கொண்மூப்படலத் - தி ருளறவுதித்த காரகவிவேகன் - தன்னிற்றோன்றிச் சாதக மன்னோ த்தையு - மன்னக்கப்பிரிட்பு மடியிழைவாங்கலும் - போலஞா லம் பொய்யுறக்கரீஇத - தானே தானாய்த் தன்னிற்றன்னைத்- தானேகண்டு தன்னலமுற்றும்" என்னுமதுவுங் கண்டுகொள்க.

தனமெய்வடிவாளுசிவத்தைச் செம்மையே பெறுகைமுத் தியென்றது சமவாதி வேட்டுவளி யொன்றுமறியாத பசுசை

ப்புழுவையெடுத்துத் தற்சொரூபமாக்கின தன்மைபோல ஒன்றுமறியாமற் கிடக்கிற வான்மாவையும் சிவனுடைய ஞானமேலெடுத்துத் தற்சொரூபமாக்கி அந்தவுடலே நித்தத்துவத்தைப் பெற்றிருப்பது முத்தியெனக் கொண்டானென்க் கொள்க. இதற்குப் பிரமாணம் சற்காரியநிராகரணம், "முன்னேறொன்றாமுதிரொளிஞான- மறியாப்பசுவைச் சிறப்புறச்சுவாந்த- வண்டெனவுயிரைக் கொண்டிடுமிறை- தன்னைநோக்கித் தன்னுருவாக்கி- வைவகைத்தொழிலு மெய்வகையுணர்வும் - பிரியாவாறு பெற்றுத் - திரியாடபெரியோர் திடக்ஷிசொந்திடுமே" என்னுமதனைக் கண்டுகொள்க.

செப்புவாகளென்றது உலோகாயதன் முதலாயுள்ள எழுவகை முத்தியையுங் குற்றத்தையுடைய முத்தியென்று ரொன கொள்க. அவை வருமாறு —

உலோகாயதன் முத்திக் குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது, பன்றியானது ஜன்மத்துக்கேடாக விட்டைவிரும்பிப் புசிக்குந் தன்மைபோல வசுத்தமாகிய மகளிரிடத்துண்டாகிய சிற்றின்பத்தையுஞ் ஜன்மத்துக்கேடாக விரும்பிப் புசிக்கையிலென்க் கொள்க. இதற்குப் பிரமாணம் பரபட்சம், அவன்மறுப்பு-உஅ-செ "ஆசையுற்றுழல் சூகரங்களசுத்தமேவி" என்கிற திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

பட்டாசாரியன் முத்திக் குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது, கன்மத்தினாலும் ஞானத்தினாலும் மோக்ஷமென்று சொல்லுகையில் கன்மத்தினாலே ஆசையுண்டாயதினாலே முத்தியுண்டாகாதாகையினாலென்க்கொள்க. இதற்குப் பிரமாணம் பரபட்சம் அவன் மறுப்பு,க0-செ "கருமங்கள் ஞானமதுவுடனின்றலானமருவு சத்திதங்கலாவ தெவ்வின்" என்னுந் திருவிருத்தத்திற் கண்டுகொள்க.

சவுத்திராந்திகன் முத்தி குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது, கர்ப்பூரவிளக்குப்போலக் கந்தசைந்துருந்தமறக் கெடுகையிலேயே பெறுவானில்லாத படியினாலென்க கொள்க, இதற்குப்பிரமாணம் பரபக்ஷம், அவன்மறுப்பு ௩௧-செ "ஐந்துகந்தம் சந்தானத்தழிதல்பந்த துக்க" மென்னுந் திருவிருத்தத்திற் கண்டுகொள்க

நிசண்டாவாதி முத்தியைக் குற்றம் பொருந்தின முத்தியென்றது, குணங்களை விட்டுவிடுந் தவமாகா தென்பதாலும் பூர்வகன்மம் நிச்சயித்துப் புசிக்கைக்கு இவ்விடத்து ஆன்மாவுக்குத் தனக்கென வேறோரறிவில்லாதபடியாலு மென்க்கொள்க இதற்குப் பிரமாணம் பரபக்ஷம், அவன்மறுப்பு-௧௧-௩௧-செ "ஆறுகாரியங்கள் மாறவேதவங்க ளாமெனில்" என்னுந் திருவிருத்தத்திலும் "பூர்வகன்மம் மறுத்—ப் புசித்தபின்பு" என்னுந் திருவிருத்தத்தில்" தெண்கடல்நீர் வற்றியபின்பு பூமி மீனிருந்த நின்றதே" என்னுமதுங் கண்டுகொள்க

பாடாணவாதி முத்தியைக் குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது அவன் கேவலப்பட்டுக் கிடக்கிறதை முத்தியென்று சொல்லுகையினாலே அது முத்தியாகாது என்க் கொள்க இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் அவன் மறுப்பு "காட்சியென்னக் காணுந்துயர - மாட்சிமை முத்தி யென்வகுத்து ரைக்கிற - காணுபாவமாணங்கரும - மேய்ந்தவா முத்தி சேர்ந்தவரன்றே - யினையகதிக்கோர் முன்னவரும்வேண்டா - தனித்துருதுயர மெறும்பித்திடமே - பாடாணத்திற கூடாமுத்தி" என்னுமதுங் கண்டுகொள்க

மாயாவாதி முத்தியைக் குற்றத்தைப்பொருந்தின முத்தியென்றது, இவனிடத்திலே தோன்றின விவேகஞானம் முன்பே யுள்ளதாமாகில் இவனுக்கு மயக்கம்வர வழக்கில்லை, பின்பு

ண்டானதாகில் ஆகாயப் பூப்போலே இல்லாத துண்டாகாது, ஆகையினில்லையெனக் கொள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம், "பந்தமக்கல முந்துவிவேகம் - வானவளியெனத் தனிற முனைதோன்றின - முனைபுராகாயின மங்காதிவதெனிற பினபுள்ளதாகா திவ்துளதெனில்வெளி-மலர்ந்து தருமம்மம்" என்னுமதுங் கண்டுகொள்க.

சமவாதி முத்தியைக் குற்றத்தைப் பொருந்தின முத்தியென்றது, அருவினைப்பொருந்தின ஆன்மாக்களுடைய மாயா தேகசஞ்சாரனே நித்தியத்துவத்தைப் பெற்றிருக்கிறது பதமுத்தியாம் அதொழிந்து சாயுச்சிய மாகாதாகையினாலும் யாதொருபாதொரு சரீரத்தோடு கூடியுள்ளமட்டும் மூன்று மலங்களுநீங்கா தாகையினாலுமெனக்கொள்க. இதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணம், "முத்தியுற்ற நற்றவரவையிடை-சேரவொன்றினை சாதருமுத்தி - சாலோகக்கியமோ சாயுச்சியமேற- பங்கமுற்ற கந்தலசழிதக-வறிவீரோடறிவு பிரியாப்பெறுதி - வேண்டுமெனப்பகற இனடிவரிவவா - திருப்பவெனபதற் குருந்தானே வேண்டும்" என்னுமதுங் கண்டுகொள்க.

"சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே" என்றதற்குப் பிரமாணம் பாடியம், சௌந்திராந்தகன் மறுப்பு-௨௦ செ "அநாதிமுத்தனாயபரனு யசலனுமெல்லா வறிவுதொழி லனுக்கிரக முடையவரனகனா, நானுநிகமற நெறுத்தவிடச்சே சத்திபாத நுழைவித்து மலங்களெல்லா நுங்கநோக்கி, மனுநிகரணங்களெல்லா மடக்கித தன்னை வழிபடுநல்லறிவருளி மாங்கருணைசகைப்பா, விருநிதிபிறப்பினினறு மெடுத்தமாறு-வின்ன பமுத்திக்கே வைப்ப னெங்கள் முத்திபித்தவே" என்னுமதுங் கண்டுகொள்க.

இன்னுற சொல்லியது, உலோகாயதன முதலாயுள்ள சமயிகள் கொள்ளப்படு முத்திகள் குற்றத்தைப் பொருந்தின முத்

தியென்றும் இவ்விட்டத்து முத்தியென்று சொல்லப்படுவது பர
மேசுவரனுடைய சீ பாதத்தைப் பொருந்துகிறதே முத்தியென்
று முறைமையும் அறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஏனைச் சமய நூலார்கூறு முத்திகளாவன? சோபான மு
றையானிலமுந் தூரமீருபக் கிடந்த முப்பத்தாறு தத்துவங்க
ளிடைக்கட்ட படுவனவாம் அவற்றுள்,—இம்மையே யீரெட்டா
ண்டெய்தி யெழிலாருமேந்திழையார் முத்தியென்றும் - உலகா
யத நூலார் இயல்பைக்கண் பதினாறு ஆண்டுள்ள அழகுபொருந்
திய ஆபரணங்களணிந்த அரிவையரின்புறுதலே முத்தியென்
பர்—அம்மையேயிருஞ் சுவர்க்க முத்தியென்றும் - மீமாம்சை
நூலார் யாகாதிகன்மங்கள் செய்து அம்மைக்கண் சுவர்க்காதி
போக மனுபவித்தலே முத்தியென்பர்—ஐந்துகந்த மறக்கெ
டுகை முத்தியென்றும் - சௌத்திராந்திக நூலார் உருவமுதலிய
ஐந்துவகைக் கந்தங்களு மறக்கெடுதலே முத்தியென்பர்—அட்
டகுண முத்தியென்றும் - ஆருகத நூலார் அநந்தஞான முத
லிய எண்குண மடைதலே முத்தியென்பர்,—மெய்ம்மையே பா
டாணம் போலகை முத்தியென்றும் - மெய்மையாகப் பாடா
ணம்போற்கிடக்கை முத்தியென்பர் வைசேடிக நூலார் — வி
வேக முத்தியென்றும் - சாங்கிய நூலார் பகுத்துணரும் விவே
கஞானமே முத்தியென்பர் — தன் மெய்வடிவாகு சிவத்தைச்
செம்மையே பெறுகை முத்தியென்றும் செப்புவர்கள் - சிவச
மயவாதிகண் முதலியவாகச் சமய நூலார்களும் தன்னுடை
ய வடிவாகிய சிவசாரூப முதலிய பதமுத்திகளைப் பெறுதலே
முத்தியென்றுஞ் சொல்லுவார்கள்.—இங்கு டாஞ்செப்புவது.

வேதாகமநூ லுண்மையுணர்ந்த யாங்கூறு முத்தியாவது;— சிவனடியைச் சேருமுத்தி - மும்பக்கூறு தத்துவங்களுக்கு மப் பாற்பட்ட சிவனடியைச் சேருமுத்தியாம்.

இதனானே புறச்சமயநெறிநின்றன முதலிய வெல்லாருஞ் சை வத் திறத்தடைதற்குச் சோபானமுறையான வாயிலாமாறு அ வரவர் பயன்கூறுமுகத்தானே யினிது விளக்கப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை

மேலிந்தச் சித்தாந்தமே சிறப்புடைத்தென்
றுணர்த்துகின்றார்.

ஓதுசமயங்களபொரு ளுணருநூல்க ளொன்றோ
டொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள், யாதுச
மயம் பொருணூ லியாதிங்கெனினி திதுவாகு மதுவல்
ல வெனும்பிணக்க தின்றி, நீதியினா லிவையெல்லா
மோரிடத்தேகாண நிற்பதியா தொருசமய மதுசமய
ம் பொருணூ, லாதலினா லிவையெல்லா மருமறையா
கமத்தே யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழட
ங்கும். (௧௩)

(இ-ள்) ஓதுசமயங்கள் பொருளுணருநூல்களொன்றோடொன் றொவ்வாம லுள — இப்படிப் பலவாகச் சொல்லப்பட்ட சமயங்களையு மதற்கதற் கேற்ற தெய்வங்களையு மதற்கதற் கேற்ற சாத்திரங்களையு முத்தி பெறுமதங்களையும் பலவாக வுரைத்து, இவற்று ளுண்மையான சமயம் யாது வுண்மைப் பொருள்யாது அச்சமயத்திற்குக் கூறுமாக

பலவுமிவற்றுள் யாதுசமயம்பொருணூலியாதெனில்

மங்களையாது என்று கேட்கிறாயாகில்? அவைகளையுணர்த்துதும்.

இதுவாகுமது வல்லவெனும் பிணக்கதின்றி நீதியினிலவையெல்லா மோரிடத்தே காணநிற்பது யாதொருசமயம் அதுசமயம் பொருணூல்

தத்தஞ் சமயத்தினிழிவையுந் தேவதைகள் முறைமையினையு மந்தநூல்களுண்டாய வழியினையு நோக்காது சலம்பற்றி நின்றமது பொருளேயுண்மை மற்றொன்று முண்மைப் பொருளல்லவென்னுஞ் சந்தேக விகற்பமின்றிக் கடாவிடையானும் பிரமத்தப் பொருள்களொல்லா மெய்ப்பொருளன்றென்று விருவினாலுந் திருட்டாந்தத்தாலும் அவ்வியாப்தி முதலிய குற்றங்களாற் சோர்வுபடாத வுண்மைப் பொருளுமிதுவே சமயமுமதுவே இந்தச்சமயத்துட் டுணிந்து கூறப்பட்டதே பரமமான மோட்சமென்று கூறும் வாலோனமதத்தா வாக்கிய மலையுமாறுபோல ரோணதெறும்பின மலைவின்றிப் பிறமதங்களைந்து தன்னுண்மைப் பொருளை யறுதியிட்டுணர்த்துகின்ற சமயநூலாகிய நூலே நூல்.

ஆதலின் அவையெல்லா மருமறை யாகமத்தே யடங்கியிடும்

இச்சிறப்பினையுடைய தாகையினாலே அச்சமயப் பொருள்களெல்லாம் வேதாகமங்களிரண்டினு மடங்கியிருக்கும்.

அவையிரண்டு மரனடிக்கீழடங்கும்.

இந்த வேதாகமங்களாகிய விரண்டு மத்தவாதமின்றி விதிவாதமே கூறுகையாலவனது திருவாக்கே சிறப்புடைத்தெனப் பெறும் எ-று.

இதற்குச் சந்தியம் சிவதருமோத்தரம் மகுடம் சாமிகத்து மதிக (௧௩)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———0———

மேல் வேதசிவாகமங்களை சாஸ்திரமென்றும் சிவஞானமே ஞானமென்றுங் கூறுகின்றது.

ஓதுசமயங்க ளுணருநூல்கள் பொருளாக ளொன்றோடொன்றொவ்வாமை யுளபலவு மிவற்று ளியாதுசமயம் பொருணூலியாதிங்கென்னில் - சொல்லுஞ் சமயங்களு மந்தந்தச் சமய சாஸ்திரங்களுஞ் சாஸ்திரங்களில் §பிரதிபாத்தியமான பதார்த்தங்களும் பதமுத்தியினுடைய தன்மைகளும் மோக்ஷோபாயங்களும் ஒன்றுக்கொன்று விரோதமாகப் பலவாகவுள இவைபிறதுகளுக்குள்ளே எந்தச்சமயம் பெரியது, எந்தசாஸ்திரம் சர்வத்தையுஞ் சொல்லுகிறது, எந்தச் சாஸ்திரத்திலே சொல்லும் பதார்த்தம் யதார்த்தம், எந்தச் சாஸ்திரத்திலே சொல்லு மோக்ஷோபாயம் பரமமுத்தியைக் கொடுப்பது, எந்தச் சாஸ்திரத்திலே சொல்லுந் தருமத்தைப் பண்ணவேண்டுவது, என்று வினவில்—

§பிரதிபாத்தியம் - சொல்லத்தக்கது.

இதுவாகு மதுவல்லவெனும் பிணக்கதின்றி நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காணநின்ற தியாதொருசமய மது சமயம் பொருணூல்-உலகாயிதாதி சிவாத்துவைதி யந்தமாகச் சொல்லும் பதார்த்த லக்ஷணங்களையும் தருமங்களையும் மோக்ஷோபாயங்களையும் மோக்ஷங்களையு மிதுவாகு மதுவல்லவென்று ¶ சமுத்திர கலசநியாயமாக வேதாகமங்களிலே

¶ சமுத்திரகலசநியாயம் - சமுத்திரத்தில் குடத்தைப் போட்டுமொண்டால் குடங்கொண்ட ஜலந்தான் வருமென்கிற நியாயம்.

யேகதேசத்தை யறிவிப்பது பூர்வபக்ஷமுஞ் சித்தாந்தமு மாகத் காக்கிப்பித்து, ஆறு குருடர் யானையினுடைய ஏகதேசத்தை ஸ்பரிசித்து யானை யிப்படியிருக்கு மிப்படி யிருக்குமென்று த ர்க்கம் பண்ணிக் கண்ணுளவனியாகச் சொல்லு மவயவங்களெ ல்லா முடைய தியானையென்று நிச்சயித்ததுபோல, இந்தச்ச மயங்க ளெல்லாருஞ் சொல்லுவது வேதாகமத்தி லேகதேசத் தைப் பற்றியென்று பரக்கத்துவத்தை யுணர்வதான சமயமே சமயம், அந்தச்சமய சாத்திரமே சாத்திரம், அந்தச் சாத்திரத் திலே சொல்லும் பதார்த்தமே பதார்த்தம், அதிற்சொல்லும் த ந்திரமும் மோக்ஷோ பாயமுமே சாதிக்க வேண்டியது,—

ஆகலின் றுவிளைவெல்லா மருமறை யாகமத்தே யடங்கியி ருமலையிரண்டு மரண்டி கவிழடங்கும் - சாவத்தையுஞ் சொல் லுவது சாஸ்திரமென்ப தாதலால் வேதசிவாகமங்களுக்குள் ளே சகல சாஸ்திரங்களு மடங்கும் வேதாந்த மோக்ஷோதானு ட்டானங்களையே பண்ணவேண்டியதும், அதிலே அதிலேசொல்லு ம பதார்த்தங்களே யதார்த்தமும், வைதிகமுஞ் சைவமுமே சமயமும் இவ்விடத்து மிரண்டாகச் சொல்லுகையின் மிரண் டிலே யதிகமேதென்னின்? வேதசிவாகம மாகிய அபரஞானமி ரண்டுமே பரஞானமாகிய சிவஞானத்திலே × பரியவசானமா கையால் *வேதோப்ப பிரமிதமானது கொண்டு வைதிக சைவ மென்றும், சிவகுண † சங்கிராந்தி சமுற்பத்தி + சமாவேச சிவ சமத்துவ மென்றி முத்திகளுக்கு மேலாயிருக்கிற சிவசாயுச்சி ப்ப பிரதமாசையா லுத்தரசைவ மென்றும், இதை பூர்வபக்ஷ ம் பண்ணுவதற்கு ஒருசமய மில்லையாகையால் சித்தாந்தசை வமென்றும் பெயரையுடைய வைதிகசைவமே சர்வோத்கிருஷ் டமான சமயம் வேதசிவாகமங்களே சாஸ்திரம் இதிற்சொ ன்ன பதிபசுபாசம் பதார்த்தத் திரயமே யதார்த்தம். விசிஷ்

டதருமமாகிய சரிதை கிரியாயோக சிவதருமமே யனைவேண்டுவது கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிஷ்டை யெனப்பே மோக்ஷோபாயமென் றிதன்பொருள்

× பரியாவசானம்-முடிவு. * வேதோபப்பிரமிதம் - வேதத்திலே அதிகமாகச் சொன்னது, † சங்கிராந்தி - சம்பந்தம், + சமாவேசம் - பிரவேசம்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மேற்சாமானிய வேதவிசிஷ்ட விசேஷவேத சிவசித்தாந்தமே சிறப்புடைத்தென்று செப்புகின்றார்

பொருள் - அந்த அந்தச் சமயத்தார்க்குச் சொல்லும் பதார்த்தங்கள்,—நூல் - அப்பொருள்களைச் சொல்லுஞ் சாஸ்திரம்,—பிணக்கின்று-சந்தேகமற்று,—ஓரிடத்தே - ஒருசமயத்திலே,—காண - அடங்க வேதத்திற் சாவதியடங்கும், சிவாகமத்திலே நிரவதிபடங்கும்,—அரனடிக்கீழடங்கும்-அபரஞானமாதலால் வேதஞ் சிவாகமத்தடங்கும், சிவாகமம் வேதத்தைக் குறித்து பரஞானமாயினும் சிவசத்தி சின்ன சிவாகமத்தைக் குறித்து அபரஞானமாதலால் சிவசத்தியாகுஞ் சேதன பரஞானசிவாகமத்தடங்கும்

மற்றைய வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

கண்ணில்லாப்பலர் குழீஇக்கொண்டு வேழத்தினுறுப்பைத் தட்டுப்பட்டுக் கையிலுற்றவாறு வேறுவேறு கூறுமிலக்கணங்க

ளெல்லாங் கண்ணுள்ளா ரொருவன் கண்டுகூறு மதனிலக்கணத்
துள் ஏகதேசமாய்க் காணப்பட் டடங்குமாறுபோல, ஏனைச்ச
மயநூலார் தத்தஞ் சிற்றறிவுக்குப் புலனாயவாறுபற்றி அவ்வ
நூல்களிற் கூறும் பொருளியல்புகளெல்லாம் முற்றுணர்வுடை
ய முதல்வனாற் செய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும் பொரு
ளியல்பின் ஏகதேசமாய்க் காணப்பட்டு அவற்று ளடங்கும்.
சிவபிரானாற் செய்யப்பட்டு அவனையே தமக்கு முதலாகக்கொ
ண்டிரைக்கு மவ்விருவகை நூலும் அவ்விறைவன் றிருவடியில
டங்கு மென்பதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முன் சொல்லப்பட்ட சமயங்களும் அதற்குப் பொருந்தி
ன அர்த்தங்களும் அதற்குப் பொருந்தின நூல்களும் ஒன்றாகக்
கொண் டொவ்வாமல் எண்ணிறந் திருக்கையினால் இவையிற்
றுள் எந்தச் சமயத்தை எந்தப் பொருளை எந்த நூலைப் பொருளா
கக் கொள்ளுவதென்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச் செய்
கிறார்.

ஓது சமயங்கள் பொருளுணருநூல்கள் ஒன்றோடொன்
றொவ்வாமலுளபலவும் - சொல்லப்பட்ட சமயங்களும் அந்தந்
தச் சமயிகள் கொள்ளத்தக்க வர்த்தங்களும் அதற்கு அறியத்
தக்க சாத்திரங்களும் இவை ஒன்றுக்கொன் றொவ்வாமலிரு
ப்பது அநேக விருத்தியுண்டாயிருக்கும்,—இவற்றுள் - இவை
யிற்றுக்குள்ளே, — யாது சமயம் பொருணூ லியாதிங்கெனி
ல் - எந்தச் சமயத்தை எந்த வர்த்தத்தை எந்த நூலையுண்
மையாகக் கொள்ளுவதென்று நீ கேட்கில்?—இதுவாகு மதுவ
ல்லவெனும் பிணக்கதின்றி - இந்தச் சமயமும் இந்தப் பொரு

னும் இந்தச் சாத்திரமும் ஆமென்றும், அந்தச்சமயமும் அந்தப் பொருளும் அந்தச் சாத்திரமும் அல்லவென்றுஞ் சொல்லுகிற மாறுபாடில்லையாய்,—நீதியினு லிவையெல்லா மோரிடத்தே காணநின்ற தியாதொரு சமய மதுசமயம்பொருணூல் - உலோகாயதன்முதல் பாஞ்சராத்திரியீறாகப் புறச்சமயத்திற் பேதம் பதினாறு, பாசுபதமுதல் வயிரவமீறாக உட்சமயத்திற் பேதம் ஐந்தும், சைவத்தில் ஐக்கியவாதி முதல் சைவமீறாகப் பேதம் ஆறும், ஆக இருபத்தேழு சமய பேதத்துக்கும் அதற்குத் தக்கதாகப் பொருத்தின பொருளும், அதற்குப் பொருத்தின சாத்திரங்களும், அவரவர் பக்குவத்திற்குத் தக்கதாகப் பரமேசுவரன் அருளிச்செய்தான் என்கிற முறைமையை யொருசாற்பதத்திலே யறியப்பட்டது யாதொரு சமயம் அதுவே யுண்மையான சமயமென்பதும், அதுவே யுண்மையான அர்த்தமென்பதும், அதுவேயுண்மையான சாத்திரமென்பதும் இந்தவுண்மையைச் சொல்லுகிற சாத்திரந்தானேது என்னில்?—ஆதலினு லிவையெல்லா மொருவிடத்தே யடங்கிவிடும் - சர்வத்தையுஞ் சொல்லுகிற வேதாகமங்களாகையினால் முன்சொல்லப்பட்டவையெல்லாம் ஒருவராலு மறியப்படாத வேதாகமங்களிலே யடங்கா நிற்கும் அந்த வேதாகமங்க ளிரண்டும் எங்கே யடங்குமென்னில்?—அவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும் - அந்த வேதமும் ஆகமமும் இரண்டும் பரமேசுவரனுடைய ஞானமாகிய ஸ்ரீபாதத்தின்கீழே யொடுங்கும் என்னவே சைவசமயமே சமயமும், சைவசித்தாந்தமே சித்தாந்தமும், வேதாகமமே சாத்திரமும்.

இதற்குப் பிரமாணம் சங்கற்பநிராகரணம் பாயிரம், "பெருங்கட லுக்குவ சருங்கடு வாங்கிக - கந்தரத் தடைத்த வந்தமில் கடவுள் - பாலனை யுணர்த்து மேலவர் போலக் - கேட்போ

ரளவைக கோடபடு பொருளா - லருளிய கலைக ளருளில வாலவை - பலபலசமயப பானமைததததனறே - யஃதாலனனூற றனமையுணரிப - மாநகரிதவே பொருளொனறதனில - யறைநத வினவேறறோ பனுவலேறறோக - சிசையாாறு பாடுகூறுவ ரதனால-புறசசமயஙகள சிறப்பில வாகி-யருளினமாநதரா வெருளுற மயககி- யலலைகததேரி விலையிறறிரு - மீஙகிவைநிறக நீஙகாசசமய - பூவிருநதருதி மேவிடதாகு - மொனறேயொனறு செனறுறுநிலையி - லாறுமாறு விறுடைததிவறறு - எவவயிலலாச சைவநறசமயத - தலகிலாகம நிலவுதலுளதவை- கனகமிரணியங காஞசனமீழந - தனிநிபபாடகந தமனியமெனறிவை - பலபெயாபபயபபதோா பொருளேபோலப - பதிபசுபாச விதிமுறைகிளககும" எனனுமாறறு கண்டுகொளக

இததுறை சொல்லியது, சொல்லபபடட சமயஙகளும் பொருளகளும சாததிரஙகளும ஒனறோடொனறு ஒவவாமல் பலவாகச சொலலுகையிலேயே எநதச சமயததைத எநதப் பொருளகளை எநத நூல்களை உணமையாகக கொளளுவதெனறு மாணாககன கேடக, ஆனமாககள பககுவததுககிடாகப பரமேஸுவரன இபபடிப பலவாக அருளிசசெயதானெனறு அறிகிறது சைவமாகையினால் சைவசமயமே சமயமும சைவசிததாநதமே பொருளும வேதாகமஙகளே நூலுமெனறு அருளிசசெயததெனனு முறைமையு மறிவிததது

---

## சுப்ரமணயதேசிகருரை வருமாறு.

—0—

ஓதுசமயஙகள-சொல்லபபட்ட சமயங்களும,—பொருளுணரு நூல்கள - அசசமயப பொருளகளை யுணாத்து நூல்களும,— ஒனறோடொன ரொவவாம லுளபலவும் - மாறுபட்டன

வாக வுள்ளன பலவாகலின்,— இவற்றுள் சமயமியாது பெருணூலியாதெனின் - இவற்றுள் முதன்மையான சமயமியாது அச்சமயப் பொருளுணர்த்தும் நூலியாதெனவிடத்தெனவில்,— இதுவாகு மதுவல்ல வெனும் பிணக்கதின்றி - கண்ணிலலார் பலர்கூடிக்கொண்டு வேழநின்றுழித் தலைப்பட்டுக் கையிற்றுறைவந்து வேறுவேறுகூறு மிலக்கணங்க ளெல்லாங் கண்ணுள்ளா னொருவன் கண்டுகூறு மதனிலக்கணத்து ளேகதேசமாயக் காணப்பட்டடங்குமாறுபோல, இதுபொருந்து மிதுபொருந்தா தென்னும் பிணக்கின்றி,—நீதியின் இவையெல்லா மோரிடத்தேகாண நின்றது யாதொருசமயம் - முறைமையா லிவையனைத்து மொருங்கே காணப்பட்டுநின்றதெச் சமயம்,— அதுசமயம் பொருணூலாதலின் - அதுவேசமயமும் அச்சமயப் பொருளுணர்த்து நூலுமாதலின்,— இவையெல்லா மருமறையாகமத்தே யடங்கியிடும் - ஏனைச்சமய நூலார் தத்தஞ் சிற்றறிவுக்குப் புலனாய வாறுபற்றி யவ்வநூல்களிற் கூறும் பொருளியல்புக ளெல்லா முற்றுணர்வுடைய முதல்வனாற் செய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும் பொருளிடத்தே யேகதேசமாயக் காணப்பட்டவற்று ளடங்குதலின், அவையே நூல்களும் — அவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும் - சிவபிரானாற் செய்யப்பட்ட அதனையே தமக்கு முதலாகக் கொண்டுரைக்கு மவ்விருவகை நூலு மவ்விறைவன் திருவடியி லடங்குமாதலின் அதுவே சமயமுமாம்.

## மறைஞானதேசிகர் உரை.



ஆகமப்பிரமாண முணர்த்து முதலிய மூவிதம் இதற்குளதென வுணர்த்துகின்றார்.

அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக்கையினு
லளப்பரிதா மப்பொருளை யரனருளா லணுக்கக், டருவ
ராகையினாற் றனித்தனியே தாமறிந்தவளவிற் றாக்க
மொடுத்தரங்களினாற் சமயங்கடாந்தித்து,மிருதிபுராணங்
கலைகண் மற்றுமெல்லா மெய்ந்நூலின் வழிப்புடையாற்
ங்கமம்வேதாங்கம், சுருதிசிவா கமமொழியச் சொல்லு
மெதொன்றில்லைச் சொல்லுவார் தமக்கறையோ சொ
லலொணாதே (கச)

(இ-ள்) அருமறையாகம முதனூல் — பொருளறிதற் கரிதாகிய நாலுவேதங்களுங் காமிகமுதலிய விருபத்தெட்டாகமமும் முதனூல் அஃதெக்காரணத்தாலெனனில்?

அனைத்து முரைக்கையினால் — அறம்பொருளின்பம் வீடாகிய நான்கினையு முரைக்கிறதினாலே அவனே சர்வஞ்ஞனா "வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவன் கண்டது முதனூலாகும்" என்றார் தொல்காப்பியனார்.

அளப்பரிதாம் அப்பொருளை — வேதமந்த சாகையையுடைத்தாகையா லளவிட்டகனை யறிதற்கரிது ஆருமொருவராலு மறியப்படாதோவெனில்?

அரனருளால் அணுக்கட்டருவாகள் — சிவனது காருண்ணியத்தினாலே யநந்தமான வேதத்தை நாலாகப் பிரித்து வேதவியாச பகவான் விளங்க வருளிச்செய்தார்

பின் றனித்தனியே தாமறிந்த வளவிற் றாக்க மொடுத்தரங்க — அதனையுற்று நோக்கி யாராய்ந்து தமக்கேற்ற கடாவாலும் விடையாலுந் தமதுபொருளையே மேலாக்கிப் பிறமதத்தைக் கீழாக்கி யந்த வேதத்தைப் பின்சென்று சமயமே

திருவிளக்கிடல் — கோட்டையினுண்டாகிய தனிக் கபிலை முதலிய பசுவினெய்யாற் றிருவிளக்குமிடாதது, தீபமெனவே தூபமும் கூறியதாயிற்று. இதனைப் பின்னற் கூறியதென்னெனில்?

"விரும்பும் விளக்குத்தூபம் விதியினா லிடவல்லார்க்குக், கரும்பினிற் கட்டிபோலுங் கடவூர் வீரட்டனாரே" இதனுட் டூபத்தைக் கூறியது பலாதிக்கத்தானும், தூபமின்றித் தீபமின்மையானுமென வறிக. "விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும், அளப்பில கீதஞ்சொன்னார்க் கடிகடா மருளுமாறே" எ-ம், "தீபமாலை தூபமுஞ் செறிந்த கையர்" எ-ம். அறிக.

திருநந்தவனமுஞ்செய்து — கோட்டுப்பூ முதலிய நால்வகையினையு முண்டாக்கி, எனவே திருக்கோயில் மடமுதலானவுங் கூறியதாயிற்று.

திருவேடங்கண்டாலடியேன் செய்வதியாதென்று பணியீரென்று பணிந்தவர்கம் பணியுமியற்றுவது — அதிவெழுந்தருளியிருக்கு நாட்டிகா முதலாயினார்க்குத் தானே வேண்டியதறுசெய்து வணங்கியவரேவினதுங் கேட்டு "எவரேனுந் தாமாக விலாடத்திட்ட திருநீறுங் கண்டாலே" "உமாதத்தூமேயா னடியார் பெற்றன்ன பெற்றன்ன போந்து போந்து இறவாமைக்கே" எனவும் "நிலைபெறுமா றெண்ணுதியே லலருதிலனே" எனவுமறிக.

இச்சரியைசெய்வோர் ஈசனுலகிருப்பர் — இந்தச் சரியைத் தொழில் செய்வோர் சிவனதுலகத்தை யடைவார்கள் எ-று.

செய்வோர் - எழுவாய், இருப்பர் - பயனிலை.

இதற்குக் காமிகம் சுப்பிரபேதம் காரணாதிகாரம் சிவதன்மம் சிவஞானபோத சங்கிரக வோத்சங்கிரகத்து மறிக. (௧௧)

## சிவாகரயோகியருரை வருமாறு.

—o—

மேல * தாசோகம † பாவிதனென சமயிபணணுஞ சரிகை யிலககணந தொகுததுக கூறுகினறது

இதறகுப பொருள வெளி

* தாசோகம - நானடிமை, † பாவிதன - பாவிககப படடவன

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

தாதமாாககமுந ஞானகினது ஸவரூபம நானகு திருவிரு ததததாற சொலலுகினறார

இது வெளிபபொருள

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

புறததொழின மாகநிரையாலே உருவததிருமேனியை நோககிச செயயும வழிபாடு சரியையெனபபடுமெனபதாம

## நிரமபவழகியருரை வருமாறு.

—o—

முன சொல்லிவநத நாலுமாாககததில் தாதமாாககத்தி ன முறைமை மே லருளிசசெயகிறாா

தாதமாாககஞ சாறறில் - பரமேஸவரனுககு அடிமைப படடு அடிமைததிறஞ் செய்கிறவர்களுடைய வழிபாட்டைச்

சொல்லில்,—சங்கரன் றன்கோயிற் றலமலகிட் டிலகுதிருமெழுக்குஞ்சாத்தி - சிவலிங்கப்பெருமா ஞயஞா எழுந்தருளியிருக்கிற திருக்கோயிலுக்குத் திருவலகுமிட்டு விளங்கத் திருமெழுக்குஞ்சாத்தி,—போதுகளுங்கொய்து பூந்தாமமாலைகளணி புனைதற்குப் பலசமைத்து - திருப்பள்ளித் தாமங்களுமெடுத்துப் பொலிவினை யுடையதாகிய தொடையல் மாலைகோவை கண்ணி தம்பிரானுக்குச் சாற்றிச்ரப்படிக் கொடாகப் பலவாகப் பத்திப்பணி,—புகழ்ந்துபாடி-அவனுடைய கீர்த்திகளையுஞ்சொல்லி வாழ்த்தி,—தீதி திருவிளக்கிட்டு - குற்றமற்ற திருவிளக்குகளுமிட்டு,—திருநந்தவனமுஞ்செய்து - நன்றாகத் திருநந்தவனங்களும் வைத்து,—திருவேடங்கண்டா லடியேன்செய்ய தியாது பணியென்று பணிக்க வாதப்பணியுமியற்றுவது - சிவனுடைய வடியாராகிய திருவேடத்தாரைக் கண்டால் அடியேன் செய்யத்தக்க பணிவிடை யாதென்று வேண்டனப்பணி யருளிச் செய்ய வேணுமென்றுகேட்டு அவர்களருளிச்செய்த பணிவிடையுஞ்செய்து முடிப்பது —இச்சரிதை செய்வோர் ஈசனுலகிருப்பார்- இந்தச் சரிதைத்தொழிலைச் சாத்திரஞ்சொன்ன முறைமையிலே செய்து முடித்தவர்கள் சிவலோகத்திலே யிருப்பார்கள்

இதனாற் சொல்லியது தாதமார்க்கத்துக்குச் சொல்லப்பட்ட திருவலகிடுகிறது முதற் சிவனடியாரை வழிபடுகிறது யீறுக்கச் சொல்லப்பட்ட திருத்தொழில்களை இந்த முறைமையிலே செய்தவர்கள் சாலோகத்தைப் பெறுவார்களென்னு முறைமையை யறிவித்தது

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

தாசமார்க்கஞ் சாற்றில் - தாதநெறியைச் சொல்லுமிடத்
சங்கரன் றன்கோயிற்றல மலகிட்டு-சிவபிரா னெழுந்தரு

ளியிருக்கின்ற திருக்கோயிலுட் டிருவலகிடலும்,—இலகு திருமெ ழுக்குஞ் சாத்தி - விளங்குகின்ற திருமெழுக்கிடலும்,—போதுக ளுங்கொய்து- திருப்பள்ளித்தாமங்களெடுத்தும்,—பூந்தாமமா லைகளைப்புரிந்தரூப பலசமைத்து- பொலிவினையுடைத்தாகி யமாலை யினடைமுதலிய கணங்களுஞ் சிவபிரான் றிருமேனி யிற்பொலிவுறும் வண்ணம் பலவாகவமைத்தும்,—புகழ்ந்துபா டி-முதலவனுடைய புகழ்த்தரசரிய மேலாகிய சீர்த்தியினை வா யாற வாழ்த்தியும்,—திருவிளக்கிட்டு - குற்றமற்ற பிரகாசம பொருந்திய விளக்குகளிட்டு,—திருநந்தவனமுஞ் செய்து-அழ கிய நந்தவனங்களை வைத்தும்,—திருவேடங்கண்டா லடியேன செய்வ தியாதுபணியீரென்று பணிந்து-சிவனடியாராகிய திரு வேடத்தாரைக் கண்டா லடியேனுஞ் செய்யத்தக்கபணியா தென றருள்வேண்டுமென்று வணங்கி,—அவர்தம் பணியு மிய ற்றுவது- அவரருளிச் செய்யும் பணிவிடையும் செய்வதாம் —இ ச்சரியை செய்வோ ரீசனுலகிருப்போர் - இச்சரியைத் தொழிலி னை யுடைத்தோர் சாலோகமாகிய பதமுத்தியைப் பெறுவா ரென்பதாம்

## மறைஞானதேசிகர் உரை.

---

மேற்புத்திரமார்க்க முணர்த்துகின்றார்

புத்திரமார்க்கம் புகலிற் புதியவிரைப்போது பு கையொளிமஞ் சனமமுது முதல்கொண்டு, சுத்தி செய்தா சனமூர்த்தி மூர்த்திமானாஞ் சோதியையும் பாவித்தா வாகித்துச்சுத்த, பரசிவனை லர்ச்சித்துப் பரவிப்போற்றிப் பரிவினொடு மெரியிலவரு காரியமு

மூர்த்தி - விந்து மத்தியத்தெழுந்த கண்டாகிருதியாய்த் திருமப வித்தியா தேகரூப வியாபகமாயிருக்கும் நாதம்,—மூர்த்திமானஞ் சோதி - வித்தியா தேகத்துக்குச் சீவனும் பரசிவ தேஜஸு.

பரனைய வெளிட பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

புறத்தொழிலகத்தொழிலென்று மிரண்டானும் அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு கிரியையென்னப்படுமென்பதாம்.

## நிரம்பவழகியருரை வருமாறு.

மேல் புத்திரமார்க்க மருளிச்செய்கிறார்.

புத்திர மார்க்கம் புகலில் - பரமேசுரனுக்கு உபதேசத்தினாலே புத்திரராயுள்ளவர்கள் செய்யுங் கிரமத்தைச் சொல்லில்,—புதிய விரைப்போது - நவமாயிருக்கப்பட்டநின்ற திருவெப்பூச்சுமுதலான பலசுகந்தத் திரவியங்களும் திருப்பள்ளித் தாமமும்,—புகையொளி மஞ்சன மமுதுமுதல் கொண்டு - தூபதீபம் திருமஞ்சனம் அமுதுமுதலானவை யெல்லாம் நன்றாகவாரத் தேடி வைத்துக்கொண்டு,—ஐந்துசுத்தி செய்து - பூதசுத்தி ஆன்மசுத்தி திரவியசுத்தி மந்திரசுத்தி லிங்கசுத்தியென்று சொல்லப்பட்ட அஞ்சுசுத்திகளையும் பண்ணி,—ஆதனமூர்த்தி மூர்த்திமானஞ் சோதியையும் பாவித்தாவாகித்து - ஆதன மூர்த்தியும் மூலமாகச் சாதித்த அந்தமூர்த்திமானான சோதியும்.

மூச்சதூ மூ        தன்னுடைய சரீரத்தினுள்ளே முக்கோணமுக்
தலாதாரங்களாக  தலிய வாறு காரங்களின தாகிருக்கிறதையு
மாகக் கறிந்து    மதிருக்குந் தானங்களையும வடிவுமுதலிய
வற்றை யதுவதுவாக வறிந்து,

அவற்றினுரும     மூலாதார முதலிய வாதாரங்க டோறு
பொருள்களுண    மிருக்கும பதுமதளங்களையு மவைகளி லி
ந்து        ருக்கு மதிதேவதைகளையு மவைகளி லிருக்
கு மக்கரங்களையு மறிந்து தியானித்து

அங்கனைந்து     மூலாதாரத்தி லிருக்கு மக்கினி மண்டலத்
போய் மேலேறி   தி னக்கினியைச் சொலிப்பித்து, அந்தச் சந்
யலாமதி மண    திரமண்டலமாகிய நாபித்தானத்தி லிருக்கு
டலத்தின் முக    ங் குண்டலினி சத்திச்சொரூபிணி யாயிருக்
மாகக வமு      கிற வமிர்தத்தை யுருசப் பண்ணி மற்றவா
துடல முட்டத்   தாரங்க ளனைத்து மதோமுகமான பதும
தேக்கி        ங்களின்று கிரந்திகளை யடைவே யதனைக்
கொண்டு பேதித்து, மேலேசென்று விந்துத்
தானத்தினை யுற்றே யிறங்கிப் பெருகாநின்ற வமிர்த தாராப்பிர
வாகத்தைத் தன்னுடலமுழுது நிறைந்தவாறே யிவனுக்கு மந்
திரசாககர மூசரிக்கிற தெல்லாம விளங்கா நிற்கும

மூழுச சோதி      தான மூன தியானம பண்ணப்படுமது,
நினைந்திருத்தல்  பொருளி னிடத்திலே யடிக்கிற காற்றுன
தெப்படிசலியாமல வியாபித்திருக்கும், அ
துபோலப் பரிபூரணமான பிரகாசாநந்தத்திலே யழுந்தி யிரு
த்தல சமாதி இதனாற பயன யாதெனில?

மூதலாகவினை    இம்மைககண் கன்மமுதலிய பாசங்களி
களுக         னது வலிகெட்டுப் போமபடியு மறுமைகக
ண முத்தியடைகையின பொருட்டும

மாரக்க வட   சகமாரக்க மாகிய யோகபாதத தட்டா
டாங்க யோகமு ங்க போகத்தை யியமநியம முதலாக நா
றாறு முழுதத லு டோறும வருநதிச சாதிததவாகள,
முநதவா

சிவன ற னுருவ   சிவனது திருமேனியைப போலத தாங்க
ளதைபபெறுவா ரூ மவடிவை யெடுததுககொண டவன சமீ
பததிலே யிருபபாகள எ-று

சகமாரககததைத தலைககுறைநது மாரககவட்டாங்க
மென்றா "இயமநியம மிணங்காசனமயாம, மயாவிய பிரத
யாகாரமாகு—முயலுங்காற, ருரனை யோடு தியானஞ் சமா
திபு மென, ரோிநூனாகுமே போகு" எனவறிக

இது பொழிப்பு

மேலகலம

மூலாதாரமாவது —குதததுக கிரண்டங்குலததுககு மே
லிலிங்கததுககு இரண்டங்குலததுககுக கீழுளளவறிக

இதறகுவடிவு முககோண மாயிருககும செநதாமரை யி
தழ்க ணாங்கு

இவைகளி னிறகு மககரங்க ளாவன வ ஶ ஷ ஸ என்னா
னகு

இவவிதழகளுக கதிதேவதைகளாவன விநாயகன வைர
வன க்ஷேததிரபாலன சண்டன னெனபவா

சுவாதிஷ்டானமாவது —இதறகுத தான மிலிங்கமூலம.

இதறகுவடிவு அறுகோணம அநேக காநதியினை யுடைய
வாறிதழத தாமரை

இதிலிருககு மககரங்கள ப ஹ ம ய ர ல

ஆறிதழகளி லிருககு மதிதேவதைகளாவன பிரதிட்டை—
சுததவிரிவி பாவனை இருடி பதமணி பதமயோகி என்றுவா

மேல் மணிபூரகம —இதறகுத தானங் நாபி.

மாயிருக்கிற மூலாதார முதலான வாறுதாரத்திலுந் தாமார்த்த காமத்தை யறிந்து அந்தந் தாதாரங்களின் றேவதைகளைத் தியானித்து,—அவற்றி னருட்பொருளைக் கொண்டு—அந்தவாறுதாரங்களிலும் அசபை சத்தி சிவாத்மகமாக நிற்கு முறைமையடைப்பாத்து,—அங்கனந்துபோய மேலேறி - மூலாதாரத்துவக்கி விநாயகன் முதலாயுள்ள தேவதைகளைப் பொருந்தி யபிமுகம் பண்ணிக்கொண் டாறுதாரத்தாக்கு மேலாகிய பிரமரந்திர மளவும் அசபையுடனே சென்று,—அவ்வா மதிமண்டலத்தின் முகமாக்க வமுதடல முட்டத்தேக்கி பிரமரந்திரத்தி னதோமுகமாய்ச் சகஸ்ரதளமாய் வாழைப்பூப்போலே யிருக்கிற தாமரை முகையை ஜ்யோதி ஜ்யோதிப்ரோச்சாரணத்தா லுதிக்கப்பட்ட * சிவாக்கினிலே யவ்வரசசெய்த தந்தத் தாமரைப்பூவின் † கேசராக்கிரத்திலே யுள்ள சந்திரமண்டலத்தை ‡ அருகு சன்னதியிலே மூலாக்கினியை வன்னி ப்ரோச்சாரணத்திலே யெழுப்பி நாடிச் சக்கிரத்தைப் பேதித்து அந்த அக்கினியிலே சந்திரமண்டலத்தை யிளக்கப்பண்ணி அந்த வமிர்தத்தைச் சாவகாடி முகவழித்தாய நிரப்பி யவ்விடத்திலுண்டாகிய சுகோதயத்திலே தன்மயாவத்தையை யடைந்து நின்று இவையே முழும் பிரத்தியங்கமாக,—மூமுச்சோதி நினத்திருக்கல் முதலாக-முன்சொன்ன சோமசூரியாக்கினிப் பிரகாசாதிகளாகிய § கண்டஜ்யோதிக்க ளெல்லாம் சூரியோதயத்திலே நக்ஷத்ராதிப் பிரகாசங்க ளடங்கினதுபோலத் தன்னிடத்திடங்கச் சாவதோமுகமாய ஸ்வபரப்பிரகாசமாயிருக்கிற பூரணப்பிரகாசத்தைப் பாவிப்பது பிரதாருங்கமாக இவ்வாறு,—வினைகளுக்க அட்டாங்க யோகமாகச்சமுற்று முழுத்திலுமுணர்வா சிவஞானருவத்தைப் பெறுவர்-சஞ்சிதாகாமிய கன்மங்களெல்லாம் நசிக்கும்படிக்குச் சொல்லிப்போத்த வட்டாங்க யோக

த்தை யெல்லா ¶ முத் யோகத்துடனே பிரயாசைப்பட்டுச்சா தித்தபோ சிரீகண்ட பரமேசுவரனுடைய சாரூபியத்தைப் பெறுவா

* சிவஆக்கன - சிவசூரியன, † க்ஷேசம - தாது, † அகுஞ்சனம - சுருக்குதல, பிரக்கிரமகம - அஙகநீதாறுமை, § கண்டஜ யோதிசு - பரத்தியக்ஷமான பரகாசம, ¶ உத்யோகம - முயறசி

தடுத்து வளியிரண்டு மென்றது பிராணாயாமம

புலனொடுக்கி யென்றது பிரத்தியாகாரம

சலிப்பற றென்றது தாரணை

மூச்சதார முதலாதாரங்க ளகமாகக் மறிந் தென்றது தியானம

அவற்றி னருப்பொருளக ளாயாக்தென்றது விக்ஷேபம அங்கணைந்துபோய் மேலேறி யென்றது ஜபம

அலாமதி மண்டலத்தின முகமாகக் வழுந்துடல முட்டத் தேக்கி யென்றது சமாதி

முழுச்சோதி நினைந்திருந்தன முதலாகவென்றது பிரத்தா ஞஙகமாகிய யோகம

தஉக்தம் ஸ்ரீமத்ஹம்ஸே — ப்ராணாயாமஸ் ப்ரத்யா ஹாரோத்யானஞ்ச ப்ராணஸம்ருதிக்ஷணம் | ஜப ஸமாதயஸ் ஸித்தாந்தம் ஸீமாயோமோக்ஷம் ஸமயதிக்ஷி

இதறகுப பூர்வாஙகம - இயமநியம ஆசன மென்று மூன்று.

இவைகளிலலாதிருக்கில யோகஙகூடாதாகையால மூல விருத்தத்திற கூறுதிருக்கவும கூட்டிப பொருளுரைக்க வேண்டும,

இவையிறறில இயமமாவது × அஹிம்சை சத்யம + அஸ்

தேயம் பிரமசரியம் தயை வஞ்சனையற்றிருக்கை பொறுமை
தைரியம் அல்பாகாரம் — சுசித்வம் எனப்பத்துவகை

× அஹிம்சை-கொல்லாமை, + அஸ்தேயம் - திருடாமை
— சுசித்வம் - சுத்தி

ததாஹ — [illegible]

வாயோர் நிரோதே⁴ ப்ரத²மம் காலமேவ ச || ப்ரஸ்வேத³ஜ
நகோ யஸ்து ப்ராணாயாமேஷு ஸோ(அ)த⁴ம꞉ | கம்பநம்
மத்⁴யமம் வித்³யா து³த்தா²நஞ்சோத்தமம் ப⁴வேத் || பூர்வம்
பூர்வம் ப்ரகுர்வீத யாவது³த்தமஸம்ப⁴வ꞉ | ஸம்ப⁴
வத்யுத்தமே ப்ராஜ்ஞ꞉ ப்ராணாயாமஸ்ஸுகீ² ப⁴வேத் ||
ப்ராணாயாமேந சித்தம் து ஸம்ப⁴வதி ஸுவ்ரத꞉ |
சித்தே ஶுத்³தே⁴ ஶுசிஸ்ஸாக்ஷாத் ப்ரத்யக்³ஜ்யோதிர்வ்யவஸ்தி²
தம் || ப்ராணஶ்சித்தேந ஸம்யுக்த꞉ பரமாத்மநி திஷ்ட²தி |
ப்ராணாயாமபரஸ்யாஸ்ய புருஷஸ்ய மஹாத்ம
ந꞉ | தே³ஹஶ்சோத்திஷ்ட²தே தேந கிஞ்சிஜ்ஜ்ஞாநாத்³விமுக்
தா || ரேசகம் பூரகம் த்யக்த்வா கும்ப⁴கம் நித்யமப்⁴ய
ஸேத் | ஸர்வபாப விநிர்முக்த꞉ ஸம்யக்³ஜ்ஞாநமவா
ப்நுயாத் || மநோஜவத்வமாப்நோதி பலிதாதி³ ச நஶ்ய
தி | ப்ராணாயாமைகநிஷ்ட²ஸ்ய ந கிஞ்சித³பி து³ர்ல
ப⁴ம் || தஸ்மாத்ஸர்வப்ரயத்நேந ப்ராணாயாமாந்ஸ
மப்⁴யஸேத் ||

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

புலனொடுக்கி - பிராணாயாமப் பிரத்தியாகாரங்களினால் இந்திரியங்களை நிறுத்தி,—தம்பித்த வளியிரண்டும்-பிராணனை நிலை—

பிங்கலைகளினியக்கம மடக்கி,—முச்சதுர முதலாதார மகாமார்க்கம - சுழுமுனை நாடிவழி பொருந்திய பிரமாதி தேவதை முதலியன,—அலாமதி மண்டலம - புருவமத்தியா,—முழுச்சோதி நினைந்திருத்தல்-அங்கப் புருவமத்திய பதுமத்தில் விந்து நாத ரூபமாயிருக்கின்ற தேஜோலிங்க சகளநிஷ்கள சிவத்தை. இருதயத்திற் சதாசிவ முதலிய சகளசிவத்தைத் தான் தியானித்துச் சமாதித்தல்,—முதலாக - சங்காரக்கிரமத் தாதியாகச் சிருஷ்டிக்கிரமத் தீறாக,—அஷ்டாங்க யோகம - இயமநியம ஆசனப்பிராணாயாமப் பிரத்தியாகார தாரண தியான சமாதியென்னு மெட்டங்கமுடைய சகள சகளாகள சிவ சாக்ஷாத்கார ரூப அகச்சிவ யோகத்தை,—முற்றும - அங்கமின்றி,—ஒழுகவல்லோர் - அந்த அட்டாங்கங்களினுஞ் சாதித்தலைப் பண்ணினவர்

மறைய வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

உச்சதொழின் மாத்திரையானே அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு யோகமெனப் படுமென்பதாம்

சகமார்க்க முழுத்தலென வினைமுடிக்க
இயல்யோக முழுந்தவரென எடுத்துக்கொண்டுரைக்க

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் சகமார்க்க மருளிச்செய்கிறார்

சன்மார்க்கம் புலனொடுக்கி - சன்மார்க்கமென்று சொல்லப்பட்டது ஐம்புலன்களையும் விஷய வியாபாரத்திற் செல்லாமலடக்கி,—தடுத்து வெளியிரண்டுஞ் சலிப்புற்று - பிராணாயாமத்தினாலே உச்வாச நிச்வாசங்களிரண்டும் தடுத்துச் சத்துருச் சலனமற்று,—மூச்சதார முதலாதாரங்களகமாகப் பிரிந்து - மூன்றுசதுரமான மூலாதாரமுதலான ஆறு ஆதாரங்களுக்குமுட்டான வழிகளையறிந்து,—அவரறிவினருமபொருளாக ஞானாநந்தங் கணைந்துபோய்மேலேறி - அவையிற்றினுடைய வழிதான அந்த வத்தங்களையுமறிந்து அவ்விடங்களிலே பொருந்தி அந்த ஆதாரங்களுக்கு மேலேசென்று,—அலாமதி மண்டலத்தின் முகமாக்கவுமுதட்டல முட்டத்தேக்கி - விரிந்த சந்திரமண்டல முந்தின வழியினுடான வமுர்தத்தைத் தன்னுடைய தேகமுழுதும் நிரம்பத்தேக்கி,—முழுச்சோதி நினைந்திருந்தலமுதலாக விளைகளுக்கமாக்க - எல்லாப் பிரகாசமுங் கூடிநிறைந்த பிரகாசத்தைப் பொருளாகத் தியானித்திருப்பது இவனுடைய கன்மங்களெல்லாம் சமமாகத் தக்கவழிக் கேதுவாம், இதுவன்றியும்,—அட்டாங்க யோகமுற்று முன்முத்தலுழந்தவர் - இயமநியம ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை த்யானம் சமாதி என்று அட்டாங்கயோகந் தொடங்கி மற்றுள்ள யோகங்களெல்லாஞ் சாதிக்கிறவிது யோகமாம் இப்படிச் சாதித்தவர்கள்,—சிவனாருருவத்தைப் பெறுவர் - பரமேசுவரனையொத்த சாரூபமான திருமேனியைப் பெறுவார்கள்

இதனாற் சொல்லியது, சன்மார்க்கத்துக்குச் சொல்லப்பட்ட புலனடக்குகிறது முதல் அஷ்டாங்கயோகமீறாக இந்த முறைமையிலே செய்து முடித்தவர்கள் சாரூப்யத்தைப் பெறுவார்கள் என்னு முறைமையை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சகமார்க்க முழுத்தல - தோழ நெறியைச் சொல்லுமிடத்து,— புலனொடுக்கி - விடயங்களிற் செல்லுமைம்பொறிகளையு மடக்கி,—வளியிரண்டுந் தடுத்து - உச்சுவாச நிச்சுவாசமாகிய வாயுவிரண்டினையுந் தம்பித்து,—ஒலிபற்று - சுழுமுனை மார்க்கத்திலே மனோவியாபார மின்றிச் சலனமற்று,— முச்சதுர முதலாதாரங்களைச் சமமாக்க மறிந்து - திரிகோணமுதலிய மூலாதாரமுதலான வாறுதாரத்தினு மந்திரக்கிரமத்தை யறிந்து,— அவற்றி னுரு பொருள்க ளுணர்ந்து - அந்த வாதாரங்களின் தேவதைகளை தியானித்து அவ் வாறுதாரங்களினு மசபை சிவ சொரூபமாய் நிற்கு முறைமை யுணர்ந்து,—அங்கணைந்து போய மேலேறி - மூலாதாரந் தொடங்கி விநாயகர் முதலாயுள்ள தேவதைகளைப் பொருந்தி பிரமரந்திர மாவும் சபையுடனே சென்று,— அலாபதி மண்டலத்தின் முகமாக்கம-விரிந்த சந்திரமண்டல முகத்தினடி யுண்டாகிய,— அமுதுடல் முட்டத் தேக்கி - அமுதத்தை தன்னுடைய தேகமுழுமை நிறப்பத் தேக்கி,—முழுச்சோதி நினைந்திருந்தன முதலாக-எல்லாப் பிரகாசமுங்கூடி நிறைந்த சோதி சொரூபமாகத் தியானித்தன முதலிய வற்றான,—வினைசெருக்க மார்க்க வட்டாங்க யோகமுற்று முழ்ந்தவர் - வினைகள் கெடுதற்கு வழியாகிய வியம நியமமுதலிய வட்டாங்க போகத்தை யனுட்டித்தோர்,—சிவனுருவத்தைப் பெறுவர் - சாரூபமாகிய பதமுத்தியைப் பெறுவர்

---

## மறைஞானதேசிகர் உரை

—o—

சன்மார்க்கமாகிய ஞானபாத முணர்த்துகின்றார்.

சன்மார்க்கஞ் சகலகலை புராணவேத சாத்திரங்க
ள் சமயங்கடாம்பலவுமுணர்ந்து, பன்மார்க்கப் பொரு
ள்பலவுங்கீழாக்மேலாம் பதிபசுபா சந்தெரிந்துப் ப
ரசிவனைக்காட்டி, நன்மார்க்க ஞானத்தை நாடிஞான
ஞேயமொடு ஞாதுருவு நாடாவண்ணம், பின்மார்க்கச்
சிவனுடனாம் பெற்றிஞானப் பெருமையுடை யோர்
சிவனைப் பெறுவர்காணே (௨௨)

(இ-ள்) சன்மார்க்கம் — சிவனையடைதற்கு நல்லவழி யாதெனில்.

சகலகலை புராணவேத சாத்திரங்கள் சமயங்கடாம் — அறுபத்துநாலு கலைக்கியானமும் நாலுவேதமும் பதினெண் புராணமும் வேதத்துக்குப் புறம்பாயுள்ள லோகாயதம் பௌத்தம் ஆருகத மிந்தச் சாத்திரங்கள் வேதவழி யாகிய தர்க்கம் வேதாந்தம் பிரபாகரம் பாட்டம் வைசேடிகம் சாங்கிய மெனக் கூறிய சமய சாத்திரங்களாறு. சாத்திர மென்பதனை யிருபாலுங் கூட்டிப் பொருளுரைக்க.

வேதாகமத்தின் வழியினை றனுட்டித்த வான்மாக்களுக்குச் சுகத்தைக் கொடுக்கையாலும் ஜனன மரணங்களிற் றயக்குறுத்தெடுத்து விடுக்கையாலுஞ் சாத்திரமெனப் பெயராயிற்று, இது வடமொழி.

பலவும் — "அறம்பொரு ளின்பம்வீ டென்னு மிவற்றைத், திறம்பெற வேதாகமங்கள் செப்பும் — அறைக்கத் தகவுற்றுள, வீட்டினை வீடல்லா வினைதனையும் விளங்கக், காட்டுமது சாத்திரமேகாண்" "மருந்தின் வித்தைப் பணியினை மாற்றத், திருந்தவே செய்யுந் திறமு — மருந்தினொடு, மந்திரமுஞ் சொல்லி விடத்தினையு மாற்றிவிசகுமாம், தந்திரமுஞ்

சாத்திரமே கான்” “எழுத்தின் விதிசொல் விதியெழுவாயும், விழிக்க விளக்க விளம்புற—மொழித்திறமும், காலவிதந் தன்னைப் பகுதியுங் காட்டுமதோ, கேதுநாலாஞ்சாத்திரம்” பிறவும் வந்துழிக்காண்க.

உணர்ந்து — இவைகளெல்லாவற்றையு மறிந்து.

பன்மார்க்கப் பொருள் பலவுங் கீழாக மேலாம் பதிபசு பாசந் தெரிந்து — இங்ஙனங் கூறிய சமயிகளெடுத்துக்கொண்ட பொருட்களை பரமென்று நிறுவ வதனையாகாதென்று கீழ்ப்படுத்திச் சித்தாந்த வசனத்தா னிராகரித்தற் கெல்லாம் விசிட்டமான பதி பசு பாசமாகிய முப்பொருள்களின் யுள்ளபடி யறிந்து.

பரசிவனைக் காட்டு ஞானமாக்க ஞானத்தைநாடி ஞானஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம் — ஞானமாகிய வறிவுடனு மதனாலறியப்படும் பொருளாகிய ஞேயத்துடனு மறிவானை யொருமுத்தெனக் கருதாது கேவலம் நின்று ஞானசத்தி முதலிய மூன்றினுக்கு மப்பாற்பட்ட சிவனை, ஞானாசாரிய னுபதேசித்த வழியே துரியத்தைக் கடந்த சமாதி பொருந்துதற் பொருட்டு 'ஞானமொடு ஞேயமொடு ஞாதிருவு நாடாவண்ணம் பரமசிவனைக் காட்டும் ஞானமாக்க ஞானத்தை நாடி' என மாறிப் பொருளுரைக்க.

பின் மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்பெருமை யுடையோர் — அந்தச் சத்திகளுடன் கலந்தப்பாற்பட்டபின் சமரசீபாவ ரானந்தத்தைப் பொருந்தி யதனை யனுபவித்த ஞாதாக்கள் பெறும் பலன் யாதெனின்?

சிவனைப் பெறுவார்களே. — சிவசாயுச்சியமாகிய பரமுத்தி யடைவார்கள். எ-று.

ஞானப் பெருமை யுடையோர் எழுவாய்,பெறுவர் பய
னிலை

இச்சூக்க காமிகம் சிந்தியம் காரணபுராணத்து மறிக (உஉ)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.

-0

மேல் ஞானமார்க்கத் தடைவு கூறுகின்றார்

பின்மார்க்கச் சிவனுடனும்பெறுதி சன்மார்க்கம் - சரியை கிரியா யோகமார்க்கானுஷ்டானத்துக்குப்பின் வந்தத்துவ மார்க்கத்தினாலே சிவ சாயுச்சியத்தை யடையுந் தன்மை சத்திய நெறி

சத்தியநெறி என்றது சரியையாதி அநுஷ்டானங்களும் அதனுலவையும் சாலோக்கியாதி முத்திகளும் அநித்தியமாகையால் அசத்தியம் ஞானமும் அதனாற் பெறும் சிவசாயுச்சிய முத்தி நித்தியமாகையால் சத்தியம் ஆகையால் சத்தியநெறியென்பதற்குப் பரியாயமாகச் சன்மார்க்கமென்றது அஃதாவன —

சகலகலை வேதபுராண சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து-

கலைபுராண வேதமென்றது ஜாதியொருமை
உணர்கதென்பதைப் பதங்கோறு மொட்டிப்பொருளுணர்க.

இவ்விடத்துக் கலைகளென்றது பாசஞானங்களை

இதற்குச் சம்மதி

'மொய்தருபூதமாதி' என்ற விருத்தத்திலே எழுதப்பட்டது.

அந்த ஞானங்கடானெவையிற்றங்களினாலே யறியப்படுமெனனில்?—

வேதங்களுணர்ந்து - வேதங்களையோதி வேதார்த்தப்பொருள்களை யறிந்த தன்றால வேதாத்தியயனத்துக்கு அதிகாரமில்லாத ஸ்திரீ சூத்திர துவிசபந்துக்கள்,—

புராணங்களுணர்ந்து - புராணங்களையோதி யதன்பொருளை யறிந்ததன்றால்,—

இதனிற் சிவதீக்ஷாயுக்தராய * விசிஷ்டராகிய சிவாச்சிரமிகளானபோ காமிகாதி சிவசாஸ்திரங்களை யோதி யதிலே பூர்வபக்ஷமாகச் சொல்லும் சார்வாகாதி சமயங்களினுடைய பலசுருதி லக்ஷணங்களை யெல்லாமறிந்து,—

இதற்குச்சம்மதி சித்தாந்தபோதத்திலே,—

வேதாந்த ஶ்ரவணம் தத்ர த்ரிவர்ணானாம் விதீயதே |
ஶூத்ராதீநாம் ஸ்த்ரீணாம் புராணம் ப்ரத்யேக வர்ணி-
நாம் || ஶ்ரௌதஸ்ய ஶ்ருதிஷ்யா நீக்ஷா ஸர்வஶாஸ்த்ர
ஷ்டி ஸர்வநாநாம் | ப்ரத்யேகணாம் வ்ருத்தியோகாச்ச
ஶ்ரௌத்ர ஸ்மேஸ்ய ஸாமாந்யமேகம் || இத்யேஷாம்
விரக்தானாம் ஸாஷாயா தத்வவேதநம் ||

பன்மாக்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம் பதிபசுபா சந்தெரிந்து - பலசமயிகளுடைய நெறியிற் சொல்லும் பதார்த்தங்களைத் தாழச் சர்வோன்னதமான பதிபசுபாசமாகிய பதார்த்தத் திரியங்களைத் தெரிந்து

தெரிந்தென்றது தெரிந்தென விகாரமாயிற்று

இவ்வளவும் பரஞானம்

மேற் பரஞானங் கூறுகின்றது.

இதற்குச் சம்மதி யளவையிலே 'அகாரியே யமலனுக்' என்ற திருவிருத்தத்திலே எழுதப்பட்டது —

தெரித்துக்காட்டு ஞானநூலெனவே, ஞானகாண்டமெல்லாந் தூலாருந்தத்தியாபம்பற்றி இங்ஙனமிருபகுதிப்பட் டிகழுமென்பதாயிற்று.

நாடுதல் சிந்தித்தல்.

நாடியெனவே, நாடுதற்கு வேண்டப்படும் ஓதல்கேட்டல்களும் உடன் கொள்ளப்படும்.

பின்மார்க்கச் சிவன் விளைந்தொகை

பின்னுதல் அத்துவிதமா யிணைதல்

நாட்டாவண்ணம் பின்னிய சிவனென்றுரைக்க

மார்க்கம் இடைப்பிறவரல்

சன்மார்க்கமாவதனைச் சழித்து நாடியுடனும்பெற் றிடென வினைமுடிபு செய்க.

மேல் இச்சரியை கிரியை யென்றாற்போல எண்டும் இரு ஞானப்பெருமைபெனச் சுட்டு வருவித்துரைக்க.

இவை நான்கு செய்யுளானும் மேலெடுத்துக்கொண்ட சரியை முதலிய நான்கற்கு மிலக்கணங் கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—o—

மேல் சன்மார்க்கத்தின் முறைமை யருளிச்செய்கிறார்.

சன்மார்க்கஞ் சகலகலைபுராணவேத சாத்திரங்கள் சமயங்கள் தாப்பாவு மூனாந்து — சன்மார்க்கமாவது பலகலை ஞானங்கள் வேதங்கள் பலசாத்திரங்கள் புராணங்கள் உலோகாயதன் முதலாயுள்ள புறச்சமயங்களுடன் சமயங்களென்று சொல்லப்பட்ட பலவகையிறைய மாராய்ந் தறிந்து, அப்படியறிடவே பல மார்க்கத்திலுமுள்ள பொருள்களெல்லாஞ் சத்தியம்போலே தோன்றி அசத்தியமாய்ப்போம். ஆகையாலே,—பன

மாகமப் பொருள்பலவுங் கீழாக மேலாம் பதிபசுபாசந்தெரித்து - பலசமயங்களிலுஞ் சொல்லப்பட்ட வத்துக்களெல்லாங் கீழ்ப்படுத்தி எல்லாத்துக்கு மேலாயிருக்கிற பரமேசுவரனுடைய விலக்ஷணத்தையும் ஆன்மாக்களுடைய விலக்ஷணத்தையும் பாசங்களுடைய விலக்ஷணத்தையுங் கூறுசெய்து,—பரசிவனைக்காட்டுந் தானாக்க ஞானத்தைநாடி - மேலான பரமேசுவரனைத் தரிசிப்பிக்கைக்கு நல்ல வழியான பரஞானத்தை யாசாரியனாலே யறிந்து,—ஞானநேயமொடு ஞாதிருவு நாட்டாவண்ணம் - இவனுக்குக் காட்டுகிற ஞானமுங் காணப்படுவதாயிருந்துள்ள நேயமும் அதனோடு காணுகிற ஞாதுருவாகியதானும் என்கிற சங்கற்பங்களும் பொருந்தாதபடி,—பின்னமாகச் சிவனுடனாம்பெற்றி - பின்பு இந்தஞானத்தின் வழித்தாய் தற்போதனுஞ் சீவியாமலிறக்கவே சிவனைவிட்டு நீங்காமனிற்கிற ஞானத்தைப்பெற்று ஞானமேயாய் விடுவார்கள் இந்நிலை கூடினவர்கள்,—ஞானப்பெருமையுடையோர் சிவனைப் பெறுவார்காணே - இப்படிப் பரிபூரணமான அந்த ஞானத்தைப் பொருந்தினவர்கள் அந்த ஞானத்தினாலே சிவனோடே கூடிச் சிவனுமாயிருப்பார்கள்

பின்னமாகச் சிவனுடனாம் பெற்றியென்றது ஆன்மதரிசனம்.
ஞானப்பெருமையுடையோரென்றது ஆன்மசுத்தி
சிவனைப்பெறுவார்காணே யென்றது ஆன்மலாபம்
என்றுமதுங் கண்டுகொள்க

இதனாற் சொல்லியது, சன்மார்க்கமாவது வேதாகம புராண சாத்திரங்களெல்லாவற்றையு மாராய்ந்தறிந்து உட்சமய புறச்சமயங்களிலுள்ள பேதங்களையும் அவை யொன்றுசொன்னது ஒன்றுசொல்லாத வத்துக்களையு மறிந்து அவையிற்றைக் கீழ்ப்படுத்தி யவற்றிற்கு மேலாயிருக்கிற பதிபசுபாசமார்க்கத்

திறனுண்மையை யறிவதெனறும் அநதப பதிஞானத்தாலே சிவனுடைய திருவடியைப பெறுகிறது சாயுச்சியமெனனு முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—0—

சனமார்க்கம - நனனெறி யாவது,— சகலகலை புராண வேத சாததிரஙகள - சகலமான கலைஞானஙகளும புராணஙகளும வேதாகமஙகளிலுள்ள கருமகாண்டஙகளும மற்றுஞசாததிரஙகளும்,— சமயவகை யாமபலவு முணாநது - ஏனைச்சமய நூலகள பலவுமுணாநது,— பனமார்க்கப பொருளபலவுங கீழாக - பலவழிப படுகினற பொருளை முழுவதுங கீழெனக் கொணடு கழிதது,— மேலாம பதிபசுபாசந தெரிதது - மேலான பதிபசு பாசமாகிய மூனறு பொருளையுந தடததலக்கணத்தி வைத்து வொருத்துணாநது,— பரசிவனைக் காட்டு நனமார்க்க ஞானததை நாடி - அமமூனறனுள் பதிபொருளாகிய பாசம பசுக்களுக்கு மேலாகத் விளிதவினைக்குச் சொருபலக்கணததினைவைத துணாததலாகிய நலவழிக்கேதுவான ஞானகாணடததைப போதல கேட்டல களுடன சிநதிதது,— ஞானஞேயமொடு ஞாதிருவு நாடாவணணம பினமாகக்ச சிவனுடனும பொறி - ஞாதுரு ஞானஞேய மாகிய பகுப்பினறி யததுவிதமாயகண்டாகார நித்திய வியாபக சச்சிதானநதப பிழமபாய் நிறைநது நிறகினற சிவபிராஞேடு கலக்குந தனமைததாகிய ஞானப பெருமை யுடையோா,— சிவனைப பெறுவாகாணே - ஞானத்தை யனுட்டித்தோரே சாயுச்சியமாகிய பரமுத்தியைப பெறுவா.

டையாரும் லொழுகுமாறுபோலத் தியானஞ்செய்தல் தியான யாகம்.

ஒன்றுக்கொ   கன்மத்தைப் பற்றத் தவம் பதின்மடங்
ன்றுயரும்   கு பயர்ந்தகம், அதனைப் பற்ற ஜபம் நூறும
டங்கதிகம், அதனைப் பற்ற தியானம் நூறு
மடங்கதிகம், அதனைப்பற்ற ஞானயாகமானது சாதனப்பிர யாசமற்றதுமாய் மகத்தா யளவற்ற பலத்தைக் கொடுப்பதாயிருக்கும்.

கன்ம முதலிய நான்கினையு மனுட்டித்தார் பெறும்பலன் யாதெனின்?

அவை யுட்டுவ   அவைகளின் வழிநின் றனுட்டித்தவர்க
து போகம்   ஞர்க்குப் போகத்தைக் கொடுக்கும் அந்த
போகமும் புசித்துத் தொலைந்தவாறே மற்றொரு சரீரமெடுத்தற்குக் காரணமாம்.

அன்மை பால   இத்தன்மை யுடைத்தாதலினாலே
மேலான ஞா   மோட்சத்தை யடையக் கருதின ஞான
னத்தா லரனைய   வான்கள் விசிட்டமான ஞானபூசனையே ய
ராசிப்பார் ௴டெ   னவரதமுஞ் செய்வார்கள். எ-று
யத் தறிந்தோரெ
லலாம்

ஞானபூசை யடைவிசேஷமெனவும் அறிந்தோ ராசிப்ப ரெனவும் எழுவாய் பயனிலை கூட்டுக.

இதற்குச் சிவதருமோத்திர மெனவறிக. (உ௩)

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

சிவசித்தாந்த சாத்திர ஞானமு மறிந்தே தியான சமாதி பண்ணப்படு மாதலால், சாக்ஷாத்கார சாதன சாக்ஷாத் சன்மார்க்க ஞானபூசையாகு நிராலம்ப சிவத்தியான சமாதி முதலியவற்றைச் சாதிப்பிக்குமாதலால், சன்மார்க்க ஞான பூசையா மென்று சாற்றுகின்றார்

சித்தாந்தசுவரூபமின் தெளிதல் என்பதைச்சுட்டி ஆதிரென்று பண்ணுக

சாலம்ப சிவச்சக்க மார்க்க ஞானார்த்திய சாலம்ப சக்க மார்க்கத் தியான சமாதி முதலியவற்றைக் குறித்து நிராலம்ப சிவசன்மார்க்க சாஸ்திரஞான மியாகத்து, நிராலம்ப சிவசன்மார்க்கத் தியான சமாதி முதலியவற்றைக் குறித்துத்தாழ்ந்த தென்பதிக

அப்படிச் சிவாகமஞ் செப்பியது காணப்பெறாமற் கிரியாவான்கள் பத்துப்பெயர்க்குக் கதிகள் சாந்திராயண முதற் றபவிரதங், தபவிரதிகள் நூறுபெயர்க்குக் கதிகள் சபசீலன், சபசீலர்க ளாயிரம் பெயர்க்குக் கதிகள் சிவஞானி, சிவஞானிகளில் லக்ஷம்பெயர்க்குக் கதிகள் சிவத்தியானி, சிவத்தியானிகள் கோடி பெயர்க்குக் கதிகள் சிவசமாதிமான், சிவசமாதிமான்க ளனந்தம்பெயர்க்குக் கதிகள் சிவசாக்ஷாத்காரவான்

சிவத்தியானம் சிவ சமாதி சிவ சாக்ஷாத் காரங்களும் கிரியோத்திரேக விசிஷ்டச் சிறப்பு ஞானங்கள்தானே

பதப்பொருள் வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

சிவதருமோத்தரத்திற் கூறியவாறே ஒன்றற்கொன்றேற்ற மாகிய கன்மவேள்வி தவவேள்வி சபவேள்வி தியானவேள்வி ஞானவேள்வியென்றைந்தனுள், முன்னைநான்கும் போகத்தைப் பயப்பனவாக, இதனுட் கிளக்கப்பட்ட ஞானவேள்வி யொன்றுமே வீடுபேற்றைத் தருவதாகலான் அஃதுணர்ந்தோ ராலங்ஙன மைவகை ஞானவேள்வியே வேட்கற்பாற்றென்ப தாம்.

தெளிதற்கும் நிட்டைக்கும் நூல் வேண்டாமையின் நூலா னாகற்பாலனவாய ஏனையிரண்டுமே ஈண்டு வேள்வியென் றெடுத்துக் கொள்ளப்பட்டன.

நற்பொருளைத்தானே கேட்டல் கேட்பித்தலெனக் கேட்டற்குப்பின் வைத்தோதினமையான், ஈண்டுக் கேட்பித்தலென் றது, ஆசிரியனை வழிப்படுத்தான் கேட்டலின்றியுஞ் செவ்வு மோதுவிக்கவும் பெற்று நூலினைக் கணிகாமுடையராயினோர் அந்நூற்பொருளைத் தமது மதிநுட்பத்தாலுணர்ந்து தம்மாலோ துவிக்கப்பட்டார்க்கு உரைத்தலை யென்பது பெற்றாம்.

கேட்டற்குப் பின்னதாகிய ஏனைக் கேட்பித்தல், பிறர்க் குரையிடத்தே நூல்கலப்பாறுமென்பவாகலிற் சிந்தித்தற்பயத் ததாய் அதனுள்ளடங்குதலின், வேறுவைத் தெண்ண வேண்டா வாயிற்று.

அற்றாகலினன்றே வருஞ்செய்யுளிற் கேட்டற்குப்பின் சிந் தித்தலே கூறியொழிந்ததூஉமெனக்.

—

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

முன் சொன்ன பரஞானத்தாலே சிவனைக் கூடுகிறதற்கேற்ற மார்க்கங்களை நோக்கி அபரஞானத்தாலே கூடுகிற முறைமையை மேலருளிச்செய்கிறார்

ஞான நூல்தனையோதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்றா ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தலைந்தும் - ஞானசாஸ்திரங்களைத் தானோதுவதும் பிறர்க்கு அந்தச் சாஸ்திரங்களை யோதுவிக்கிறதும் அந்தச் சாஸ்திரங்களிலுள்ள நல்ல வஸ்துக்களைப் பிறருக்குச் சொல்லுகிறதும் தான் பிறரிடத்திலே கேட்டலும் நன்றாகக் குற்றமற்ற வஸ்துப்பொருளை யாராய்ந்து சிந்திக்கலுமென்று சொல்லப்பட்ட ஐந்தும்,—இறைவனடி யடைவிக்கும் எழில்ஞானபூசை - இப்படிச் சொல்லப்பட்டவை யெல்லாஞ் சாத்திராயுக்த அழகிய ஞானபூசையாயிருக்குமாகையாலே அவனுடைய திருவடியிலே பொருந்தப்பண்ணும் —ஊனமிலாக் கன்மங்கள் தவஞ்செபங்கள் தியானமொன்றுக்கொன்று உயருமிவை புரியவரும் போகம்-குற்றமில்லாத சரியாதி கன்மங்கள் தபசுகளைப் பண்ணுகை ஜபங்கள் தியானங்கள் இவை தன்னில் ஒன்றுக்கொன்று மேற்பட்டிருக்கும் அப்படியிருந்தாலும் புசிப்புக் கேதுவொழிந்து இவையிற்றாலே மோக்ஷமுண்டாகாது — ஆனபடியால் மேலான ஞானத்தாலரனையர்ச்சிப்பர் வீடெய்த அறிந்தோரெல்லாம் - ஆகையாலே இவையிற்றுக்கு எல்லாம் மேலாயிருக்கிற சிவனைப் பெற்றுச் சிவானுபவத்தை அனுபவித்துக்கொண்டிருப்பார்கள் மோக்ஷத்தைப் பெறுகிற முறைமையறிந்த பெரியோர்களெல்லாம்

இதனாற் சொல்லியது, ஞானசாஸ்திரத்தை யோதுகிறது முதலாயுள்ள அபரஞானத்தாலே பரஞானத்தைப் பெறலாமெ

ன்றும் கன்ம வெக்ய முதல் நாலும் ஒன்றாகக்கொண்டு மேலாயி ருக்குமென்றும் அவையிற்றினால் போகமொழிந்து மோக்ஷமுண்டாகாதென்றும் ஞானத்தினாலே மோக்ஷமுண்டாமென்றும் அறிந்த பெரியோர்கள் அனவரதமும் அந்த ஞானத்தினாலே சிவனோடே கூடியிருப்பார்களென்னுமுறைமையும் அறிவித்தது

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—0—

ஒன்றாகக் கொண்டியரும் - சிவதரு மோத்திரத்திற் கூறியவாறே யொன்றாகக்கொண் டேற்றமாகிய,— ஊனமில்லாக் கன்மந் தவஞ் சபந் தியான மிவைபோக மூட்டுவது-குறைவிலாக் கன்மவேள்வி தபவேள்வி தியானவேள்வி ஜபவேள்வி ஞானவேள்வி யென்னுமைந்தனுள் முன்னைய நான்கும் போகத்தைக் கூட்டுவனவாக,— ஞானநூற்றனை யோதல்-ஞானநூற்றனை யோதலும்,— ஓதுவித்தல்-அந்நூலைப் பிறர்க்கு ஓதுவித்தலும்,— நற்பொருளைக்கேட்பித்தல்-அந்நூற்பொருளைத் தமது மதியுடைப்பத்தாற் பிறர்க்குக் கேட்பித்தலும்,— தானன்குறக் கேட்டல்-அந்நூற்பொருளைத் தானன்குறக் கேட்டலும்,— ஈனமில்லாப் பொருளதனைச் சிந்தித்தலைந்தும்-ஞானபூசையாமனைமையான - குறைவில்லாத வப்பொருளைச் சிந்தித்தலுமாகிய வைவகைப்பட்ட அழகிய ஞானவேள்வியாதலின் அஃதொன்றுமே,— இறைவனடி யடைவிக்கும் - வீடுபேற்றைத் தருவதாதலான்,— வீட்டப்பதவறிந்தோரெல்லாம்-அஃதுணர்ந்தோரெல்லாரானும்,— மேலான ஞானத்தாலரனையருச்சிப்பர்-அவ்வைவகையான ஞானவேள்வியே வேட்கற்பாற்று என்பதாம்

---

டை கூடி பிரளயகால மளவும் அவ்விடத்துச் சீவன்முத்தரா யிருந்து பிரளயத்திலே பரமுத்தியை யடைவர் அவ்விடத்துப் போகபரவசத்தினாலே நிட்டை கூடாதிருந்ததாகில்,—இந்தப் பாரமேல் நாட்டிய நற்குலத்தினில் வந்தவதரித்து - இந்தப்பூமியின்மேல் ஏனைகுலத்தின்றிச் சிவகருமம்பண்ணுவோர் குலத்திலே வந்துதித்து,—குருவான ஞானநிட்டையடைந்தவர் நாதனருளே - ஆசாரியர் கருணையினாலே ஞானநிலைமையைப் பெற்றதனால் சிவனை வேற்ற சிவசாயுச்சியத்தை யடைவர்களென்றதன்பொருள்.

* ஹரணம் - நீக்குதல், † உபாதேயம்-எடுக்கத்தக்கது,

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சர்வாதிக்க நிராலம்ப சிவ சாக்ஷாத்கார சாதன நிராலம்ப சிவசமாதி முன்சொல்லிய ஞானத்தினு முக்கிய மென்பது ஆசாரியரு மறிவிப்பிக்கின்றார்

கோத்தல் - பண்ணுதல்,—இந்தப்பாரமே லென்பது நியமமன்று "புவநே குரவஹ" என்று சிவாகமவித்துக்கள் செப்புவர்களாதலால், போய்ப் பொருந்திய புவனத்திருந்தபடி பூமியிற் றிருமபாத ஸ்ரீமத் ஸ்ரீகண்டருத்திரகுரு சதாசிவகுரு முதலோரால் நிரீக்ஷிதர்களாய்க் கொண்டு பரமுத்திமான்களாவர்கள்

மறைய வெளிப்பொருள்

× புவனந்தோறுள குருக்கள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

மேற்கூறிய ஞானவேள்வி யைந்தனுள் முன்னையமூன்றினும் ஆசிரியனறிவுறுக்கு முண்மைஞான மிகழாமையின், உண்மைஞான மெனப்படுவன ஏனை கேட்டல்சிந்தித்தல்களுஞ் சிந்தித்தத்னைப்பின்னர்த் தெளிதலுந்தெளிந்தவாறே யதன்பி னிட்டைகூடுதலுமென்னு நான்கேயாம் இம்முறையே வந்து நிட்டைபொருந்தினோ ரீட்டினைத் தலைப்படுவர் இந்நான்கினுள் மேவுதலின்றித் தீக்கையி லத்துவசுத்தி பண்ணப்பட்டு ஓதலோதுவித்தல் கேட்பித்தன் மாத்திரையின்னறு தப்பினவர், பதமுத்திகளின் வைகி நீங்கிட்டுணையானே ஆசிரியன் மாட்டுக் கேட்டன்முதலிய நெறியா னிட்டையினைத் தலைக்கூடி வீடுபெறுயதுவ ரென்பதாம்.

ஓதன்முதலிய மூன்றினின்றாக்குங் கேட்டன்முதலிய ஆசிரியனையின்றி யமையாதென்பது உணர்த்துதற்பொருட்டு, 'இந்தப்பாரமே நூட்டிய நற்குலத்தினிலவந் தவதரித்து' என்றதுணையேயாகலின் அதுவே நியதமன்றெனக்கொள்க, சரியைமுதலியவற்றி னின்றாரும 'அங்குநாதனே முன்னின்றருளுவான்றுளே, என வருஞ் செய்யுளிற் கூறப்படுதலின்

இனி மேவாதுதப்பினவரென்பதற்குக் கேட்டன்முதலிய மூன்றினின்று தப்பினவரென றுரைப்பாருமுளர்

கேட்டபின்னர்க் கேட்கவேண்டாமையானும், சிந்தித்தபின் னூல் வேண்டாமையானும், தெளிந்தவழி நிட்டைமேவுதற்கு இடையீடின்மையானும், கேட்டன் முதலியவற்றி னின்றார் சுத்தத்தத்துவபுவனங்களின் அபரமுத்தராக வைகியவாறே பரமுத்தியைத் தலைப்படுவதன்றி மீளுதலின்மையானும், அவர்களைச் சரியைமுதலியவற்றி னின்றாரோடொப்ப வைத்து அங்

ஙனமுரைத்தல் சிறிதுமேலாமையானும், மேலைச்செய்யுளோ டியைபுபடாமையானும், அவருரைப்பனவெல்லாம் போலியெ னவொழிக.

இவையிரண்டு செய்யுளானும் மேற்கூறிய ஞானமாவது இ தனைப் பகுதித் தெனப்பதூஉம் அவற்றுட் பொதுச்சிறப் பா மாறும் அவற்றிற்குரிய பயன்வேறுபாடு முணர்த்தியவாறு

## நிரம்பவழகியருரை வருமாறு.

இந்த நிட்டை கூடாதென்ற மாணாக்கனை நோக்கி மேலு மோருபாயநிட்டை யருளிச்செய்கிறார்.

கேட்டல் - முற்சென்மங்களிற்செய்த சரியை கிரியை யோ கங்களின் முற்றுதலினாலே ஆசாரியனருளிச்செய்த ஞானோப தேசங்களை ஏகாக்கிர சித்தத்துடன் கைக்கொண்டு விரும்பிக் கேட் டல் — உடன் சிந்தித்தல் - முன்சொல்லப்பட்ட திரிபதார்த்தங் களைக் கேட்டபொழுதே இப்படியோ பதியினுண்மை, இப்படி யோ பசுவினுண்மை, இப்படியோ பாசத்தினுண்மையென வா ராய்வது சிந்தித்தலாம் — தெளிதல் - இப்படி யாராயப்பட்ட பாசத்தினுண்மை பசுவினுண்மையிற் கூடாமல், பசுவினுண்மை பதியினுண்மையிற் கூடாமல், பாசஞானம் அஞ்ஞானம், பசுஞா னம் சுதந்திரஹீனம், ஆகையால் பதிஞானமே உண்மையாகவு ள்ள இதுவே பொருளென்று தெளிவதே தெளிதலாம் — நிட் டைகிளாத்தல் - பதிஞானம் பெத்தத்தி லானமாவொழிந்து தானொரு முதலில்லையென்ன அந்த வானமாவாய்நின்ற தன் மைபோல இந்த வானமாவும் அந்த ஞானமொழிந்து தானொ ருமுதலில்லையென்ன அந்த ஞானத் தானாய் நின்றுவிடுதல் நிட

மேலவருடைய சீபாதத்தைப் பெறுவார்களென்னு முறை
மையுமறிவித்தது

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

——0——

விளக்கின் ஞானம் - மேற்கூறிய ஞானவேள்வி யைப்பண்ணுஞா துருஞேய மூன்றினும் ஆசிரியனறிவுறுக்கும் உண்மைஞான நிகழ்ச்சியின் உண்மைஞானமெனப்படுவன,—கேட்டலுடன் சிந்தித்தெளிதனிட்டை கிளத்தலென விரிரண்டாம்-ஏனைக்கேட்டலெசிந்திதலகளுஞ் சிந்திக்கத்தைப் பின்னாற்றெளிதலுந் தெளிந்தவாறே யழுந்தி நிட்டை கூடுதலுமென்னு நான்கேயாம் —நிட்டை மேவினோர்கள் நிட்டை யடைந்திடுவார் - இம்முறையேவந்து நிட்டைபொருந்தினோர் வீட்டினைத் தலைப்படுவார்,—மேவாது தப்பினவர் - இந்நான்கினுள் மேவுதலின்றித் தீக்கையிலத்துவ சுத்திபண்ணப்பட்டு ஓதல் ஓதுவித்தல் கேட்பித்தலமாத்திரையி னின்று தப்பினவர்,— மேலாயபதங்கட் கிட்டிய புவனாதிபராகி - மேலாய பதமுத்திகட் கிட்டப்பட்ட புண்ணர் போலீட்டால்,—இன்ப மீந்திருக்கார் - இன்பத்தினை யினிதாக வநுபவிக்கலாகிய பதமுத்திகளினைவைகி,—அரனருளாலிந்தப் பாரமேல்-முதல்வ னாணையானவைகளின்றுநீங்கி யிலவுலகத்தின்,—நாட்டியநற்குலத்தினிலவந்தவதரித்து - உயர்ந்த நற்குலத்திற்றோன்றிய தன்மையானே,—குருவான ஞானநிட்டை யடைந்தவர் நாதனருளே - ஆசிரியன் மாட்டுக் கேட்டன முதலிய செறியான நிட்டையினைத் தலைக்கூடி வீடுபேறடைவர்.

இவையிரண்டு செய்யுளானு மேற்கூறிய ஞானமாவது இத்தன்மைப்பட்டுத்தென்பதூஉம் அவற்றுட் பொதுச்சிறப்பாமா று மவற்றிற்குரிய பயன்வேறுபாடு முணர்த்தியவாறு

## மறைஞானதேசிகர் உரை.



நிட்டை கூடாதோர் திரும்புதலன்றி வேசத்தின்வழி நின்று தானஞ்செய்தோர் பெறும்பேறும், சரியைமுதலியவழியின்னின்றனுட்டித்தவர் அபரமுத்தியை யடைதற்காகும், பக்குவர் பரமுத்தியை யடைவரென்பதூஉ முணர்த்துகின்றார்

தானம்யாகந்தீர்த்த மாச்சிரமந்தவங்கள் சாந்தி விரதங்கன்ம யோகங்களாச்சரித்தோர், ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றின்பங்களின்மீளவ ரீசனையோ கக்கிரி யா சரியைதனின்முயன்றோர், ஊனமிலா முத்திபதம் பெற்றுலகமெல்லா மொடுங்கும்போ தரன்முன்னிலர் தொழிற்பிறப்புறப்பவித்து, ஞானநெறி யடைந்தடைவர் சி வனைப்பக்கு வாதனே முன்னிறந்தி னறுகுவார்நற்று ளே (உரு)

தானம் — துலாபுருட முதலிய மகாதானஞ்செய்தவர்களும்

யாகம் — அக்கினிட்டோம முதலிய யாகக்கன்மத்தை யனுட்டித்தவர்களும்

தீர்த்தம் — தீர்த்தயாத்திரைசெய்து கங்கைமுதலிய தீர்த்தமாடினவர்களும், கோடிதீர்த்தங்கண்டு குளிக்கினும் பலமில்லை யென்றார்.

நாதனே முன் அவ்விடத்துச் சிவன் சாந்நித்திய மாகில் விரகி னுறுவ மாயைக்கு மேற்பட்டு நாத தத்துவத்திற்பு ர நற்றுளே வன் போகங்களைப் புசித்திருந்து மகாசங்கா ரகாலத்திலே சிவ னவர்களை யவலோகனம் பண்ணிப் பரமமு த்தியான அவனதழகிய திருவடியை யடைந்திருப்பார்கள் எ-று.

பரமமுத்தி யாதலினு னற்றுளெனச் சிறப்பித்தார்

சரிதத்தோர் மீளவரெனவும் நற்றுள நணுகுவர் எனவும் எழுவாய் பயனிலை கூட்டுக

இதற்குச் சிவதருமோத்திரம் சுப்ரபேதம் மிருகேந்திரத்துமறிக

உலகமெலா மென்று சொல்லியிருக்க மாமாயையைக் கூறும ல் அசுத்த மாயையைக் கூறிய தெனனெனில்? ஜகத்சப்தேன மாயாந்தம்'' என்றுமதங்கத்து வசனமுண்டானபடியாலே மாயையே கூறியதெனவறிக

சுத்தாத்துவாவைப் பொருந்தினவர்க ளெல்லாருஞ் சிவ துல்லியரென் றோதலால் அவர்கள் திரும்பார்கள்.

விசிட்டமான கன்மபரிபாகத்தாலே புரியட்டக வுடலை யெடுத்துப் பொல்லாதென்ற சகலயோனிகளைப் பொருந்தி யெல்லா விடயஞானங்களையுங் கலைப்படைவே புசித்துத் தொலைந்தவாறே பிரளயாகலராய்ப் பின்பு விஞ்ஞானகல ராவார்களெனவறிக

''விஞ்ஞான கன்மத்தான மெய்யட் டகங்கூடி, யஞ்ஞானகன்மத் தாற் சகலயோனிபுக், கெஞ்ஞான்று மெய்திவிடைவிட்டு மீண்டுபோய், விஞ்ஞானராய்ச்சிவ மேவுவ துண்மையே'' எனவறிக. (௨௫)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—⟡—

முந்தின விருத்தத்திலே வைதிககரும மிருவகை சிவதருமமாகிய சிவபூஜாதிகளை செய்யவேண்டுவதாகக் கூறிய தென்னையெனனுமசங்கையைப்பண்ணிக்கொண்டுத்தரங்கூறுகின்றது

தானமியாகந்தீர்த்த மாச்சிரமந்தவங்கள் சாந்திவிரதங்கன்ம யோகங்கள்சரித்தோ ரீனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின்மீள்வர் - ருஷிப் * ப்ரோக்தங்களான ஸ்மிருதியாதி கரும சாஸ்திரங்களிலே சொல்லும் பூதானமுதலாகிய தானங்கள், அக்னிஷ்டோமாதியான யக்கியங்கள், தீர்த்தயாத்திரை பிரமசாரியாதி யாச்சிரம அனுஷ்டானங்கள், பஞ்சாக்கினி மத்திய † வாதத்தித் துவாதித் தபசுக்கள், பிராயச்சித்தங்கள், கிருச்சிர சாந்திராயணாதி விருதங்கள், அடையோகங்க ளிவைபிறவுகளைப் பண்ணினபேர், துக்கமில்லாமல் சுகமே யனுபவிக்குந் தலமாகையினாலே சுவர்க்கமென்று பெயராயுள்ள தேவலோகத்தை யடைந்து சுகத்தைப் புசித்துக் கன்மத்துக் கீடான தேகத்தை யெடுப்பார்கள் —

இமைப்பளவிலென்றது-சிறிதுகாலமென்பதற்கு உபலக்ஷணம்

ஈசனியோகக்கிரியா சரிதையினின் முப்பண்ணோ ரூனமிலாமுத்திபதம்பெற்று - சிவப்புரோக்தமாகிய காமிகாதி யாகமங்களிலே சொல்லும் சரியைகிரியா யோகங்களை யனுட்டித்தபேர் குறைவற்ற சாலோக சாமீப சாரூபமென்னும் பதமுத்திகளைப் பெற்று பிரளய பரியந்தமும் அவ்விடத்திருந்து—

உலகமெலாம் ஒடுங்கும்போ தரனரு ளிலாதொழியி லிங்குற்பவித்து ஞானநெறி யடைந்தவா சிவனை-பிரளயாரம்ப மளவும் போகத்திலே வைராக்கியம் பிறவா திருக்குமாகில் அரன

வர்களிடத்தில் சாந்நித்தியம் பண்ணார். பண்ணுறொழிபவே பிராரப்த முதலாயச் சிருஷ்டி யாரம்ப மெவ்வளவுண்டு, அவ்வளவு காலமுங் கேவலாவஸ்தையை யடைந்திருந்து சிருஷ்டிக்குப் பின் கிஞ்சித் பூமியிலகண்ணே பிறந்த தாசாரியனாலே ஞானமார்க்கத்தைப் பெற்றந்தமாக்கத்திலே சிவசாயுச்சியத்தை யடைவார்கள்

நாதனே முன்னிறங்கி யருளுகுவார் நற்குரவோ—பிரளயாரம்பத்துக்கு முன்னே வைராக்கியம் வந்ததாயாகில் சிவன் சாந்நித்தியம் பண்ணுவார், பண்ணவே சிவசாயுச்சியத்தை யடைவார்.

சிவனே என்பது நடுநிலைத்தீபம்

ஏகார மிறைசை.

இதனால் ஸம்ருதியுக்த தருமத்திலும் ஆகமோக்த தருமம் அதிகமென்பது கூறியது

* புரோக்தம் - சொல்லப்பட்டது, † வாத்தித்வம் - இருக்கை

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அப்படியே ஸ்ரீமத் ஸ்ரீகண்ட தேசிகாதியர்களால் நிரீக்ஷிக்கப்பட்டார் இருந்த சிலர் மகாப்பிரளய முடிவில் சிவநிரீக்ஷணத்தால் பரமுத்தினானகளாவார்கள், ஸ்ரீமத் ஸ்ரீகண்டாதி நிரீக்ஷணம்போல சிவநிரீக்ஷணமு மில்லாதார் மற்றும் மகாசிருஷ்டியிற் பூமியிற் புவனங்களிற் ஜனனமித்துப் புவன குருக்களாற் றீக்ஷிக்கப்பட்டுச் சிவசமாதிபண்ணிப் பரமுத்தினான்களாவார்களென்று பாஷிக்கின்றார்

**இவைப்பனவில் - நித்திய நிலையின்றி,—ஈசன யோகமென்றது சாலம்ப சிவயோகமாதலால் ஈசன யோகக் கிரியா சரியை**

தனின்னதேரா நிராலம்ப சிவசமாதி நிலைகெட்டு நிலைபெறுதோ ருமென்று வருவித்துக்கூட்டுக,— முத்தி - பதமுத்தி மற்றைய வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு

மேலேமேலே போயும் மிருக்கறத்தேதுவாகிய பசுபுண்ணிய பரிபாலனத்தி, மேம்பட்ட சரியைமுதலிய சிவபுண்ணியங்களை விரும்பியுடைத்தோரும் மேவாது தயினவரோடொப்பக் கத்தக்கமக்குரிய பதமுத்திகளை னெடுங்காலமமைந்து முடிவின் கண் பயராறுமம் ஞானநெறியைப்பத தலைப்பட்டே வீடெய்து வரென்பதாம்

இதனானே சரியைமுதலியவற்றிற்கு பயன் மேற்கூறிய சாலோகமுதலிய பதமுத்திமாத்திரையே போலுமென்னுமா சங்கையை நீக்கியவாறுமாயிற்று

## நிரம்பவழகியருரை வருமாறு.

ஆன்மாக்கள் புண்ணியங்களைச் செய்து போகங்களைப் புசிக்கும்பொழுது இருக்கிற பதங்களெல்லா மொத்திரமல்ல வொன்று கொண்டு ஏறக்குறைந்த தென்னம்பு என்ற மார்க்கங்களைநோக்கி யருளிச்செய்கிறார்

தானம் - கோதான பூதான முதலாகவுண்டான தானங்கள்,—யாகம் - சோமயாக முதலான யாகங்கள்,—தீர்த்தம் - கங்கைமுதலான தீர்த்தங்கள்,— ஆச்சிரமம்-தேவதாருவனமுதலான ஆச்சிரமங்கள்,—தவங்கள் - பஞ்சாக்கினி நடு ஜலத்தினின்றுமுதலாகச் செய்கிற தவங்கள்,—சாந்தி - நன்மைப்பகுதி

தியைப் பொருந்தியிருக்கிற சாந்திகள்,—விரதம் - மாதோபவாசம் அட்டமிவிரதம் முதலான விரதங்கள்,—கன்மயோகங்கள் - சிவயோகமன்றியே சரீரவருத்தமாகச் செய்யப்பட்ட யோகங்கள்,—சரித்தோர் - தானம் முதலானவற்றைச் செய்தவர்கள்,—ஊனமில்லாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவில் மீள்வர்-குற்றமற்றிருக்கிற சுவர்க்கத்தைப் பெற்று அவ்விடத்திலுண்டாகிய வினைப்பங்களை யனுபவித்து அது தொலைந்தவாறே ஒரு கணப்பொழுதிலே பூலோகத்திலே மீண்டு வருவார்கள் இந்தப் பசுபுண்ணியத்தின் முறைமையன்றியும்,—ஈசன்போகக்கிரியா சரிதையினின்றோர் - பரமேசுவர னருளிச்செய்த சிவாகமத்திற் சொன்ன முறைமையிலே சரிதை கிரியை யோகங்களை யனுட்டித்தவர்கள்,—ஊனமிலா முத்திபதம்பெற்று - குற்றமற்ற சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பியமென்னும் பதமுத்திகளைப்பெற்று சருவசங்காரம் வருமளவு மந்தப்பதங்களிலுண்டாகிய போகங்களைப் புசித்துக்கொண் டிருப்பார்கள் — உலகமெலா மொடுங்கும் போது - பிரபஞ்சமெல்லாஞ் சங்காரப்படும்பொழுது,—அரன் முன்னிலா தொழியின் - பரமேசுவர னிவர்களை யனுக்கிரகத்திலே முன்னின்று இரட்சியாதாகில்,—உற்பவித்து - மீண்டு ஜநநத்தை யடைந்து,—ஞானநெறி யடைந்தவா சிவனை-முன்பு விட்ட குறையிலே அந்த ஞானத்தைப் பொருந்தி யினவழித்தா யந்தஞானத்திலே சிவனைப் பெறுவார்கள்.—அங்கு நாதனே முன்னிற்கில் நணுதவா நற்றுளே - அந்தச் சங்காரகாலத்திலே பரமேசுவரன் முன்னின்று இரட்சிப்பானாகில் அப்பொழுதே யவனுடைய நன்மைப்பகுதியா யிருந்துள்ள சீரபாதத்தைக் கூடாநிற்பார்கள்.

இதனாற் சொல்லியது, தான மியாகமுதலான பசுபுண்ணியங்களைச் செய்தவர்கள் சொர்க்காதி பதங்களைப்பெற்று அங்கு

ள்ள சுகங்களை யனுபவித்துத் தொலைத்தவாறே இமையவர் பூலோகத்திலே வருவாரென்றும் சிவ புண்ணியமென்று சொல்லப்பட்ட சரியை கிரியை யோகங்களைச் செய்தவர்கள் பதமுத்திகளைப் பெற்றிருப்பார்களென்றும் சங்காரகாலம் வந்த வவசரத்திலே பரமேசுவரன் அனுக்கிரகிக்கி லயவிடத்தன்னிலே சாயுச்சியத்தைப் பெறுவார்களென்றும் அவ்விடத்தி லனுக்கிரகஞ் செய்யானில்லையாமாகில் மீளவுஞ் ஜனனத்தைப் பெற்று ஞானத்தினாலே சிவனுடைய சீர்பாதத்தைப் பெறுவார்களென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

தானம் - தானங்கள் செய்தலும்,— யாகம் - யாகங்களியற்றுதலும்,— தீர்த்தம் - புண்ணிய தீர்த்தங்களாடலும்,— ஆசிரமம் - தத்தந்நிலைகளிற் றவறாது நடத்தலும்,— தவங்கள் - தவங்களிற் பற்றலும்,— சாந்தி - பிராயச்சித்தங்களிற் பற்றலும்,— விரதம் - விரதங்களிற் பற்றலும்,— கன்மயோகங்கள் சரித்தோர் - கன்மயோகங்களிற் பற்றலுமாகிய வினைகளை யனுட்டித்தோர்,— ஈனமிலாச் சுவர்க்கம்பெற நினைப்பரவின் மீள்வர் - அன்மிகளுடைய சுவர்க்கலோகத்தினைப் பொருந்தி யனுபவித்து மீள்வராகலின் மேன்மேலே போயும் மீளுந்தன்மையாகிய பசுபுண்ணியம்போலன்றி,— ஈசன் சரியைகிரியாயோகத்தினின்றோர் - முதல்வன் விதித்த மேம்பட்ட சரியைகிரியாயோகங்களாகிய சிவபுண்ணியங்களை விதிப்படி யனுட்டித்தோரும்,— ஊனமிலா முத்திபதம்பெற்று - மேவாது தப்பினவரோடொப்பத் தத்தமக்குரிய பதமுத்திகளி னெடுங்காலமவைகி,— உலகமெல்லாமொடுங்கும்போ தானமுங்லா தொழியின் - பிரபஞ்சமெல்லாஞ் சங

காரப்பட்டபொழுது முதல்வன் முன்னின்றருளாநிற்கில், —உ றபவித்து ஞானநெறியடைந்து சிவனையடைவர் - மீட்டுஞ் சன்னத்தையுற்று முடிவினைக் கணவயாற்றுனு குருவருளான ஞானநெறியைத் தலைப்பட்டே வீடெய்துவராகலின், — அங்ஙனாத்தினை முன்னிற்கில் நற்றுணைத்துவா - மேற்கூறிய சரியைமுதலிய வற்றினின்றோரு முதல்வனருள்பெற்று திருவடியிற் கலப்பர்

இதனானே சரியைமுதலிய வற்றிற்குப் பயன் மேற்கூறிய சாலோக முதலிய பதமுத்தி மாத்திரையே போலுமென்னு மாசங்கையை நீக்கியதூஉமாயிற்று

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலெய்தியது விலக்கிச் சிறப்புவிதி யுணர்த்துகின்றார்

சிவஞானச் செயலுடையோர் கைப்பிற்றுனந் தில
மாமே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து, பவமாயக்
கடலிலழுந் தாதவகையெடுத்துப் பரபோகந் துய்ப்
பித்துப் பாசத்தையறுத்துத், தவமாரும் பிறப்பொன்
றாற் சாரப்பண்ணிச் சரியைகிரியாயோகந் தனினுஞ்
சாராமே, நவமாருந் தத்துவஞானத்தைநல்கி நாதன்
யுக் கமலங்க ணுறுவிக்குந்தானே. (உசு)

| | |
|---|---|
| (இ-ள்.) சிவஞா னச் செய லுடையோ ர்கையிற் றுனந் திலமளவே செ ய்திடினும் | சிவஞானத்தினுடைய செயலை யுணர்ந்த ஞாதாக்களிடத்தில் எள்ளளவுபொருள் தா னங் கொடுக்கினும் ஆசையற்ற ஞாதாக்கள் தானம்வாங்கில் அவர்களும் நம்மைப்போலே விருப்ப முடையவர்க ளாகார்களோ வெ னில்? |

“மெய்யினையுணர்ந்த ஞானி வேண்டிய விந்தைதானேனு, மூய்
யவே பிறவியுனனி யவாகொண்டையுகப்பன” எனபதனு லறிக.

நிலமலைபோல நிலமானது மலையானது மெய்ப்படி நா
றறிகழுந்து போதுமவளருமோ அதுபோலஇந்தப் புண்
ணியமும பிரளயபரியந்தமுமநின றநகந்த
வவதரததுககுப போகததைக கொடுக்கும

“கருமிகட கிகைநிறகுங கலநதொரு பிறபபிறசறற, பெ
ரியபராக தவசகோக கிகை பிறபபொரு நூறுநிறகு, மரியமந
திரததாககிகை யாயிரமபிறப்புநிறகு, முரியயோகிககுஞானிக
கூழிபெருழிநிறகும” எனபதனு லொனறுககொனறு விசிட்ட
மென வறிக.

பவமாயககட இநதப பலஙகொடுககத தாதாவை ஜநந
வி லழுநதாதவ மரணமாகிற கடலிலே கிடநதழுநதாதபடி
கைபபிடித்து கரையேற்றி

பரபோகந்து அபர போகஙகளைப புசிபபியாமல மே
ய்ப்பித்து லான போகஙகளைப புசிபபித்து

அவவிருவகை யாவன? மாயாகாரியமாகிய புவனஙகளிலி
ருககு மமேசாதிகளான உருததிராகள புசித்திருககும போகம்
அபரபோக மெனவறிக.

சுத்தமாயா காரியமாகிய சுததத்தவ புவனஙகள வித்
தியேசுரா முதலாயினா புசித்திருககும போகம பரபோகமெ
னவறிக

சுதத தததுவ புவனவாசிகளுககுக கனமமில்லாமையா
லவாகளுககுப போகங கூடாதெனில், பிரளயாகலருககுக கன
ம முணடாதலால அபரபோக மெனறூா.

விஞ்ஞான கலருககுக கனமங காரணமனறு மலபரிபாக
மே காரணமாதலாலும, சுததகனம முணடெனறு ஆகமங் கூ
றுகையாலும பரபோகத்தைப் புசித்திருப்பர்களென வறிக.

சிவஞானச் செயலுடையோர் கையிற் றனந்திலமளவுசெ
ய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து பரபோகந் துய்ப்பித்து-காஷ்
டத்திலே மறைந்திருந்த அக்கினியானது * மதனத்தினாலே பிர
காசித்துக் காட்டத்தை மறைத்துத் தானேயாய் நின்றதுபோ
ல முன் ஞானமாவிலே மறைந்திருந்த சிவனது ஞானக்கிரியாச
த்திகள் கேட்டல் சிந்திக்கல் தெளிதலினாலே ஆன்மாவினுடை
ய ஞானக்கிரியா சத்திகளிலே பிரகாசித்த கலைகளை யடக்கித்
தானேயாய் நிற்கும் அவ்வாறு பெற்றபோ சிவஞானச் செய
லுடையோர் அவர்கள் கையிலே யெள்ளளவாகிலும் ஒருவஸ
துவைப் பக்தியுடனே கொடுத்தால் அது ரத்தினங்கள் முதலா
ன சர்வ வஸ்துக்களையு முடைத்தாய்ப் பஞ்சாசத்கோடி விஸ
தீரணமுடையிருக்குட் பூமியையும் ஸ்வர்ணமயமாகிய மகாமே
ருவையும் வேத வேதாங்கங்களை யோதியுணர்ந்து வழுவற அக்
னிஷ்டோமாதி சத்திரயாக பரியந்தம் பண்ணுங் கனமகாண
டிகையினாலே கொடுக்கத் தகிலும் அதிகமாக விளங்கி இந்திர
லோக முதலான வுலகங்களிலே மேலான போகங்களைப் புசிப்
பித்து,—பவமாயக் கடலி லழுந்தாதவனையெடுத்துப் பாசத்
தையறுத்துத் தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண்ணலீ-ஆசா
ரியனாலே ஜநந மரணமாகிய மாயா சமுத்திரத்திலே நின்று
கரையேற்றி யாணவ மாயை கன்மமென்கிற பாசத்தையொழி
க்கும்படிச் சிவதருமமாகிய † தபோதனருடைய குலத்திலே
யொரு ஜநநத்தை யெடுப்பித்து,—சரியைக்கிரியாயோகந் தன்னி
லும் சாராமே - சரியைக்கிரியா யோகங்களைச் சாதியாமலே,—
நவமாரும் தத்துவஞானத்தைநல்கி - புதுமையாகிய பரத்
துவமாகிய சிவஞானப் பிரகாசத்தைக் கொடுத்தவராய்,—நாதனடிக்
கமலங்க ளணுகுவிக்குந்தானே - சுவாமியாகிய சிவனுடைய
சாயுச்சியத்தை யடைவிக்குஞ் சிவஞானிகள் கையிற் றனமென்
றிதனபொருள்

* மதனம் - கடைதல், † தபோதநர் - தவத்தைத் தன மாகவுடையார்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

நிஷ்பிரபஞ்சமாதி நிலைபெற்றோர் பெருமை நிகழ்த்துகின் றார்

சிவஞானச் செயலுடையோர் - நிராலம்ப சிவயோக சமாதி மான்கள், —சித்தவஞானத்தை - நிராலம்ப சிவயோக சமாதியை, —நல்கி - கொடுத்து, —நாதனடிக்கமலங்கள் - நானத்த ஞானக்கிரியா சத்திசமான சத்திலக்ஷண சிவத்துவத்தை மற்றைய வெளிப்பொருள்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

விதிவழியின்றிப் பத்திவழியின்று பசுமுத்தியைப் பெற்றோரும் முடிவின்கண் ஞானநெறியைத் தலைப்பட்டே வீடெய்துவரெனப் பகாம்

பத்திநெறியின்றோர்க்குப் பசுவ மிகுதிப்பாட்டாற் சரியைகிரியாயோகம் எளிதிற் கைகூடி முற்றுப்பெறுவனவல்லிஎ ஏனோர்க்குப்போலக் காலநீட்டிப்பும் அருமையுமுடையனவல்லவெனபார், சரியைகிரியாயோகந் தனவினுஞ்சாரார்ரே யென்று ராகலின், சரியைகிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்சேர்வரென மேற்கூறிய சோபானமுறையோடு முரணுமையறிக

இவை நான்கு செய்யுளானும் ஐவகைவேள்வி யாற்றினோர் பெறும் பயனும் சரியைமுதலியவற்றிற் சரித்தோர் பெறும் பய

ஐம் சிவஞானிகட்குச் செய்யுந் தானப்பெருமை கூறுமுகத்தாற் பத்திநெறியினின்றோர் பெறும் பயனும் உணர்த்துமுகத்தானே, எந்நெறியினின்றோர்க்கும் வீடுபேறெய்துதற்கு ஞானநெறியாகிய சன்மார்க்கம் இன்றியமையாச் சிறப்பிற்றென்பது கூறப்பட்டது

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—0—

பாத்திரா பாத்திரங்களையறிந்து தானஞ்செய்யு முறைமை யருளிச்செய்கின்றார்

சிவஞானச் செயலுடையோர் கையிற் றானந் திலமளவே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து - தேகாதிப் பிரபஞ்சத்தைவிட்டு நீங்கியிருக்கிற சிவஞானிகள் கையிலே கொடுக்கப்பட்ட திரவிய மோரெள்ளளவாகிலும் அது பூமியினுங் கனத்துண்டான மகாமேருவென்னச் சக்கிரவாளகிரியென்ன விட்டுவிளங்கி,—பவமாயக்கடலி லழுந்தாதவகை யெடுத்து - ஜனனமரணமாகிய மயக்கத்தைப் பொருந்தியிருக்கிற துக்கசாகரத்திலே விழுந்து அழுந்தாதபடி யெடுத்து,—பரபோகந்துய்ப்பித்து - மேலான போகங்களைப் புசிப்பித்து,—பாசத்தையறுத்து - பாசங்களை நாசமாக்கும்படி,—தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண்ணி - அரிய தவங்களைச் செய்யத்தக்க கோத்திரங்களிலேவந்து ஓர் ஜனனமெடுத்து,—சரிதை கிரியா யோகந்தனிலுஞ் சாராமே - சிவஞானிகள் கையிலே கொடுக்கப்பட்ட தானமாகையாலே திரிவித கரணங்களிலுண்டாகிய தொழிலாலே செய்யுஞ் சரிதை கிரியை யோகமென்று சொல்லப்பட்டவையிற்றிலும் பொருந்தாமல்,—சிவமாருந் தத்துவஞானத்தைநல்கி - நாளுநாளும் புதுமைபொருந்தி யிருக்கப்பட்டாநின்ற வுண்மை ஞானத்தையும்

கொடுத்து,—நாதனடிக்கமலங்கள் நணுகுவிக்குந்தானே - நம் பிரானுடைய ஸ்ரீபாத கமலங்களிலேதானே பொருந்துவிக்கும்.

இன்னுஞ் சொல்லியது, நிலமளவாயினுஞ் சிவஞானிகளுக்குச் செய்ததான மகாமேருபோல மகத்தாகிய பிறவிக்கடலிலே நின்றுமெடுத்து மேலான போகங்களைப் புசிப்பித்து பாசநாசமாம்படி சற்கோத்திரத்திலேவந்து ஒரு ஜனனமெடுப்பித்துச் சரியை கிரியை யோகங்களையும் அடையாமல் உண்மைஞானத்தை யுண்டாக்குமென்றும் அந்த ஞானந்தானே தம்பிரானுடைய திருவடித்தாமரைகளிற் கூட்டுவிக்குமென்று முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

சிவஞானச் செய்யுளுடையோர்கையிற் றானம் - விதிவழியினன்றி பழிவழியினின்று சிவஞானிகள் கையினிற்கண் தானஞ்செய்யக் களித்தபொருள்,—நிலமளவே செய்தினும் நிலமலைபோற் றிகழுந்து - சிறிதாயினும் நிலமலைபோல வளர்தலால்,—பரபோகந் துய்ப்பித்து - மேலாகிய சாலோகாதி பதங்களை யொருகலையாக கருணையினாலாகிய வின்பங்களை யநுபவிக்கச்செய்து,—பவமாயக்கடலி லழுந்தாதவகையெடுத்து - ஜனனமரணக்கடலின்க ணழுந்தாதவண்ணங் கருணைக்கையா லெடுத்து,—பாசத்தையறுக்க - பாசத்தினீக்கி,—தவமாரும் பிறப்பொன்றிற் சாரப்பண்ணி - தவஞ்செய்தற்குரிய வுயர்ந்த குலத்தி லொரு பிறவியை யடையச்செய்து,—சரியை கிரியாயோகந் தனினுஞ் சாராமே - சரியை கிரியாயோக மேனோர்க்குப்போலக் காலநீட்டிப்பு மருமையுமின்றி யெளிதிற் கைகூடி முற்றுப்பெறச்செ

யது,—நவமாரு தத்தவ ஞானத்தைநல்கி நாதனடிக் கமலங் கணுறுதவிக்குந் தானே - முடிவின்கண் ஞானநெறியைத் தலைப்பட்டே முதல்வன் கமலம்போன்ற திருவடியிற் கலத்தலாகிய வீட்டினை யெய்துவிக்கும்

இவை நான்குசெய்யுளானு மைவகைவேள்வி யாற்றினோர் பெறும்பயனும் சரியை முதலிய வற்றிற் சரித்தோர் பெறும்பயனும் சிவஞானிகட்குச் செய்யும் தானப்பெருமை கூறுமுகத்தாற் பத்திநெறிநின்றோர் பெறும் பயனு முணர்த்து முகத்தானே பன்னெறியினின்றோர்க்கும் வீடுபே றெய்துதற்கண் ஞானநெறியாகிய சன்மார்க்கமின்றி யமையாச் சிறப்பிற்றென்பது கூறப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை

—•~~•—

முதலான ஞானத்தினாலே தானே முத்தியென்
றுணர்த்துகின்றார்

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள்புராண
நல்லாகமஞ்சொல்ல வல்லவாமென்று, மூனத்தா
னொன்கடவா ரஞ்ஞானத்தா லுறுவதுதான் பந்தமுயர்
மெய்ஞ்ஞானந்தா, ஞனத்தா லதுபோவ தலாகதிரமு
னிருள்போ லஞ்ஞான மறப்பந்த மறுமுத்தியா
கு, மினத்தா ஞானங்க ளல்லாஞான மிறைவனடி ஞா
னமே ஞானமென்பர் (உள)

(இ-ள) ஞானத் நாலுவேதமும் பதினெண்புராணமு மிரு
தால் வீடெ பதநெட்டுத் திவ்வியாகமங்களு மிவைக
ளநேகான ளெல்லா ஞானத்தினாலே முத்தியென்று

மறைகள் புராண முறையிட்டுச் சொல்லியிருக்க அவையா
னல்லவாகமஞ் வன -
சொல்ல

இருக்கில், பிராமணத்திலும் உருத்திரசூக்தத்திலும் ஞானத்தினாலே முத்தியெனவும்,

இரண்டாம் வேதத்தி லாரணத்திலும் பரசதாரணியத்திலும் ஞானத்தினான் முத்தியெனவும்,

சாமத்திற் சாந்தோக்கியத்தி லாறுவதில் ஞானத்தால் முத்தியெனவும்,

அதர்வசிரசில் ஈஸ்வர சாட்சாத்காரத்தினாலே முத்தியெனவுங் கூறுகையாலும்,

இஃதன்றிச் சைவபுராணத்தும், சூதசங்கிதையிலும், ஞானத்தால் முத்தியெனப் பகர்தலும்,

சுப்பிரபேதத்தும் சிவதருமோத்தரத்தும் ஞானத்தினால் முத்தியெனகையால் ஆகமத்துங் கூறியதாயிற்று

அல்லவாமென் — இந்த ஞானத்தினாலே முத்தியிலே கண்
னு மூனத்தாமெ — மத்தினாலே முத்தியென்றும் சிவதீக்ஷையி
னகட்டவார — னாலே தானே முத்தியென்றும் சர்வஞா
னோத்தரமுதலிய ஆகமத்தும் காந்தபுராணத்தும் பிருகு சாபத்திரயத்திலும் சைவதீக்கையினாலே முத்தியென றோதியிருக்க, 'ஏனடு ஞானத்தால்' என்று கூறியதெனெனில்? 'கிரியையென மருவுமவையாவுஞானங் கிடைத்தற்கு நிமித்தம் எனக் கிளாக்கும்' எனகையாலும்,

பாரகுகிரியை தேவிகாலோத்தர மென்னு மாகமங்களிற் கிரியை சரியை யோக மிம்மூன்றும் ஞானத்துக்கு அங்கமென

று கூறுகையால் இவ்வாசிரியரு மிக்கருத்தையேபற்றி யருளிச் செய்ததென வறிக

**அஞ்ஞானத்தா லுழலுவதற்கா னபந்தம** இப்படி யறியாமற் சொல்லுகிறதற்குப் பலம் யாதெனில், சரீரபந்தமான பிறப்பு ண்டாகையால் முத்தி யடைந்தாரென்று சொல்லப்பெறு

**உயாமெய்ஞ்ஞானத்தா னுற்றாலது போவது** இந்த ஞானத்தால் பெறும்பலம் யாதெனில்? அஞ்ஞானமான ஜநநமரணத் துற்று வாரையு மிலவனது திருவடியை யடைந்திருக்கிறதே! அஃதென்போலவெனனில்?

**அலாகிற முன்னிருள்போல ஞ்ஞானமறப் பந்தமறு முத்தி யாகும** பிரகாசத்தினை யுடைய வாதித்தனது முன்னே யந்தகார மில்லாமனீங்குமாறுபோல, அஞ்ஞான மிவனைவிட்டு நீங்கினவாறே பாசபந்தமு மற்று முத்தியையு மடைவன

**ஏனத்தா ஞானங்க ளல்லாஞ்ஞான** பரசமயிகள் தங்காந் தெய்வத்தை யடைந்திருப்பதே முத்தியென்பாகள், அந்தஞான மிவாகள் சொல்லு ஞானம்போலன்று, இந்தக் சிவஞானத்துக்குப் பரமு மில்லைச் சமனுமில்லை யாதலாம்

**இறைவனடி ஞானமே ஞானமென்பா** அநாதி யமல முத்தனுமாயச் சுத்தனுமா யாநந்தமேவடிவாயிருக்கிற காத்தாவினது திருவடியைச் சோந்த சாவஞ்ஞத்துவம் விளங்கிச் சுவாநந்தானுபூதியைத் தினைத்திருப்பதே மேலான ஞானமென் றறிவாலுயாந்தோா சொல்லுவாகள் எ-று (உஎ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மோட்சம் ஞானத்தினாலே யல்லது சரியை கிரியா யோகங்களினா லில்லையென்பது கூறுகின்றது

(ஞானத்தால் - ஞானமென்பார்) ஞானத்தினாலே முத்தியென்று நாலுவேதங்களிலும் பதினெண் புராணங்களிலும் இருபத்தெட்டாகமங்களிலுஞ் சொல்ல, அப்படியன்று யசகியாதி கன்மங்களினாலே மோக்ஷமென்று சொல்லும் பூர்வமீமாம்சகரும், தீக்ஷாகன்மத்தினாலே மோக்ஷமென்று சொல்லும் பூர்வசைவரும், குறைந்த * மதிமான்களாகையாலே என்ன சுகத்தைப் பெறக்கடவர் அவர்கள் சொல்லுங் கன்மங்களெல்லாம் அஞ்ஞானமான மாயா காரியத்தினாற் செய்வது மாயா காரியத்தினாலே பொருந்துவது பந்தமே நின்மலா சத்தி ஞானத்தினாலே யந்தப்பந்தம் நீங்குவது அதெவ்வாறெனில்? விரிந்த பிரகாசத்தையுடைய ஆதித்தன்முன் னிருள் நீங்குவது போல இவ்வாறு சிவஞானத்தினாலே அஞ்ஞான நீங்கவே பந்தம் நீங்கி முத்தியாம் அந்த ஞானந்தான் ஏனவாதிகளாகிய உலகாயிதராதி நிரீச்வர சாங்கியராந்சம ஆன பெயருடைய ஞானம்போலே ஒத்த ஞானமல்ல, பின்னை ஏதெனில்? சிவஞானமே பரமுத்தியைக் கொடுக்கும் பரஞானமென்று பெரியோர்கள் சொல்லுவார்களென்ன றிதன்பொருள்

* மதிமான் - புத்தியுள்ளவன்



## ஞானப்பிரகாசருரை வருமாறு.



ஜடகன்மத்தால் முத்தியென்று மீமாம்சன் விளம்ப மறுத்துச் சிற்கன்மத்தாலே முத்தியென்று செப்புகின்றார்.

ஞானததால் வீட்டினறே-நிராதார தீக்ஷையிற றிரியதாரதக காபப தீக்ஷாகலா கலாபமறிநது பணணவேணடு மாதலால்

சிவனது ஞானசததி கிாததியககுறித தீக்ஷாஙக ஞானமுமஞானம

பினனவனது தீக்ஷாககுறிக கிரியாசததிசசிறபபிருப பிசசாசததி கிாததியககுறிச சஙகறப சிறகனமமு ஞானம

அதுவலறிச சாகார தீக்ஷையில கிரியாகாரததகாபப தீக்ஷாகலா கலாப மறிநது பணணவே ணடு மாதலாற குருவினது ஞானசததிக கிாததியககுறிச சிவாகம சிரவண மனனததெழுந தெளிநற செயறகைத தீக்ஷாஙக யோகாஙக ஞானமும ஞானம

பினனவனது காயிக வாசிக மானசிக தீக்ஷாகணமமியாறறு காயவாககு மனததசைவு பணணுந தீக்ஷாக குறிக கிரியா சததிச சிறபபிருப பிசசாசததி கிாததிய சஙகறபககுறிச சிறகனமமு ஞானம

அதுவலறிச சாதார வசததியோ நிருவாண தீக்ஷையிற சீஷனது கிரியதாரதத காபப யோககலா கலாப மறிநது பணண வேணடுதலாற சீஷனது ஞானசததி கிாததியககுறிச சிவாகம சிரவண மனனததெழுந தெளிதறச செயறகைத தீக்ஷாஙகயோகாஙக ஞானமு ஞானம

பின னவனது யோகககுறிக கிரியாசததிச சிறபபிருப பிசசாசததி கிாததியககுறிச சஙகறப சிறகனமமாகக ஞானசததி கிாததியககுறிச சிறபபு ஞானபபிரவாக தீக்ஷாஙக யோகாஙக தியானமும ஞானம

தியானத தசைவறு தறகுறித தியான சாததிய தீக்ஷாஙக யோகாஙக சமாதியும ஞானம.

சமாதி சாத்திய திருக்கிரியாசக்தி யோகப்பேர் விதேகப ரமுத்தி சாக்ஷாத்கார சாதன தீக்ஷாங்க சதேக சீவன் முத்தி சாக்ஷாத்காரமும் ஞானம்

இஞ்ஞானங்களிற் சித்திதிற் றுத்தானமிப்பமாயுஞ் சித்திலாரூடமாயு மனுசரிக்குஞ் சாக்ஷான் மோக்ஷமுங் கிடைப்பிக்கும் சங்கற்ப தீக்ஷணை நிரீக்ஷணம் பண்ணுஞ் சிவக்கிரியா சத்திச் சிறப் பிருப பிச்சாசக்தி லக்ஷணை தீக்ஷையும் ஞானம்

அப்படிச் சட்பிர பேதம், சுவாயம்புவம், பௌஷ்கர முதற் சிவாகமங்களிற் சிறட்பித்திருத்தலால் தீக்ஷையும் ஞான மென்பது சிவாகமப் பிரசித்தம்.

விஞ்ஞானகலா பிரளயாகலர் சகலரென்னு மவரவர்க் கருக்ம்மாய விட்டுக் கூட்டி விதிக்கும் அநேகவித ஞானத்தால் மோக்ஷ மென்றே பொதச் சிறப்பாய,—

நான்மறைகள் புராண நல்லாகமஞ் சொல்லவல்லவா மென்னு மூன்றத்தாரெனக்கட்வார் - பிராகிர காமிக வாசிக மானசிக ஜபந்த கன்மத்தால் முத்தியென்று செப்பும் ஞானனிராகும் கன்ம மீமாம்சா முதலோர் ஏது பிரயோஜனத்திற் கருகா, விஷ பிரயோஜனாகளே!—

அஞ்ஞானத்தால் - அஞ்ஞான மூலவஞ்ஞானப்பெய ராணவமல மாரோபித விபரீத ஞானரூப போகக் கிரியாகர்த்திருத்துவக்குறி போகத் திருத்துவத்தால்,—

உறுவது தான் பந்தம் - மாயா கன்ம தேகபோகங் கட்டுப் பொருந்தும்.—

உயர் மெய்ஞ்ஞானந் தானுன்னத்தால் - சொல்லிய வகைச் சிவ தீக்ஷா சிவஞான சிவயோக சிவ சரியாங்கி யங்கஞானத்தால்.—

அதுபோவது - அந்தப் பந்தம் நீங்குவது. காரணமிருக்க காரிய மெப்படிப்போம்?—

அலர்கதிர்முன்னிருள் போல் - சூரியகிரண சந்நிதானத்தி லந்தகார மொப்ப,—

அஞ்ஞான மற்ற பந்தமறும் - மலம் நீங்க மாயா கன்மங் கட்டு விடும் —

முத்திபாகும் - பின் சிவத்துவாபிவியத்தி சித்திக்கும்

சொல்லிய அங்காங்கி ஞானங்களுளங்கி ஞான முக்கிய மென்ப தறைகின்றார் —

ஏனைத்தா ஞானங்களல்லா ஞானம் - சிவ தீக்ஷா சிவஞான சிவயோக ஞானபாதத்திரங்களல்லாச் சாங்கியன் வேதாந்தி முதலோர் சொல்லும் பிரகிருதி புருஷ விவேகப் பிரம விவேகப் புருஷ ஞானங்கள் சைவசித்திகள் சொல்லுஞ் சீவ சிவ ஐக்கிய விஷய சிவசத்திப் பிரமாணிக பௌருஷப் பிரமிதிக குறித் தீக்ஷாங்காங்கி ஞானம்

இவைகளெல்லா ஞானம் சங்கற்ப சிறக்கனம் கிரத்திய ஞான காரண ஞானம் —

இறைவனடி ஞானமே - சிவசக்கிரியா சத்திச சிறப்பிருப் பிசாசத்து லக்கண சிவதீக்ஷையே —

ஞானமென்பர் - ஞானச் சிறப்பென்று சிவ சித்தாந்திகள் செப்புவார்கள்

சைவ சித்தாந்திபோல் மறைந்த சாங்கிய வேதாந்தி மதத் தாபாசர்களாயச் சகு-ரிசகுர சிலா, தியான சமாதிச் சிறந்தமைச் சிறப்பு ஞானமுஞ் செப்பாது ஞானத்தியான சமாதி சீவன் முத்தி சாக்ஷாத்கார சாவாங்காங்கியாயிருக்கும் தீக்ஷையை ஞானத்தக் கங்கமென்று மாறிக்கொண்டு சீவ சிவ ஐக்கிய விஷய சிவசத்திசரண நைமித்திக பௌருஷ போத ஞான மா

தந்திரமே இறைவனடி ஞானம், அதுவே சமாதி, அதுவே ஞான மென்பர்

அவர்கள் முன்னாசாரியர் தீக்ஷையே மோக்ஷ சாதன மென்றநேகந் திருவிருத்தத்தில் விதந்தரித்த வாக்கியங்களுக்கு முன்பின் விரோதமாய்ப் பொருள்கொள்ளாது தங்கள் மனக்கொள்கைக்கிணங்கப் பொருள் கொண்டு முன்பின் விரோதிக்கப் பண்ணி யக்குருவாக்கியங்களைப் பிராந்த வாக்கியங்களாகவும் விப்பிரலம்ப வாக்கியங்களாகவும் பண்ணிப் பேசும் பேயர்களோடு பேசச்சே திருக்கின்றது —

ஏதிப்போ நீர் நிந்திசப்பிச் செப்பிற்றென்று நிகழ்த்திபது? மலங்குணமது அஞ்ஞானமே, அஞ்ஞானங் குணங்குணித்திரவியமென்று மலமாகுமந்த வஞ்ஞானமுஞ் சிப்பி வெள்ளி ஞானம்போல ஞான மாத்திரத்தா னீங்கும்

நன்று நீ சொல்லியது, மலங்குணம் அஞ்ஞானமாகிலதைத் தருகுசக்குணியொன்று கூறவேண்டும் ஆன்மாவென்னிற் பாஷாணம்போல அஞ்ஞானமானா வென்னும் நையாயிக வைசேஷிக மதமாம் ஆன்மாவுக் கன்னிய மக்குணி யென்னி லதுவே மலம் அஞ்ஞானமென்றது மலகுணமென் றுமக் கபிமத ஞானத்தியந்தா பாவ லக்ஷணம் மவுட்டியமாகும் அஞ்ஞானமன்று குறித்கொல்லோ மகன கொல்லோ வென்று மையஞானம்போ லஞ்ஞான மாகு மஞ்ஞானமே

அல்ல திதுவெள்ளியெனுஞ் சிப்பி வெள்ளி விபரீத ஞானம்போற சவிகற்ப விபரீத ஞானமாகு மஞ்ஞானமே தான், நன்றிது வன்று குணியொன்று குறிக்குமிடத்துச் சாங்கியகார புத்தித்தத்துவமாதலால், புத்தித்தத்துவமுத்தற் றத்துவப்பிரளயத்து முத்திப் பிரசங்கம் வரும். அப்போது இருசக்கிரமென்னும் விடரி

ய ஞானம்போற் புத்தி பொருந்தாத சரீர நானென்று சற
றேதோற்று கிாவிகற்ப விபரிய ஞானமாகு மஞ்ஞானமே

அதுவும நன்றன்று, ஞானும சத்திரகுச சித்தும விபரிபா
ம சத்திரகு மலகலை மலைந்து கலந்த வித்தையுங் குணியாதலா
ல,இயற்கைக் குணிமாறி மயங்கிச செயற்கைக் கலைகலந்த வித்
தியா தத்துவ முதற் ரத்தயப பிரளயத்து முத்திப பிரசங்கம
வரும

அதுவன்றி, இரு சந்திர ஞானமாகு மஞ்ஞான மொருசந
திரனெனு முண்மை ஞானத்தா லுணர்க்க முறுமுல ஒப்புரா
தந்திரத் தத்திகருஞ சிபபி வெள்ளி ஞானமாகு மஞ்ஞானஞ் சிப்
பியெனு முண்மைஞானத்தா லுணர்க்கம புறநீக்க முறறு முற
றுமபோனறபோல நேத்திரபடல திரவிய நீக்கமனறிப புறநீ
க்க முறுந்துபோலச சரீர நானெனனுஞ் சரீரானம ஞானமா
கு மஞ்ஞானமுஞ சரீரத்துக் கன்னிய மானமா நானெனு முண
மை ஞானத்தா லுணர்க்க முறமுலு மொரு மலத் திரவிய நீக
கமனறிப புறநீக்க முறுது மல திரவியமும படலமென னியொா
ரு திரவியப பொருளெனு முண்மை ஞான மாத்திரத்தாற படல
மபோல மல மென னியொரு திர வியப பொருளெனு முணமை
ஞானமாத்திரத்தால நீஙகாது

நேத்திர படல திரவியம படல நீக்கு முபாய ஞானத்தினை
யுடைய வைத்திய சத்தி சத்திர கனமத்தால, நேத்திர விபரீத
விருத்தி நிமித்தாந்திய விருத்தியோடு நீஙகுவது போல, மல தி
ரவியமு மல நீக்கு முபாய ஞானத்தினையுடைய சிவதீக்ஷாகத்
திக்கிரியா சத்திச சிறபபிருப பிசசாசத்தி கிருத்தியக் குறிச
சஙகற்ப சிறகனமத்தாற கலை கலந்த வித்தியா தத்துவ விபரீத
விர்த்தி நிமித்த மவுட்டிய விருத்தியோடு நீஙகுமாகலால,

சாஙகியா போற் சொல்லுஞ் ஸ்வதந்திர ஞானத்தால, பா
தஞ்சலா போற சொலலுஞ ஸ்வதந்திர யோகத்தால, வேதாக

திகளபோற சொல்லுஞ் ஸவதந்திர சந்நியாசத்தால், மீமா ஞ்சா போற சொல்லுஞ் சுவதந்திர கன்மத்தால், மோக்ஷமி ல்லை

சிஷ்ட பௌருஷ சிவஞானிகளும் சிஷ்டபௌருஷ சிவயோ காதிகளும், சாதார வசத்தியோ நிர்வாண தீக்ஷாங்கி மாத்தி ராங்கங்கள் குருசிவஞானதி குருசிவ யோகாதிகளும், சிவ சிவ ஞானிகள் சிவ சிவயோகாதிகளு முறைமையிற சாதார நிரா தார சத்தியோ நிருவாண தீக்ஷாங்க மாத்திராங்கங்கள் சிஷ்ட பவுருஷ சிவ ஞானதி சிவ யோகாதிகள் மோக்ஷகாரிய முற்று மொத்துச் செல்லாது ஒரிடத்தில் வியபிசாரிகளாதலான

மோக்ஷ காரிய முற்று மொத்துச் சொல்லுஞ் சொல்லிய சிவசத்தி லக்ஷண தீக்ஷையாற் றானே மோக்ஷ மென்று ஸவத ந்திர தீக்ஷா சிறகன்மத்தால் மோக்ஷம ஸவதந்திரமல்லா ஞா ன சோடிகள் தீக்ஷாங்கங்களன்றி ஸவ தந்திரங்களாயச் சூ ழுந்தாலு மோக்ஷமில்லையாம் ஆகலாற சொல்லிய சிவ தீக்ஷா சத்தி சங்கற்ப சிறகன்மத்தாற் றானே மோக்ஷமென்று சித்தா ந்தம்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற்கூறியவாற்றால் ஏனையவெல்லா ஞானத்தைப் பயப் பிக்கும் ஞானமொன்றே வீடுபேற்றிற்குச் சிறந்த காரணமாவ தென்பது வேதமுதலிய பிரமாண நூல்கட்கெல்லாந் துணிபாக வும், அவற்றோடு பிணங்கி வீடுபேற்றிற்குத் தீக்கை மாத்திரை போ[illegible]மையும்,ஐவகை வேள்விமுதலிய கன்மங்களேயமையும், ப த்திநெறிமாத்திரையே யமையுமென்று இவ்வாறு பிதற்றும பே தையர் ஒருவாற்றானுந் தெருட்டற்பால ரல்லரெனவும், ஞா

ன மல்லாதனவெல்லா மஞ்ஞானமாகலின் அவ்வஞ்ஞானப் பகுதிகளாற் பந்தமுறுதலின்றி வீடுபேறடைதல் கூடாதெனவும், அவ்வஞ்ஞானப் பகுதிகளெல்லாம் ஒளிமுன்னிருள்போல ஞானத்தின் முன்னாச் சத்திகெட்டொழியும் அவை யொழியவே அவற்றாலாய பந்த நீங்கும் அது நீங்கவே முத்திநிலை கைகூடுமாகலான் ஞானமொன்றே முத்திக்குச் சிறந்த காரணமெனவும், ஞானத்திரளாந் தார்க்கிகர் சாங்கியர் மாயாவாதிமுதலியோர் கூறும் ஞானங்களெல்லாம் பாசஞான பசுஞானங்களாகலான் அவையும் பந்தமுறுத்துவனவேயன்றி விடுவிக்க மாட்டாமையின் அவற்றின் வேறாய திருவடிஞானமொன்றே அப்பெற்றித்தாகிய ஞானமாவதெனவுங் கூறுவர் அந்நூல்களி னுண்மையுணர்ந்தோ ரென்பதாம்.

ஏகாரமிரண்டும் பிரிநிலைக்கண் வந்தன

சொல்லவுமெனச் சிறப்பும்மை விரித்துரைக்க

தானிரண்டும் அசை

ஆனத்தால் ஆனவதனாலெனக

ஆனவென்பதனு ளகரமும் அதனாலென்பதனு ளனசாரியையுந் தொடைநோக்கி விகாரத்தாற் றொக்கன? "பெற்றத்தாற் பெற்றபயன்" என்றாற்போல

ஆதல் உண்டாதல்

இதனானே, பிறவெல்லாம் வீடுபேற்றிற்குச் சிறந்தகாரணமல்லவாதல் இனிது விளக்கி மேலது வலியுறுத்தப்பட்டது.

இத்துணையும் ஞானத்தினியல்பும் அதன் பயனும் பொதுவகையாற் கூறி, இனிச் சிறப்புவகையாற் கூறுகின்றார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

ஞானத்தைநல்கி மோக்ஷத்தைக் கொடுக்குமென்றதெனைனைப்பு, கிரியையினாலே மோக்ஷமென்ற சைவரை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள்புராணம் நல்லவாகமஞ்சொல்ல - சரியைகிரியா யோகங்களுக்குப் பதமுத்தியொழிந்து மோக்ஷமுண்டாகாது, ஞானத்தாலே மோக்ஷமென்று நாலுவேதங்களுந் திவ்வியாகமங்களும் புராணங்களுஞ் சொல்லிப்போத,—அல்லவாமென்று மூன்றதாரொன்கடவார் - அந்த ஞானத்தாலே மோக்ஷமில்லையென்று சொல்லுகிற அறிவிலாதவர்களுக்கு ஞானமில்லாததுகொண்டு அஞ்ஞானமுண்டாம்,—அஞ்ஞானத்தா லுறுவதுதான்பந்தம் - அந்த வஞ்ஞானத்தா லுண்டாவது ஜனனமொன்றுமே! அந்த ஜனனந் தான்போம்படி எப்படியெனில்?—உயர்மெய்ஞ்ஞானந்தா னுணர்த்தா லதுபோவது - எல்லாத்துக்கு மேலாயிருக்கிற சிவஞானமுண்டானா லந்த ஜனனம்போம் அல்லது போகாது அது வென்போல்?—அலர்கதிர்முன்னிருள்போல - விட்டு விளங்காநின்ற வாதித்தன் சந்நிதியி லந்தகாரம் போனாற்போல,—அஞ்ஞானமாம் பந்தமறுமுத்தியாகும் - இவனை அநாதியே மறைத்துக்கொண்டு நிற்கிற மலசம்பந்தம் போகவே ஜனனமற்று ஞானம் பிரகாசிக்கும் அந்த ஞானத்தாலே மோக்ஷமுண்டாம் —ஏனைத்தார் ஞானங்களெல்லாஞானம் - இந்தச் சிவஞானமொழிந்து வேறுசொல்லப்பட்ட ஞானங்களெல்லாம் போதவீனா சொல்லுகிற ஞானங்களாம் போதவான்கள் சொல்லுகிற ஞானமேதெனில்?—இறைவனடி ஞானமே ஞானமென்பர் - ஆகையால் பரமேசுவரனுடைய ஸ்ரீபாதத்திலே பொருந்துகைக

கு உண்டான சிவஞான மெய்ஞ்ஞானமென்று சொல்லுவார்கள் அறிவாலுயர்ந்த பெரியோர்கள்.

இதற்குப் பிரமாணஞ் சங்கற்பநிராகரணம், "பல்பணி ஞான காரணமென்னிற் - றொல்பணிதொறும்பயன் றெய்ப்ப தன்றலு-மொருபணிசெய்யாச் சிரபுரச்சிறுவரு-மரசராயத் தருணத் தலைவரு-முதிர் பரசமயத் திதமுறுமரசரு-ஞானம்பெற் றனைமையின்று - மினமில்பணிபருட் கேதுவன்றென்றல் - ஞானோற்பத்தி நிமித்தமிக் கொழிலென-வேறோதுகிறைநூ லியம்பிற்றென்னும்" என்றும், சிவஞானபோதம், அ-சூ, க- "வெ. தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து, பவஞ்செய்து பற்றுப்பா ராகத்—தவஞ்செய்த, நற்சாரியாதிகளி னண்ணுவர்த்தி ஞானத்தை நண்ணுதலைக், கற்றாசூழ் சொல்லுமாங் கண்டு" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, சிவஞானத்தாலே ஆன்மாக்கள் சிவனுடைய திருவடியைப் பெறுவார்களென்றும், அந்த ஞானத்தினாலே ஜனன மறுமென்றும், அல்லாத ஞானங்களெல்லாங் குற்றத்தைப் பொருந்தின ஞானமாகையால் ஜனனத்தைப் போக்காதென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

———o———

ஞானத்தால் வீடென்றே - மேற்கூறிய வாற்றால் ஏனைய வெல்லா ஞானத்தைப் பயப்பிக்கு ஞானமொன்றே வீடுபேற்றிற்குச் சிறந்த காரணமென்பது,—நான்மறைகள் புராண நல்ல வாகமஞ்சொல்ல - நான்குவேதங்களும் பதினெண்புராணங்களும் நன்மையான இருபத்தெட்டு ஆகமங்களுமாகிய பிரமாண நூல்கட்கெல்லாந் துணிபாகவும்,—அல்லவாமென்னு மூனத் தாரென்கடவர் - அவற்றொடு பிணங்கி வீடுபேற்றிற்குத் தீக்கை

மாத்திரையே யமையும், ஐவகை வேள்வி முதலிய கன்மங்களேயமையும் பத்திநெறி மாத்திரையே யமையுமென்று இவ்வாறு பிறர்கூறும்பேதைகட்கீரா ரொருவாற்றானுந்தெருட்டற்பாலரல்லரெனவும்,—அஞ்ஞானத்தா லுறுவதுதான்பந்தம்-ஞானமல்லாதனவெல்லா மஞ்ஞானமாகலின் அவ்வஞ்ஞானப் பகுதிகளான பந்தமுறுதலின்றி வீடுபேறடைதல் கூடாதெனவும்,—அலர்கதிர்முனிருள்போ லுபாயஞ்ஞானந்தா ஞானத்தா லதுபோவது - அவ்வஞ்ஞானப் பகுதிகளெல்லா மொளிமுன் னிருள்போல ஞானத்தின் முன்னர் சத்திகெட் டொழியும்,—அஞ்ஞானமிட்டப் பந்தமறு முத்தியாகும் - அவ்வஞ்ஞான மொழியவே யவற்றானாய பந்தநீங்கும், அது நீங்கவே முத்திநிலை கைகூடு மாகலான், ஞானமொன்றே முத்திக்குச் சிறந்த காரணமெனவும்,—ஞானத்தார ஞானங்களெல்லாஞானம் - ஞானத்தலஞ்ஞந்தார்க்கிகர் சாங்கியர் மாயாவாதி முதலியோர்கூறு ஞானங்களெல்லாம் பாசஞான பசுஞானங்களாகலா னவையும் பந்தமுறுத்துவனவே யன்றி வீடுபயக்க மாட்டாமையின்,—இறைவனடி ஞானமே ஞானமென்பர் - அவற்றின்வேறாய திருவடி ஞானமொன்றே யப்பெற்றித்தாகிய ஞானமாவதெனவும் கூறுவர் அந்நூல்களினுண்மை யுணர்ந்தவர்

இதனானே பிறவெல்லாம் வீடுபேற்றிற்குச் சிறந்தகாரண மல்லவாத லினிது விளக்கி மேலது வலியுறுத்தப்பட்டது

இத்துணையு ஞானத்தினியல்பு மதன்பயனும் பொதுவகையாற் கூறி யினிச் சிறப்புவகையாற் கூறுகின்றார்

## மறைஞானதேசிகர் உரை.



இந்த வான்மாவுக் கனுக்கிரகஞ் செய்தற் பொருட்டு அரூபியாயிருக்கிற சிவன் குருவே யாசாரியனெ

றும வடிவையெடுதது பகரிக்கு முறைமை
யுணாததுகினறுா

சூரியகாந தககலலி னிடததேசெயய சுடாதோ
னறி யிடசசோதி தோனறுமாபோல, ஆரியனு மாசா
னவந தருளாற றோனறு மடிஞான மானமாயிற றோன
றுநதோனறத, சூரியனுஞ சிவநதோனறுந தாவுந
தோனறுந தொலலுலக மெலலாநதன னாலேதோ
னறு நேரியனுபப பரியனுமா யுயிாககுயிரா யெஙகு
நினறநிலை யெலலாமுந திகழநது தோனறுமே (உஅ)

(இ-ள்) சூரியகா நதககலலி னிடததே செயயசுடாதோ னறியிடச சோதி தோனறுமா போல — சியநத வாதிததப பிரகாசந தோனறின விடததுச சூரியகாநதக கலலினிடத்திற றிடநத அகனிபபிரகாச முணடான வாறு போல

ஆரியனு மாசா னவந தருளாற றோனற — சிவனறன றனுககிரகததால பூசிப்ப னை வாசாரியனவந திவனுககு ஞானோபதே சஞ செயதவிடதது

அடிஞான மா னமாயிற றோன றுநதோனற — அநதபபடியே நாடோறு மநுசநதானம பணணியிருககவே யிவனிடததிலே சிவஞா னம பிரகாசிககும அது பிரகாசிததவாறே ‘அடிகளது ஞான மடிஞானம்’ என்னவே சிவஞானமெனறு பெயராயிறறு “அடிகே ளுமககாட செயவஞசு தமென றமராபெருமானை யாரூர னுஞசி” எனவறிக

சூரியனுஞ சிவ நதோனறும — அருபியாயிருககிற சிவனும வெளிபபடு வன.

தானுந் தோன்   தற்சொரூபமும் விளங்கும்
றும்

இவ்விடத்து விளங்குமென்றது அசுத்தமாயா காரியமா கிய தத்துவ முப்பத்தொன்றும் விட்டு நீங்கினவிடத்துச் சுத்த மாயா தத்துவரூபியாய் நிற்பன், அப்பொழு திவன் சுத்தமா யா ரூபமாகிய தன்னுடைய தனுகரணங்களைக் காண்கிறதே யென் றறிக

இத்தன்மை யுண்டாகவே,

தொல்லுலக   பழுப்பதாய் வருகின்ற சுத்தத்தத்துவ புவன
மெல்லாந் தன   த்திலிருக்கு மானமாக்களு மிவனிடத்திலே
னுள்ளே தோன்   விளங்கத்தோன்றும் இந்தச் சுத்தமாயா
றும்   பந்த நீங்கவே,

சேரியணுப்பப   சிவ னணுவுக்கணுவாயு மகத்துக்கு மகத்
ரியாத்மா யுயிர்க   தாயு மான்மாக்களுக் கெல்லாம் பிராணநா
குயிரா யெங்கு   யகனு மெவ்விடத்தும் விட்டு நீங்காமற் பிர
நின்றநிலை யெல்   காசித்து நிற்கு முறைமையெல்லாந் தரிசிக்க
லாமுந் திகழ்ந்   ப்படும் எ-று
துதோன்றும்

“சூரியகாந்தமுஞ் சூழ்பஞ்சும்போலச் - சூரியகாந்தனுந் தூழ்பஞ்சைச் சுட்டமாட்டா - சூரியசன்னிதியிற் சுடுமாறுபோ - லாரியன்றோற்றமுன் னற்றமலங்களே” எனவுமறிக.

தேவதேவ வாதிபுராண - மாயப்படலங்கீறித் தூயஞான நாட்டம் பெற்றேன் - பெற்றபின் மெய்ம்மைய நின்பெருந் தன்மை யங் - கண்டேன் காண்டலு - மென்னையுங் கண்டேன்பிறரையுங் கண்டே - னன்னிலை யனைத்துங் கண்டே - னென்னே நின்னைக் கா ணுமாந்தர் - தம்மையுங்காணுந் தன்மையோரே” எனப் பிள்ளை யார்கிளவியு முணர்க (௨௬)

## சிவாக்ரயோகியருளா வருமாறு.



மேலந்தச் சிவஞானசித்திக்கு முறைமையும் அதனாற் றரிசனப்படுவதுங் கூறுகின்றது.

அரியபெருமாசானவந் தருளாற்பெற்ற வடிஞானமானமா விற்றேன்றும் - சாவதேவ முநிகணங்களினாலும் பூஜ்யனான சிவன் சருணையினாலே ஆசாரியமூர்த்தியை யதிஷ்டித்துவந்து பக்குவானமாவினிடத்திலே சந்நிதானம் பண்ணச் சிவஞானம் ஆன்மாவிலே அபிவியத்தியாம் அஃதெனபோலவெனின்?—சூரியகாந்தக் கல்லினிடத்தே செய்ய சுடாதோன்றியிடச் சோதி தோன்றுமாபோல - அதித்தன் சூரியகாந்தத்தி னிடத்திலே சன்னிதானம் பண்ண வதனிடத்திலே அகனி யுண்டானதுபோல,—தோன்றத் தூரியனுஞ்சிவந்தோன்றும் தானுந்தோன்றும் சொல்லுங்கமெல்லாந் தன்னுள்ளேதோன்றும் நேரியனுயட பரி டனுமா யுயிர்க்குயிராயெங்கு நின்றநிலை எல்லாமுன் னிகழ்ந்து தோன்றும்-இவ்வாறு சிவஞான மானமாவிலே பிரகாசிக்கவே முன் வாக்குக்கு மனத்துக்கும் விருத்திஞானத்துக்கு மெட்டாதே நின்ற சிவன் ஆன்மாவிலே வேற்றுத் தோன்றுவன் அகத் தச் சிவனிடத்தில் தன்னையும் வேற்ற ஸ்வரூபஞானத்தினாலே காணப்படும் அநாதியாகிய பிரபஞ்சமெல்லாம் பரிபூரணமான தன்னிடத்திலே யேகதேசமாயக் காணப்படும் தேகத்துப் பிரேரகன் ஜீவானமாபோலச் சிவன் ஜீவான்மாக்களுக்குப் பிரேரகனும் பரமான்மாவாய் ஜடவஸ்துக்களிலும் குறைவற நிறைந்து முறைமையும் விளங்கத் தெரியுமென் றிதன்பொருள்.



## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—ੰ—

அப்படிக் குருஞானருத்தி சாங்க சாகார சத்திபோ நிருவாண தீக்ஷையினால் விதேக பரமுத்தி சாக்ஷாத்காரஞ் சத்தி விளங்குமென்றுஞ் சீக்ஷஞானருத்தி சாங்க சாகார வசத்தியோ நிருவாண தீக்ஷையினால் சதேக சீவன் முத்தி சாக்ஷாத்கார மெல்லாம் விளங்குமென்றுஞ் சமாதி நடுவொரு திருவிருத்தத்தால் நாட்டி யிரு திருவிருத்தத்தா லிசைக்கின்றார்.

இதுமுத லிரண்டு செய்யுள் - ௩௦ - வது செய்யுளுரையிற் காண்க.

—

## சிவஞானயோகியருரை வருமாறு

—0—

தனது கிரணத்தோடுந் தோன்று ஞாயிற்றின் சந்நிதி மாத்திரையானே சூரியகாந்தக்கல்லினகண் ணொருப்பு விளங்கித் தோன்றுமாறுபோல, கேட்பித்தலோடுந் தோன்றுமாசிரியன் சந்நிதிமாத்திரையானே மாணாக்கன்மாட்டு மேல் 'ஈரிரண்டா யங்கிளக்கின் ஞானம்' என்றவாற்றா னுந்திய ஞானமாகிய கேட்டலறிவு விளங்கித் தோன்றும். அது தோன்றவே, பதிமுதலிய முப்பொருளும் அவை பொன்றி நின்று வியாபக வியாப்பியங்களாமாறும் நிருவிகற்பமாயத் தோன்றுமென்பதாம்.

அருளானென்புழி ஆன் உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது "தாங்குநகையா ளோடுங்குகனடையன்" என்றாற்போல.

ஈண்டு அருளென்றது ஏற்புழிக்கோடலாற் கேட்பித்தலையுணர்த்திற்று.

ஆசிரியன் நூற்பொருளுரைக்குமவழி ஆசிரியனுணர்வே மாணாக்கன்மாட்டுச் சென்று பற்றுவதுபோலுமென்னு மாசங்கை யறுத்தற்பொருட்டுத் தோன்றத்தோன்றுமென்றார்.

உவமை கூறியதுமது.

சடத்துக்கணிச் சித்துக்குச் சங்கிரமங் கூடாதென்பது சிவாகமநூற்றுணிபென்க.

அணுவோரனையராம்படி நேரியராகலால் உயிர்க்குயிரா யும், அண்டமோரனையவாம்படி பரியராதலால் எங்குநிறை யும் பெறப்படுமென்பார், 'நேரியனாய்ப்பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு நின்றநிலை' என்றார்.

முன்னிகழ்ந் தென்பதனை யாண்டுக் கூட்டுக.

முன்னிகழ்ந் தோற்றமாவது சவிகற்பத்துக்கு முன்னுக நிகழும் நிருவிகற்பத் தோற்றம்.

இதனானே கேட்டலாமாறும் அதன்கணிகழுமுறைமையும் கூறப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———

அருவமாய் வாங்மனாதீத கோசரனாய் நின்ற சிவன் உரு வமாய் வந்து இரக்ஷிக்கத் தெப்படியென்ற பாடாணவாதியை நோக்கி யருளிச்செய்கிறார்.

சூரியகாந்தக் கல்லினிடத்தே செய்யசுடர் தோன்றியிடச் சோதிதோன்றுமாபோல - சூரியகாந்தமென்கிற கல்லினிடத்திலே சிவந்த வாதித்தர் வந்து பிரவேசிக்க வரூபமாய்நின்ற வக்கினி உரூபமாய்த் தோன்றுகிற முறைமைபோல,—ஆரியனுமா சானவந்தருளாற்றோன்ற வடிஞான மான்மாவிற்றோன்றும்.

சுத்தனு யருவமாய்நின்ற சிவன் ஆன்மாக்கள்மேலே வைத்த காருண்ணியத்தினாலே தானேதானே ஆசாரியமூர்த்தியாக வந்து தோன்றப் பெத்தத்தன்மையி லிவனை யுபகரித்துக்கொண்டு நிற்கச்செய்கேயுந் தோன்றாமல்நின்ற சிவஞானந் தன்னிடத்திலே பிரகாசிக்கும்—தோன்றத் தரிபனுஞ் சிவந்தோன்றும்- அந்த ஞானம் பிரகாசிக்கவே இத்தனைகாலமுந் தோன்றாமல் நின்ற சிவதரிசனமுமுண்டாம்,—தானுந்தோன்றும் - ஆன்ம தரிசனமுமுண்டாம்,—சொல்லும்மெல்லாந் தன்னுள்ளேதோன்றும் - பழயதாய்வருகிற விசுவாசமெல்லாம் அசத்தியமென்கிற முறைமையுந் தன்னிடத்திலே தரிசிக்கலாம் இவையொழிந்து மகத்ஞானத்தாலே,—நேரியனுய் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு நின்ற நிலையெல்லா முன் னிகழ்ந்துதோன்றும்- அந்தச் சிவன் அனுவுக்கனுவாய் மகத்துக்கு மகத்தாய் சர்வான்மாக்களுக்கும் பிராணனுய எவ்விடத்தும் பரிபூரணனு யசைவற நின்ற நிலைமையெல்லாஞ் சந்தேகமற விளங்காநிற்கும்

ஆரியனுமாசானவந் தருளாற்றோன்றென்றது பாடா ணவாதி

ஆன்மாக்களிலே விசேஷவான்கள் குருவா யிவனை இரக்ஷிக்கும் தொழிந்த சிவன் வாங் மனுதீதனகையால் குருமூர்த்தி யாகாதென்னச் சிவனே குருவா யிரக்ஷிப்ப னென்றதற்குப் பிரமாணம், சிவஞானபோதம் - அ - சூ, டு-வெ, இல்லாமுலைப்பாலுங் கண்ணீருமேந்திழைபால், நல்லாயுளதாமல் நீர் நிழல்போ—லில்லா, வருவாகிநின்றானை யாரறிவாரதானே, யுருவாகித் தோன்றானே லுற்று" என்னுமதனாற் கண்டுகொள்க.

இங்ஙனஞ் சொல்லியது அருவமாகிநின்ற சிவன ஆன்மாக்கண்மேல் வைத்த கிருபையாலே யாசாரியமூர்த்தியாக வந்து தோன்ற இவனிடத்திலே யநாதியேயப்பிரகாசமாய்நின்ற சிவ

ஞானம் பிரகாசிக்குமென்றும் அந்த ஞானத்தினாலே சிவதரிசனம் ஆன்மதரிசனம் பிரபஞ்சமாகிய பாசதரிசனம் என்னும் மூன்று தரிசனப்படுமென்றும், இவை யொழிந்து மந்தச சிவன் சட்சித்துக்க ளிரண்டினும் பரிபூரணனாய்நின்ற முன்றமையும் இவனுக்கு விளங்காநிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—o—

தோன்றியிடச் செய்யச்சுடர் - தனது கிரணத்தோடுந் தோன்றுநாயிற்றின் சந்நிதிமாத்திரையானே,—சூரியகாந்தக் கல்லினிடத்தே சோதிதோன்றுமாபோல - சூரியகாந்தக் கல்லின்கண் நெருப்புவிளங்கித் தோன்றுமாறுபோல,—அருளாணவத்தாரியனுமாசானருளன்ற-கேட்பித்தலோடுந்தோன்றுமாசிரியன் சந்நிதிமாத்திரையானே,—ஆன்மாவினிடை ஞானந்தோன்றும்-மாணாக்கனமாட்டுமேலோரிரண்டாங்கிளக்கின ஞானமென்னுவற்றுண் முந்திய ஞானமாகிய கேட்டலறிவு விளங்கித்தோன்றும் —தோன்றத்துரியனுக்கு சிவந்தோன்றும் தானுந்தோன்றுந் தொல்லுலகமெல்லாந் தனுள்ளே தோன்றும் - அதுதோன்றலே மூன்றலவனாகிய பதியும் ஆன்மாக்களாகிய பசுவும் பழைய பிரவஞ்சமாகிய பாசமும் என்ற முப்பொருள்களுந் தன்னுள்ளே தோன்றும்,—தேரியனுப் பரியனுமாய - அணுவோரணுடமாம்படி தேரியனும் அண்டமோரணுவாம்படி பரியனுமாய் நிற்றலால்,—உயிர்களுயிராய்ப்பெங்கு நின்றநிலையெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும் - உயிர்க்குயி ராதலுமெங்குநிற்றலு மனைவையொன்றிலொன்று வியாபக வியாப்பியங்களாமாறு நிருவிகற்பமாயத் தோன்றும்.

இதனானே கேட்டலாமாறு மதனைக் கணிக்கு மறுபவமும் கூறப்பட்டன

---

## மறைஞானதேசிகர் உரை.



இவ்வாறடைந்த சிவன்முத்தித் தன்மை யுணர்த்துகின்றார்

மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்திநிபாதமே
வுற்று ஞானமலிந்தோங் தோர்குருவினருளால், புக்க
னுட்டித்தே நிட்டை புரிந்துள்ளோர்கள் பூதலத்தே பு
கழ்சிவன் முத்தராகித், தக்கபிரி யாப்பிரிய மின்றியோ
ட்டிற் றபனியத்திற் சமபுத்தி பண்ணிச்சங்கரனோ,
டொக்கவுரைத் திவனவரை யவரிவனை விடாதே யுடந்
தையாய்ச் சிவன்றோற்ற மொன்றுமே காண்பர். (௨௯)

| | |
|---|---|
| (இ-ள்) மிக்கதொரு பக்குவத்தின் மிகு சத்திநிபாதமேவுதலும் | ஆன்மாக்கட்கெங்கு மொக்க மலபரிபாக முண்டாயுள்ளவில் அப்பொழுதிற் சிவனி னொளிட்டத் துண்டாய மலத்தைக் கீழ்ப்படுத் திக் தீவிரதரமான சத்தியைப் பதித்துள்ள ளவிற் சம்சாரத்தில் வைராக்கியம் பிறந்து, |
| ஞானமலிந் தோர் குருவின ருளால் | ஒருஞானசாரியனை யதிட்டித்துக் கொண் டு சாதிகாரை யென்னுந் தீக்கையைப் பெற் று, |
| புக்கனுட்டித் தே நிட்டைபுரிந் துள்ளோர்கள் | அவனருளிச்செய்த வாகமத்தின்வழி யா ராய்ந்து வைகல்யமற வனுட்டித்த பலத்தா லே, கட்ட மானதுபோல வசைவின்றி யி |

ருநத நிடடையைட பொருநதினவாகள எ
சசிறடபினை யுடையோ ரெனனில?

பூகாததேபுக — பூமியினகணணே யெல்லாராலும சிவனெ
சபூசிவல முதத — முததரெனறு கொணடாடபபட டிருபபா
ராகி — கா, அவாகள பூகலததே சஞசரிககுமிடத
து

ஏகா பிரியாப — ஆனமாககளுககுத தகைமைப பாடடை
பிரியமினறி — யுடைய சுகதுககமு மிதருசககு வெனறுடவி
கறபமினறு இஃதிலலாமையால

ஒடடிறறபணி — எபபடி யோடடி னிடததில விருபபற
யததிற சடபுததி — ரா அதுபோலப பொனனி னிடததும விரு
பபனறி — பபறறு,

ச ங க ர ரோ — சிவனுடைய வியாபகத்துடனே தானும
டொககவுளைநது — வியாததரு,

அவனிவனை பி — சிவனு மானமாககளை விடாமல் ஆனமாக
வைவனை விடா — களு மததசிவனை விடாமற கலநதிருபபா
தே — கள இசகலபபு யாதெனில? அநாதியநத ச
மவாய ரெனபபெறும

உடஙக யாய — விசுவமெஙகுஞ சிவனவியாபிததி நிறகை
சசிவன ேறுறற — யா லஃதெலலாஞ சிவனுடைய சொரூப
மொனறுமே கா — மாகவே கணடிருபபாகள எ-று
ணபா

நிடடை புரிநதுளோா - எழுமாய, காணபா - பயனிலை.
ஏகார தேர்றம

இதறகுப பௌடகரம சிவசருமோத்தரம சுப்ர பேதத்
துமறிக (உக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

(மிக்கதொரு பக்குவத்தில் காண்பார்) ஏகபாதம் ஆணவமலம் மிகவும் பரிபாகமான காலத்தில் தீவிரசத்திநிபாதம்பற்றிய வொப்பற்ற ஆசாரியனுடைய கருணையினாலே சிவஞானம் பிரகாசித்து விஷயமுகத்தைவிட்டுச் சிவாபிமுகத்துக்குப் பொருந்தி நிட்டைகூடினபோ திந்தப்பூமியின் கண்ணிலே யெல்லாருமேத்தப்பட்ட ஜீவன்முத்தராகி யிச்சையுண்டாகத்தக்க பதார்த்தத்திலே பிரியமும் அல்லாத பதார்த்தத்திலே த்வேஷமு மில்லாமற் பொன்னையு மோட்டையும் சமமாகக் கண்டு சுகத்தைப் பண்ணுகிறவராகையால் சங்கரனென்று பெயருடைய சிவனுடனே பிரிவற்று, சிவன் ஜீவன்முத்தரைப் பிரியாமல் ஜீவன் முத்தர் சிவனைப்பிரியாம லோரிபல்பாயச் சிவானந்தோதய மொன்றையுமே யனுபவிப்பரென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

௯௦ - செய்யுளுரையுட் காண்க

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

பக்குவமுதிர்ச்சியா னலாகுசத்திநிபாத மேயப்பெற்றார்க்கு அக்கேட்டலறிவு மாத்திரமாதலின்றி முதிர்ந்த முறுக விளையும், அப்பொழுது தம்மாசாரியராதல் தம்மோ டொருசாலை மாணாக்கராய்த் தம்மின் மூத்தாருளொருவராதல் சிந்திப்பிக்கப்பெறு மந்நூற்பொருளின் கண்ணே கருத் தொருங்கி நுழை

ந்து முன்னொடுபின்னமல்லவர் வந்து திருட்டாந்த முதலியவற்றாற் சிந்தித்து நிட்டை கூடுதற்கண் வேட்கை மிக்குடையராகப் பெற்று, சிந்தித்தற் கருமமே மேற்கொண்டு மற்றொன்றினும் பற்றொன்றின்றிச் சீவன் முத்தரோடொத்துப் போதிவாகிய சிவமுஞ் சிற்றறிவாகிய தாமும் ஞாயிற்றின்றொளியுங் கண்ணொளியும் போலத் துவிகமாய் நிற்றலான், ஆண்டுத் தாமுணரா லறிடப் பெற்று சிவத்தோற்றமொன்றே காணப்பெற்று நிருவிகற்பஞ் சவிகற்பமென்னுமிரண்டிற்கு மிடைநிலத்தே நிற்பரென்பதாம்.

மிக்கதொருபக்குவத்தின் யிருசத்திநிபாதம் பெற்றுஞானம் விளங்கத்தனவே, அஃதங்ஙன மேவாதவழி ஆக்கேட்டலறிவு முறுகுதலின்றி யஃதின்றி நிகழுமென்பதாயிற்று.

விளங்கவுழியென்பது விளங்கெனத் திரிந்தது.

ஓர்குருவென்பது பொதுப்படக் கூறினார், ஒருசாலை மாணாக்கராயத் தம்மின் மூத்தாரையுந் தழுவுதற்கு.

புரிதல் விரும்புதல்.

சீவன்முத்தராகி யென்புழி ஆக்கச்சொல் உவமைப்பொருள் குறித்து நின்றது. ‘‘ஆளவாரிலிமாடாவேறோ’’ என்றாற் போல.

உடங்கையாயுறைந்து காண்பரென்றது, மழைபெய்து குளநிறைந்ததென்றாற்போலக் காரணகாரியப்பொருட்டாய் நின்றது.

உம்மை சிறப்பு.

ஏகாரம் பிரிநிலை.

‘அடைபவர் சிவமேயாகு மதுவன்றித் தோன்றுமென்ற கடனதென’ என்பதும் இந்நிலையெனக் கொள்க.

இங்ஙனே சிந்திக்கலாமாறு மதனகணிகழு மனுபவமுங் கூறப்பட்டன

## நிரம்பவழகியருரை வருமாறு

இப்படி முன்சொல்லப்பட்ட சிவதரிசனம் ஆன்மாக்களுக்குண்டாமபடி யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

மிக்கதொரு பக்குவத்தின் - இருவினையொப்பு வந்த ஆன்மாக்களுக்குச் சிவனைப் பெறவேணுமென்று மிகுந்ததொரு வாஞ்சை யெழுந்திருந்த வகையாகத்து,—மிகு சத்திநிபாத மேவுதலால் - தீவிரம் தீவிரதரம் என்னும் மிகுந்த சத்திநிபாதம் பொருந்துதலால்,—ஞானம் விளைந்து - அந்தச் சத்திநிபாதத்தாலே இவனிடத்திலே ஞானம் பிரகாசித்து,—ஓர் குருவினருளாற்புக்கு உணர்ந்து நிட்டைபுரிந்தனோர்கள் - இவனுக்குப் பிராணனுப்போல் பிரகாசித்த அந்த ஞானந்தானே ஒப்பற்ற வாசாரியராக எழுந்தருளிவந்து இரக்ஷித்து அவனருளிச்செய்த முறைமையிலே யின்று நிட்டைகூடினவர்கள்,—பூதலத்தே புகழ்சீவன் முத்தராகி - பூமியிலே சொல்லப்பட்ட ஜீவன்முத்தராயிருப்பார்கள் இவர்களுடைய விலக்ஷணம் எப்படி யெனில்?—தக்கசரியாய பிரிவின்றி - சுகதுக்கங்களைப் புசிக்குமிடத்துத் தக்க அம்முறைமையான விகாரங்களுமில்லையாய்,—ஓட்டிற்றமனியத்திற் சமபுத்தியணி - மட்குடமுடைந்த ஓடும் பொற்குடமுடைந்த வோடும் இரண்டும் பிருதிவியென்று இரண்டையு மொக்கக் கண்டு இந்தப் பிரபஞ்ச வியாபாரத்தைவிட்டு நீங்கி,—சராசரமொக்கவுரைந்து - பரமேசுவரனுடனே இரண்டறக் கூடிப்பொருந்தி,—இவனவரை யவரிவனை விடாதே -

தன் வேட்கை மிக்குடையராகப் பெறுரா,—பூதலத்திற் றக்க பிரிபாப பிரிய மின்றி - இவ்வுலகின்கண் விருப்பு வெறுப்பின்றிச் சிந்தித்தற் கருமமே மேற்கொண்டு,—ஓட்டிற் றமணிபத்திற் சமபுத்திபண்ணி - ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவராய் மற்றொன்றிற் பற்றொன் றின்றி,—புகழ் சீவன் முத்தராகி - புகழ்த்தக்க ஜீவன்முத்தரோ டொத்து,—சங்கரனோ டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே யுடைநதைபாய - பேரறிவாகிய சிவமுஞ் சிற்றறிவாகிய தாமும் ஞாயிற்றொளியுங் கண்ணொளியும் போலத் தவிசமாய நிற்றலால்,—சிவன்றற மொன்றுமே காண்பர் - ஆண்டுந் தாமுள்ளதாக வறியாப பெருஞ் சிவன்றன்றற மொன்றே காணப்பெற்று நிருவிகற்பஞ் சவிகற்ப மென்னு மிரண்டிற்கு மிடைநிலத்தே நிற்பரெனப தாம்.

இதனானே சித்தித்த லாமாறு மதன்க ணிகழு மநுபவமுங் கூறப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை

இந்த ஜீவன்முத்தர் ஞேயத்தழுந்து முறை
யுணர்த்துகின்றார்

அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகிற, பிரியாத சிவன்றனே பிரிந்துதோன்றிய பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த்தோன்றி, நெறியாலே யிவையெல்லா மல்லவாகி நின்றென்று நேதானறிவெ னிராதாரனுமே (௧௦)

பிரமாதிகளுடைய ஐஸ்வரியங்களையு மவர்கள் வாழும்புவனங்களையு மந்திரபத முதலான பதங்கள் மந்திரபத வண்ண புவன தத்துவங் கலைகளென்னு மாறத்துவாவு சுத்த மாயை யசுத்த மாயையென்னு மிரண்டு மாயையினுடைய காரிய மாகையால் பயனற்ற பொய்யென்று வெறுத்துச் சிவபதத்தையே யிச்சித்து நினைத்திருக்க,—

மேலொடுகீழில்லான நிறைந்தவனே தோரா குணமில்லானெனை மையொருவர்க்கு நினைப்பரியானொன்றுமிலானோ படவந்துள்ளே பொறுப்பரிய பேரன்பை யருளியதனுவழியே பெருகுமிலாபபோகத்தைப் புரிந்தே புகுந்திடுவன் - முடியுமடியுங் காணப்பரியான இன்னதொரு குணவானென்ன வொருத்தரா லிச்சயிக்கப்போகாதவன் தன்னுடைய ஸ்வரூபத்தை இவ்வாறென்ன றறிவகற்ற கரியவன் தேகேந்திரியாதி கரணங்க ளொன்றுமில்லாதவன் சந்நிதானம்பண்ணி யானமாவினிடத்திலே தரித்தற்கரிதாகிய சிவராகத்தைவிளைத்துச் சிவராகம வழியாகப் பூமிமுதல் சத்தியலோக பரியந்தத்தில மறுவியானந்தமுதல பிரமாநந்த முடிவான யானந்தங்க ளெல்லாருசி இன்றி விளங்குஞ் சிவானந்தத்தை விளைத்த தானமாவினிடத்திலே வேறறக் கலந்திடுவனென்றி தன்பொருள்.

——

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——o——

அப்படித் தியானம் பண்ணிச் சிவசத்தி தாரகமாய் நின்று செய்வ தரைக்கின்றார்.

நெறியறுவகையும - ஆறத்துவாவும்;—வெறும் பொய்யென - அசத்தியம்போற் காணுங் கண்டிதமாக;—புகுந்தே - வின

ங்கி,—போகத்தை - சிவத்துவ விளக்கமாகுஞ் சிவானந்தப் பெ யாச சிவபோகத்தை

மறைய வெளிப்பொருள

---

## சிவஞானயோகியருணா வருமாறு.

—o—

குருவினருளா லறிவதொரு குறிப்பினக ணுணாந்து நின்று கொண்டு, காலாக்கினி புவனமுத லநாசிருத புவன மீறுயுள்ள எவ்வகைப் பட்ட புவனமும் இதற்குமுன் னனுபவித்துக் கழித்தமையிற் கானற் சோறெனக்கண் டருவருத்து விட்டு, அறுவகை யத்துவா வுட்பட்ட மூவகைப் பிரபஞ்சமுங் காரணரூபத்திற் சித்தங் காணப் படாமையாற் பித்திகைவடிவம் காணப்பார்க்குக் காணப்படாதா யதன்கண் மறைந்த சித்திர வடிவம் போல முழுப்பொய்யெனக் கண்டு, அவ்வாறு கண்ட காட்சி சலியா திருக்கப் பெறின், அப்பிரபஞ்சத்திற்கு விலக்கணமான ஞான சொரூபம் ஆணவடினிறு விளங்கித் தோன்றும் தோன்றவே, வறியார்க்கு நிதி வாய்த்தாற்போல அதனைக்கட பெருங்காதல் மீதூரும் அது மீதூறவே "இன்பி லினிதென்ற லின்றுண்டே லின்றுண்டா - மன்பினிலேயது" அகலான அவ்வன்பின் வழியே பேரின்ப மயமாய்ப் புந்து உயிரின்கண் விளங்கித் தோன்றும் அத்ஞானத்திற்கு முதலாகிய ஞேயமென்பதாம்

அட்டகுண மெட்டுச் சித்தி கோகனத் தென்றது பைசாச பத்தி னட்டமா சித்தியை நோக்கி எண்மடங் கேற்றமாகிய வட்ட சித்தியுடைய பிரமபதமென வதன்பெருமை கூறிய வாறு

**கோகனதன் ஆகுபெயர்.**

ஒற்று மிகாமை வடநூன்முடிபு.

வாழ்வு குலவுபதம் திப்பிய மகளிரும் அதிவிசித்திரமாகிய மாடமும் மாளிகையு முதலிய போக்கியப் பொருட் சிறப்புக ளானமைந்து பெற்ற பக்கம்.

ஒன்றனைப் பற்றிக் குணங் குணியாக வுபசரிக்கப் பட்டது.

இதனானே ஆணசரு முலகமெல்லா மலனைத்தச் சோரமென் றறிந்தகலுமாறும் அங்ஙிலேயே யாமாறும் வகுத்தனாத்தி இரண்டாங் கூறு வலியுறுத்தப் பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இப்படி ஜீவபரமென் றிரண்டிலுமெல்லாஞ் சிவமே மென்ற பரிணாமவாதியை நோக்கிச் சிவனின்மலனென்றும் ஆன்மா மலசம்பந்தியா யிருப்பனென்று மது நீங்கின்றொழிந்து சிவ தரிசன முண்டாகாதென்றும் மேலருளிச் செய்கிறார்.

குறித்தடியிலின்று - ஆசாரிய னறிவித்தபடியே யறிந்து பரமேஸ்வரனுடைய திருவடியிலே தற்போதஞ் ஜீவியாமலந்த ஞானமேயாய் நின்று,—அட்டகுணமெட்சித்தி-எட்குணங்களாகச் சொல்லப்பட்ட எட்டுக்குணங்களும் நுண்மை பெருமை அறநொய்தாயிருத்தல் மிகவுங் கனத்திருத்தல் விண்மிசையே கல பாரமேப்போதல் வேண்டின வுருவைக் கொள்ளுதல் எங்குந்தானேயாய் நிறைதல் என்னும் எட்டுச் சித்தியும்,—கோகங்க ளமுதல்வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து-பிரமாவினுடைய ஐஸ்வரிய முதலாகவுள்ள ஐஸ்வரியங்களையும் கொண்டாடப் பட்ட பதங்களையும் உபேட்சித்து,—நெறியறுவகையும் மேலொடு கீழடங்க-கீழும் மேலும் எங்கும் நிறைந்து நிற்கத்தக்க சடத்துவாக்களின் வழிபடங்களும்,—வெறும்பொய்யென நீக்கி

ருக்க - இங்ஙனஞ் சொல்லப்பட்டவை யெல்லாம் சுத்த வசத்தியமென்று இவையித்தனை சிவஞானத்தாலே யறிந்து அந்தஞானமாய் நிற்கவே,—மேலொடு கீழில்லான - முதல் நடு விறுதி மூன்று மில்லாதவனுமாய்,—நிறுத்தவதோர் குணமில்லான - சொல்லப்பட்டதொரு குணங்களுமில்லாத நிர்க்குணனுமாய்,—தன்னையொருவர்க்கும் நினைப்பரியான - தன்னுண்மையைத் தானறிவிக்க வறியுமதொழிந்து ஒருவராலு மறியப் படாதவனுமாய்,—ஒன்றுமில்லான - சர்வமுந் தானாய் நிறைகச்செய்தே ஒன்றுந் தானல்லனுமாய் நிற்கிறவன்,—நேர்பட வந்துள்ளே பொறுப்பரிய பேரன்பையருளி - வேதத்திற் சொன்னமலப்பிரகாசமாய் நின்றமுதல் தானே முத்தியிற் பிரகாசித்து இவனுக்குள்ளே பொறுத்தற்கரிய பெருத்த பத்தியையு முண்டாக்கி அதன்வழியே புகுந்திடுவன்,—எஞ்சுமிலாப் போகத்தைப் புரிந்தே - அந்தப் பெரிய பத்திவழியாகத் தானுஞ் சென்றுகூடி எவ்விடத்திலு மில்லாத சிவபோகத்தைக் கொடாநிற்பன்.

இதற்குப் பிரமாணம், சங்கற்பநிராகரணம், "சத்தியுஞ் சிவமுந் தாமேறுசேருமென - நித்திறனுணர்வுவந் தெய்துவதே வாக்கோ - தமக்கேயென்விற் றுமுணராவையு - மமைப்பரவு ணாதலு மவாச்சடையன்றே" என்றும், சிவஞானபோதம், கூ-சூ, ௩-வெ, "நிற்குணனாய்நின் மலனாய நித்தியானந்தனாயத், தற்பரமாய்நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ, லானாவறிவா யளவிறந்து சோனறே, வானோமுதலகளையின் வந்து" என்னுமதனாற் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஆணவ பாசமாகிய பிரபஞ்சத்தை யசத்தென்றறிந்து நீங்கிச் சத்தாகிய சிவம் பிரகாசிக்கு மென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

அடியிற் குறித்தநின்று - குருவினருளா லறிவதோர் குறியினைக் கண்ணுறைந்து நின்றுகொண்டு,—அட்டகுண மெட்டுச்சித்தி-பைசாசபதத்தி னட்டமாசித்தியை நோக்க வெண்மடங்கு மேற்றமாகிய வட்டசித்தியையுடைய,—கோகனகமுதல்-பிரமபத முதலியவற்றின,—வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து-திப்பியமகளிரு மதிவிசித்திர மாகிய மாடமு மாளிகையு முதலிய போக்கியப்பொருட் சிறப்புக்களா னழகுபெற்ற பதமாகிய காலாக்கினி புவனமுத லநாசிருதபுவனமீறாகிய வெவ்வகைப்பட்ட புவனமும் இதற்குமுன் னனுபவித்துக் கழித்தமையிற் கான்றசோறெனக் கொண் டருவருத்துவிட்டு,—நெறியறுவகையு மேலொடு கீழுடங்கவெறும் பொய்யென நினைந்திருக்க,—அறுவகையத் தவாவுடபட்ட மூவகைப்பிரவஞ்சமுங் காரணரூபத்திற் சிறிதுங் காணப்படாமையான் பித்திகைவடிவங் காணப்பாக்குக் காணப்படாத யதனகத்தமைந்த சித்திரவடிவம்போல முழுப் பொய்யெனக் கண்டு அவ்வாறு கண்டகாட்சி சலியாதிருக்கப்பெறின,—மேலொடு கீழிலலான - மேலொடு கீழில்லானுகியும்,—நிறுத்தவதோர் குணமிலலான - குறித்தறிவதொரு குணமில்லானுகியும்,—தன்னையொருவர்க்கு நினைப்பரியான- தன்னையொருவர்க்கு முணர்தற்கரியானுகியும்,—ஒன்றுமிலான - ஒன்றுமிலனுகியும்,—உளதோவந்து தோடட - பிரவஞ்சத்திற்கிலக்கணமான ஞானசொருப மாண்டினிது விளங்கித்தோன்றும் தோன்றலே,—பொற்பப்பரிய பேரன்பையருளி-வறியார்க்கு நிதிவாய்த்தழிப்போலப் பெருங்களிப்பாக மீதூறும்,—அதுமீதூரவே, யதனவழியே, "இன்பினிமென்ற வின்றுண்டே வின்றுண்டா-மனபினில்லையெயது" ஆதலான அவ்வன்பினவழியே,— எங்குமிலா

ப் போகத்தைப் புரிந்தே - எவ்விடத்து மறிதற்கரிய பேரின்ப மயமாய்,—புகுந்திடுவன் - புகுந் தயிரிணக்கண் விளங்கித் தோன்று மந்தஞானத்திற்கு முதலாகிய ஞேயம்.

'இதனுனே யாசைதரு முலகமெலாம் அலகைத்தேரா மெனற்றிந் தசலுமாறு மந்நிலையேயாமாறும்' பகுத்துணர்த்த இரண்டாங் கூறு வலியுறுத்தப்பட்டது.

☞ ௯-ரு, ௨-ம், அதிகரண முடிந்தது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேன் மாயாவாதி ஜீவபரங்களை யொன்றெனச்ருதி
யிருக்க நீ யிரண்டாகக் கூறிய தென்னென்று
வினவ வுத்தர முணர்த்துகின்றார்.

கண்டவிவை யல்லே னென்றகன்று காணுங் கழி
பரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த, தொண்டினொ
டு முளத்தவன்றா னின்றகலப்பாலே சோகமெனப் பா
விக்கத் தோன்றுவன் வேறின்றி, விண்டகலு மலங்க
ளெலாங் கருடத்தியானத்தின் விடமொழியு மதுபோ
ல விமலத்தையுமடையும், பண்டைமறை களுமதுநா னா
னேனென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவத்தைக்
காணே (எ)

(இ-ள்) கண்டவி — ஆன்மாவானவ னிது விதுவென்று சுட்டி
வை யல்லே — யறியப்பட்டவைகளெல்லா மசத்தையு மிது
னென்ற — நானல்லவென் றதற்கு வேறாய்
கன்று

காணுகேழ்பர முநானலலே னெனக்கருதி

ஆன்மபோதத்துக்கெட்டாதிருக்கிற மேலான பரமசிவனும் நானல்லவென் றறிந்து. என்னவே, பாசத்துக்கும் பதிக்கும் வேறுபிருப்பதோ ரான்மா வுண்டென் றறிவிப்பதாயிற்று

கசிந்தசொண டிசெறுடு முளாத தவனெறு விநறக லப்பாலே

அந்தச் சிவன் றானுருகாநின்ற அடிமைத்திறத்துடன் கூடிநின்ற வான்மா விட்டத்தி னெள்ளுக்கு ளெண்ணெய்போலவும் பூவிடத்துக் கந்தமானது பொருந்தி நின்றாற்போலவு முள்ளும் புறம்புங் கலந்துநின்ற வைக்கியத்தினாலே

சோகமெனப் பாவிக்கத் தோன்றுவனவே றனறி

நானந்தச் சிவனாகா நின்றேனென் றவனை நினைந்து பாவிக்க அப்பொழுது அவ்விடத்தில் அந்நியமாய் நின்ற சிவன் றானே பிரகாசியா நிற்பன்

அசோகம் பாவனை ஆன்மாப் பரமான்மாவைக் கூடினவிடத்துத் தானென்பதொரு முதலின்றி யவனுடனே யிலயித்தொன்றாய்ப் போமென்னும் வேதாந்தி மதம்போல வன்று இங்ஙனஞ் சிவம் பிரகாசிக்கவே!

விடாடகலும லங்களெலாம

அநாதியாக விவ்விடத்திற் செறிந்து நீங்காதிருக்கிற மலங்களெல்லாம் விட்டுப்போகாநிற்கும். அஃதென்போல வெனனில்?

கருடத்தியானத்தின் விடமொழியுமதுபோல

பாவனையிற் பட்ட கருடனாற் பாம்பொழியும் பாவனையே செய்யும் பலம் என்பதனுலிங்கப் பாவனை பண்ணவே மலமானவைகணீங்குமென வறிக.

விமலத்தையு மடையும — ஆகலா லிந்த ஞானமாத்திரத்தினும அஃதாவது, நின்மலத்துவத்தைய பொருந்தா நிற்கும்

பண்டைமறைகளுமது நானே னென்று பாவிக்கச் சொல்லுவதிப்பாவகத்தைக்காணே — இந்தப் பாவனையைக்காண பழையதாகவிருக்கிற வேதங்கள் சோகம் பாவிக்கச் சொல்லுகிறது நீயதற்குப் பொருள்கோளறியாம லவிபரீதமாகக்கொண்டாய்காண் ஆதலா லது கூடாது எ-று

ஸ - அவன், அஹம் - நான் இங்ஙனஞ் சோகமென்று இது வடமொழி இது செய்யுட்கண்ணும் வரப்பெறும்

"செந்தமிழ்ச் செய்யுட் டொடர்ந்தணைந்தருஞ் செய்யுட்கண் வந்தவடமொழியை மாற்றுதே—சந்தம், வழுவாமற் கொண்டியற்று மாண்பினாகக் கண்டோம், தழுவாம லிற்குந் தமிழ்" எனவறிக

வழித்தலைப்படுவான் சுழல்கின்றே னுன்னையேபோ லென்னைப் பாவிக்கமாட்டேன் எனவறிக.

இதற்கு வாதுளம் சித்தாந்த சமபோதியிலு மறிக (எ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் வேதத்திலே சோகமென்றதனுக் கொன்றென்றான் தன்று பிரிவற்ற வருபவாதிசயத்தினாலே யது நானென்றதே யென்று முறையையும் பேதமாகச் சிவனுக்குச் சமனாயிருக்குமென்னு மதமதிகளை நிராகரித்துச் சிவஜீவர்களுக்குத் தாதாத்மியமுங் கூறுகின்றது.

கண்டவிவை யல்லே னென்றகன்று - ஆன்மபோதத்தி னாற் பிரித் தறியப்பட்டதெல்லா மென்னுடைய ஸ்வரூபமல்ல வென்று நீங்கி,—காணுகழிபரமு நானல்லேனெனக்கருதி- ஆன்மபோதத்தினாலே காணப்படாமல் விரவாதிருக்கிற சிவனும் நானல்லவென்று புத்திபண்ணி,—கண்ட வொண்டொருமுளத்தவன்கழ லிணைகலப்பாலே சோகமெனப் பாவிக்க த்தோன்றுவன்வேறன்றி விடைகளு மலங்களெல்லாம் விமல தையையடையக் கருடத்தியானத்தால் விடமொழியுமதுபோல-கண்ட சம்பந்தத்தினுடனே ஆன்மாவிலே ஜீவன் வேறின்மை யாகி நின்றமையா லந்தச் சிவனுமென்று பாவனைபண்ண வான்மாவிலே வேறறப் பிரகாசிப்பன் சிவபாவனைபண்ணவே யாணவாதி பாசங்களெல்லா நீங்கிப்போ யான்மா நின்மலத்துவத்தைப் பொருந்துவன். அதெனப்போல வெனனில்? கருடபாவனையினாலே விடநீங்குமாப்போல,—பண்டைமறைகளு மதுநானென்றுபாவிக்கச்சொல்லுவ திப்பாவகத்தைக்காணே - பழயதாகிய வேதங்களு மதுநானென்று பாவனைபண்ணச் சொன்னது நாம்பொழுது சொன்ன பாவனையைக் காணென்றுதிதன்பொருள்

ஏகார மீற்றசை

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

சிவபோக நிமித்தமாகுங் குலைந்த சிவசமாதிகூடும் பொருட்டுப் பிரபஞ்சம் பொய்யென நினைந்திருத்தன மாத்திரம் போதுமோ வென்னச் சித்தாந்த சிவோகம்பாவனைத் திலக வேதாந்த சோகம் பாவனை வேண்டுமென்று விளம்புகின்றார்.

கண்டவிவை-ஏகாதிப் பிரபஞ்சத் தாக்கி வாச்சியப்பொருளாய் மயங்கி யிருக்குங் குருலிங்க சங்கமாதிகள்,—

அல்லேனென - நித்திய நிலையங் குலையுங் கண்டிக் வடிவத்தட்டத் லக்ஷணமுற்ற வயமிக்ம பதவாச்சியப் பொருளாய்ச் சாலம்ப சிவயோக விஷயமாய்த் தட்டத்லக்ஷண சிவபதவாச்சியப்பொருட் சிவக்குறி பொறிக்கு மிடமாதலானும் வாச்சியப் பொருளை விட்டிலக்கியப் பொருட் சுவரூப லக்ஷண சிற்பரமிணைந் தெழுந்தது தொடுத் துரைத்தாலுஞ் சிவோயஞ் சிவமித்தென்று பட்டாச்சைப்பொருட் சுவரூப லக்ஷண சிவப்பொருளாய்ப் பாவிக்கப்பட்டுச் சிவோகமென்று தன்மைப் பொருட் சிவப்பொருளாய்த் தியாவிக்கக் கிட்டித் தட்டாதாதலானும் அகம்பத்தில் வாச்சியப்பொருட்டட்டத்லக்ஷணத் தன்மைப் பொருட் பூரணமாந் மந்திரானமாந்த பஞ்சாணமக் குறித்தாண்டிச் சிட்டவிலக்கியப் பொருட் சுவரூப லக்ஷணத் தன்மைப் பொருட் சின்மாத்தி ரானமாவாய்ச் சிவபதத்தில் வாச்சியப் பொருட்டட்டத்த லக்ஷணத் தன்மைப் பொருட் பிரமாதி சாங்க சதாசிவாந்த பஞ்சேசுவரக் குறித்தாண்டிச் சிட்ட விலக்கியப் பொருட் சுவரூப லக்ஷணத் தன்மைப் பொருட் பரக்குறி பதித்துப் பின்னலம்பத்தில் வாச்சியப்பொருட் டட்டத்த லக்ஷணத் தன்மைப் பொருட் டியான சமாதி யுபாதி யுற்ற சின்மாத்தி ரானமாகக் குறி பரக்குறி யிருகுறித் தாண்டிச் சிஷ்ட விலக்கியப் பொருட் சுவரூப லக்ஷணத் தன்மைப் பொருட் சிவக்குறி பொறிக்கப் பாத்திரவானுகையால்,—

கானனென்றென றகன்று பஞ்சவித சாலம்ப சிவயோக மார்க்கத் தொரு மார்க்கத்தால் முப்பத வாச்சியப்பொருள் கடந்தனமனையுற்று,—

காணுக கழிபரமும்-பரோக்ஷ வகாதிமுத்த பரசிவமும்,

நானல்லேன் படாக்கைப் பொருளாதலாற் றனைமைப்பொருளா கிய,—

நானல்லேன் எனக் கருதி - சிவோயகஞ் சிவமிதமென்று சிந்திக்கலாம், சிவோகமென்று சிந்திக்கப்படாது ஆரோபிதமா யப்படியுஞ் சிந்திக்கலாமென்றுஞ் சிந்தித்து,—

கசிந்த உள்ளத்து - ஆன்மாவில்,—

தொண்டினெறுமெ - சமயதீட்சையிற் சைவர் செய்தலைகை யாய்ப் பாவிக்குமியற்கையாய் வைஷ்ணவரெப்போதும் பாவி க்கும் தாசோகம் பாவனு வாசனையோடு,—

அவனருண் - சிவனருண்,—

நின்றகவப்பாலே - நிலைபெற்ற சாயுகரியத்தாலே சிவோக மென்று நிரூபித்துச் சிந்திக்கப்படான். ஏவப்படுந் தாசத் தன்மையுமேவுஞ் சிவத்தன்மையும் ஒன்றாதற் மலடியென்பது போற்பகைத் தேசிப்விந்துப் பாவிக்கப் படாதாகையால் ஆகி லெப்படி ?—

சோகமெனப் பாவிக்க - இரண்டுகெட்ட வைஷ்ணவ தா சோகம் பாவனு வாசனை துடைத்துச் சித்தாந்தச் சிறப்புச் சி வோகம் பாவனைத் தீபக வேதாந்தப் பொதுச்சோகம் பாவனை யியக்கத் தனைத்துச் சோகமென்று பண்ண,—

தோன்றுவன் வேறின்றி - தாசோகம் பாவனு வாசனை த ள்ளியகத்த தஸமியனைத்துச் சித்தாந்தச் சிறப்புச் சிவோகம் பாவனை பண்ணப் பண்ணிக் குறிபொப்பித்து வேறாகக் குறியி ன்றி சீவன் முத்தியிற் சமாதி முற்றிச் சாட்சாத் கரிக்கப்படுவ ன். நீரிடபோது செப்பியது செய்யமன்று. ஸ்வரூப சிவபாவனை சத்தியமானதுபோ லாரோபித ஸ்வரூப சிவபாவனை சத்தியம ன்றசத்தியமே' அசத்திய மெப்படிப் பலங்கொடுக்கும்? சத்தி யமட்டீ சாற்றியது. முத்திசெய் சிவாவிர்ப்பாவ பாத்திர பாவ

னையாகலாற் சத்திய சிவ பாவனையின்றுபோல அசத்திய சிவபா வனையின்றும்,—

கருடத் தியானத்தால் விடமொழியு மதுபோல மலங்க ளெல்லாம் விண்டகலும் -பிரியாது பிரிந்து நீங்காது நீங்கும்,—

விமலத்தையு மடையும் - சிவத்துவாபி வியத்தியும் ஸதிதஸ் தாபிகமாம்

விண்டகலு மென்பதனால் முத்திபலமும், விமலத்தையு மென்பதனால் வியத்திபலமு மவிளம்பப்பட்டன

தொண்டிற்றென்பதனை நின்றகலப்பாலென்பதோடு வி சேஷியாமற் சிலா பாவிக்க வென்பதோடு படுத்தி விசேஷித்தா ர்கள் சிவோகத்தாசனென்று சிந்திப்பார்களாய மனமாகா வந் தியை யென்றும் வழக்குரைப் பார்கள்,—

பண்டை மறைகளும் -

பிரவாகா நாதிச் சுருதிகளும்

உமமையின்றச் சில விட்டத் சிவாகமங்களும்,—

அது நானேனென்று பாவிக்கச் சொல்லுவது-இத் தமமென்று தியானிக்கச் செப்புவது,—

இப்பாவகத்தைக் காணே - இச் சிவோகம பாவனைத் தீ பக சோகமபாவனையைத் தானே,—

சோகமென்பது பரோக்ஷாபரோக்ஷப்பகைப்பொருள், ஐ க்கியப் பிராந்தி யாகையால

"தாஸோஹ மிதிஸமமோஹம ஸோஹமேவ பரி-ரம
அஹமேவ பரிபராந்தி தஸமாத்ரீணி பரிதயஜேத "

என்று சில சிவாகமத்திற் றளளி யிருத்தலால அப்படிச் சி வோகம பாவனையே பகையாமற் பாவிக்கப் படுமென்று படித் திருந்தாலுஞ் சோயம தேவதத்த னென்பதுபோறச் சுருதிசொ

றசித்த விவேகத்தினாற் சிவோகம் பாவனைத் திடமாகச் சேர மென்று மொருவழி சொல்லலாமென்று தாற்பரியம்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

உடம்பே நானென்றும் அது நீங்கியவழிப் பிரமம் நானென்றும் இங்ஙனம் விபரீதமாக வுணர்கின்றன உயிராவது சுட்டுணர்வுபட்ட வப்பாசமுமன்று சுட்டுணர்விறந்து நின்றவப் பதிப்பொருளுமன்று இரண்டற்கும் வேறென்கக் கண்டு, வேறாகிய பாசத்தை மேற்கூறிய வாற்றாலொருவி, ஏனைப் பதிப்பொருள் வேறாயினும் வியாப்பிய வியாபக பாவகத்தாற் கண்ணொளியும் ஞாயிற்றொளியும் போல வேற்றுமை சிறிதுந் தோன்றாதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய தன்னு தொண்டினையும் இறைவன் கலப்பினையும் நோக்கி நின்று, கருடோகம் பாவனை யொருவன் செய்யப் பெறுமாயின், அக்கருடனம்மாந்திரிகனுக்கு வேறாதலின்றி யத்துவிதமாயத் தோன்றி விடத்தை நீக்கத் தெளிவு செய்யுமாறுபோல, சிவனு மிவனில் வேறாதலின்றி அத்துவிதமாயத் தோன்றி மலங்களை நீக்கிச் சுத்தனாக்கச் செய்வன் வேதாந்த மகாவாக்கியத் திறக்கும் இதுவே பொருளாகக் கொள்க வென்பதாம்

இப்பாவனையின்றி யமையாச் சிறப்பிற்றென்ப துணர்த்துவார், பயனுமுடன் கூறினார்

பரமென்ற வும்மை இறந்தது தழீஇது.

பரம் அவனென்னாது திணைமயங்கிற்று

தொண்டாவது சாந்தத்தனவண்ணமாமியல் பையுடைய வுயிர் கழிபரமு நானல்லேனெனக் கருதியவழி முன்போல முனைத்தலின்றி ஒக்குணர்வி லுள்ளடங்கி அதன் வழித்தாய் நிற்றல்.

முனைத்து நின்று செய்யும் உலகத் தொண்டினைக்கூறற்குக் கசிந்த தொண்டென விசேடித்தார்.

வேறாய வழியுஞ் சோகமென்ப பாவித்தற் குறிய வினையு இருவர் மாட்டு முண்மை விளக்குவார், கசிந்த தொண்டினொடு முளத்தவன்றன்னிற் கலப்பாலே யென்றார்.

கருடபாவனையை யெடுத்துக் காட்டியதூஉம் அதனைக் கலைய நீக்குதற் பொருட்டென்பது.

எனவே கருடோகமென்ப பாவிக்கு மத்துவித பாவனைக்கு மந்திரத்தின் றாற்றலும் அவ்வாற்றல்வழி நின்று பாவிக்கும் மாந்திரிகன் றாற்றலும் ஒருதலையான் வேண்டப்பட்டு ஆண்டைக்கு நிலைபெறுமாறு போல, சிவோக மென்ப பாவித்து நிற்கு மத்துவித நிலைக்கு இறைவனது கலப்பும் இவனது தொண்டும் ஒருதலையான் வேண்டப்படுமென்பது போந்தமையால், அங்ஙனந் தொண்டு செய்தற் குரிய ஆன்மாவினது ஞானக்கிரியைகளும் கலத்தற்குரிய இறைவன் ஞானக்கிரியைகளும் ஆண்டுக் கேடின்றி நிலைபெறுமென்பதூஉம் அருத்தியா னுணர்ந்து கொள்க.

"உன்றனக் குயிரண் டென்குயிரண்டுங் குறுகிடா வண்ண மின்பமா யென்பாற் கூத்தையுங் கொண்ட தெப்படி" என வியந்து கூறியதூஉம் இவ்வுண்மை நோக்கி யென்க.

இப்பெற்றித் தாகிய சுத்தாத்துவித வுண்மை யுணரமாட்டாதார், ஒருபொருள் மற்றொரு பொருளாதல் யாண்டு மின்மையின் அது நானே னென்னு மொருமையாதலைப் பொருள் படுமாறு யாங்ஙனமென் றாசங்கித்தார்க்கு, ஒன்றுகெட்டு ஒன்றெனக் கொண்டு பரிணாமங் கூறுவாரும், அது நானென்னு மிருபெயரும் விட்டும் விடாத வாகுபெயரெனக் கொண்டு கேவலாத்துவிதங் கூறுவாரும், அவற்றுள் ஒன்றனை மாத்திர மாகு

பெயரெனக் கொண்டு விசிட்டாத்துவிதங் கூறுவாருமா யிடர்ப் படுவர்.

அங்ஙன மிடர்ப்படுமுரைப்பன வெல்லாம் பொருளல்ல வென்பார் 'பண்டை மறைகளு மதுநானே யென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே' என்றார்.

எனவே, வேதாந்த மகா வாக்கியமுஞ் சித்தாந்த மகாவாக்கியமும் பொருளா லொன்றென்பதூஉம் பெறப் பட்டது.

ஈண்டுக் கருடனென்றது கருடனுக் கதிதெய்வமாகிய மந்திர சொரூபத்தை யாகலின் அப்பாவனை செய்யாதற் கிழுக்கின்மை யுணர்க.

இதனானே திருவஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிப்பார்க்கு வேண்டப்படும் பாவனை கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

அது நானென்று சாஸ்திரஞ் சொல்லுகைச் செய்தே நீரிரண்டாகச் சொல்லுவானேனென்ற பரிஞ்ஞவாதியை நோக்கி மேலருளிச்செய்கின்றார்.

கண்டவிவை நானல்லேனென்றகன்று - தேகாதிப் பிரபஞ்சத்தை இது நானல்லவென்று நிட்டிப்பண்ணி அந்தப் பிரபஞ்சத்துக்குத் தான் வேறாய்த் தான் வேறென்றா நினைப்பு, அப்படியறிந்து நீங்கினதாலல்லவோ அங்கச் சிவனென்னின்?—காணாக் கழிபரமு நானல்லேனென்னக் கருதி - வாக்கு மனாதீதமாயிருக்கிற மேலான சிவமுமல்ல நானென்றறிந்து,—கசிந்த தொண்டினொடு மூலத்தவனருளின்றகலப்பாலே - பக்திபண்ணுகிற வடிமைத்திறத்துடனே பொருந்தின வான்மாவிலே யவனைக்கூடி நின்ற வயிக்கியத்தினால்,—சோகமெனப் பாவிக்கத் தோன்று

வனவேறின்றி - நானவனென்றே தியானித்து நிற்கப் பேதத்தி
ற் றோன்றுமல அப்பிரகாசமாய்நின்ற சிவன இப்பொழுது வே
றறநின்று பிரகாசியா நிற்பன,—விண்டகலு மலங்க ளெலா
ம - அவனப்படிப் பிரகாசிக்கவே அநாதியே பொருந்திநிற்கிற
மலங்களெல்லாம விட்டுநீங்காநிற்கும். அதெனபோல வெனனி
ல்—கருடத்தியானத்தில விடமொழிபு மதுபோல விமலனையு
மடையும-விஷந்தீண்டினவன் றனனைக் கருடனாகப் பாவிக்க
அந்தப் பாவகத்திலே அவனுக்குணடாகிய விஷந் தீர்ந்தாப்
போல இவனுமந்த ஜீவனென்று சோகம பாவஞ்செய்ய நின்மல
த்துவமும பொருந்தா நிறகும,—பணடைமறைகளு மதுநானெ
னே னென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக்காணே-
பழமைபாயவருகிற வேதங்களு ம தத்துவமசியென்கிற மகாவா
க்கியத்திலே அது நானேனென்று தியானிக்கச் சொல்லுவ
தும இந்தப் பாவனை தவனைக்காண

இதற்குப் பிரமாணம சிவஞானபோதம்-கூ-சூ, ரு-வெ,
"கணடனையணடன றெனவிட்டுச்கணடசத்தா, யணடனையா
னமாவி லுயந்துணரப—பணடைநந்த, வூனத்தைத் தானவிடு
மா றூத்தமனிலொணகருட, தியானத்திற் றீர்விடம்போற றூ
ன" எனனுமதுவு கணடுகொளக

இதனாற சொல்லியது, சிவன ஆனமாவிலே நின்ற கலப
பை யறிந்து தானவனுக்கடிமையாயச சோகம பாவஞ்செய்ய
வே தனக்குணடான பாச நீங்குமென்னு முறைமையு மறிவி
த்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(உடம்பே நானென்ற மதநீங்கியவழிப் பிரமநானென்று
மயங்கும் விபரீதமாக வுணாகின்ற வுயிராவது) கணடவிவைய

ல்லேனுன் - சுட்டுணர் வுட்பட்ட வப்பாசமுமன்று,—காணுஞ் சழிபரமு நானல்லேன் - சுட்டுணரா விறந்த வப்பதிப்பொருளு மன்று,—என்றுகண்டு-இரண்டிற்கும் வேறெனக்கண்டு வேறுஞ் யபாசத்தை மேற்கூறியவாறு மொருவி,—கருதிஅவனருளானந் தாக்கப்பாலே நின்ற,—ஏனைப்பதிப்பொருள் வேறாயினும் வியாப பியவியாபகத்தாற் கண்ணொளியு நாயிற்றொளியும்போலவேற றுமை யின்றித் தோன்றுமாறு ஒற்றித்து நிற்றற்குரிய,—கசி ந்தன்கொண்டொரு மெனக் கருது - தன்றுதொண்டினையு மிறை வனக்கலப்பினையு நோக்கி நின்று,—சோகமென்ப பாவிக்க - க ருடோகம் பாவனைபோல சிவோகம் பாவனை யொருவன் செய் யப்பெறுமாயின்,—கருடத்தியானத்தால் விடமொழியு மதுபோ ல-அக்கருடனாமமாகநிற்றற்குவேறுதலின்றி யத்துவிதமாயத் தோன்றி விடத்தை நீக்கித் தெளிவு செய்யுமாறுபோல,—வேறி ன்றித் தோன்றுவன் - சிவனு மிவனில்வேறுதலின்றி யத்துவித மாயத் தோன்றி,—மலங்களெல்லாம் விலக்கும் விமலத்தை யுமுடையும்-மலங்களை நீக்கிச் சுத்தனாக்ச் செய்வன,—பண்டை மறைகளுமது நானென்று பாவிக்கச் சொல்லுவது இப்பா வகத்தைக்கணே-வேதாந்த மகாவாக்கியத்திற்கு மிதுவேபொ ருளாகக் கொள்கவென்பதாம்.

இதனானே திருவஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிப்பாற்கு வேண்டப்படும் பாவனை கூறப்பட்டது

---

## மறைஞானதேசிகர் உரை.

இந்நிலை மயங்கினருக்கு மேலோ ருபாயங்கூடை
யுணர்த்துகின்றார்

அஞ்செழுத்தா லான்மாவை யரனுடையபரிசு ம ரனுருவு மஞ்செழுத்தா லமைந்தமையு மறிந்திட, டஞ

செழுத்தா லங்கந்நியாசம்பண்ணி யான்மாவி லஞ்செழுத்தா லிதயத்தர்ச்சித், தஞ்செழுத்தாற் குண்டலியின் னிலேயோமம்பண்ணி யனைவரியக்கோதண்ட மடைந்தருளினவ ழிநின, றஞ்செழுத்தைத் விதிப்படி யுச்சரிக்கமதியருக் கன்னையராமெம்பொற்றிருவொறு மாமாமாயிலரனே (அ)

(இ-ள்) அஞ்செழுத்தா லான்மாவைய ரனுடைய பரிசும — ஸ்ரீபஞ்சாக்கரத்தினாலே சிவமுஞ் சத்தியு முமநகிநின றனமாயை நபீயேயையுத்தமு ரைனமையு மறிந்து, என்னவே சிவஞானமா சகள பாசத்தைத் நீக்கி யனுக்கிரகஞ் செய்கையா லான்மாவைச் சிவனுடைமையென் றா.

“ஊனநடன மொருபா லொருபால - ஞானநடந் தானடுவே நாடு “சிவமுதலே யாமாறு சேருமேற்றீரும் - பவமிதுவே யோதுமபடி” என்றுமாபதி சிவாசாரியார்.

“சிவஞ்சத்தியான்மாத் திரோதந்திமாரஞ்-சிவமுதலோந்து ஞ்சிந்தைசெய” என்று ரொமதுதுராவா.

“யாதனுருபிற் கூறிற் றுயிற்றும் பொருள்சோமருங்கில் வேற் றுமைசாரும்” என்று மங்கலத்தால் மூன்றனுருபு ஏழாமுருபாயிற் றெனவறிக்.

அரனுருவு மஞ்செழுத்தா லம்மைகளையு மறிந்திட்டு — சகள நிட்களமாகிய சதாசிவமூர்த்திக்கு அஞ்சகலமோத்திகளுக்கும் ஸ்ரீபஞ்சாக்கரமே திருமேனியான முறைமையினையு மறிந்து, அவை வருமாறு,—

யகாரம் லிங்கம், வகாரம் நாளம், சிகாரம் மேற்பத்மம், மகாரங் கண்டம், நகாரங் கீழ்ப்பத்மம் நகாரஞ் சத்தியோ சாதம், மகாரம் வாமம், சிகாரம் அகோரம், வகாரந் தற்புரு

ரென்றுமான் பட்டிருக்குது, அதுபோலச் சிவனு மந்தவா
மாவிலரனே னமா விட்டத்திலே வந்து பிரகாசியா நிற்கு
ம் எ-று.

அரன் எழுவாய்
தோன்றும் பயனிலை
இதற்குச் சிந்தியம் காரணம் சுப்பிரபேதத்து மறிக

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

முதலிலே யோசைதரு மஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க வென்றதை மேல் விரித்துக் கூறுகின்றது.

அஞ்செழுத்தாலான்மாவை யரனுடையபரிசு மானுருவம் ஞ்செழுத்தா லனைந்தமையுமறிந்து - அஞ்செழுத்தினாலே யான்மாவைச் சிவனடிமையாகவுடைய பரிசாவது —பஞ்சாக்ஷரத்தினுடைய பொருள், சிவன்பொருட்டு நமஸ்காரமென்று சொல்லும் நமஸ்கரிக்கிறவ னடிமையும் நமஸ்காரத்தைச் சொல்லுகிறவ னுடைவனு மாகையா லான்மா வடிமையுஞ் சிவ னுடையனென்கிற முறைமையும், நகாராதி யைந்தெழுத்தும் நிவிர்த்தியாதி யைந்து கலைகளுக்கும் பீஜமாதலால் நிவிர்த்தியாதி பஞ்ச கலைகளையும் வேறு சத்தியோசாதாதி பஞ்சமந்திரங்களு முதித்துச் சதாசிவாகருத்த திருமேனியானமையு முணர்ந்து,—

அஞ்செழுத்தா லங்கக்ர நியாசம்பண்ணி - யகாராதிநகாராந்தம் பீஜமாக வீசானாதி மந்திரங்களை யங்குஷ்டாதி கநிஷ்டாந்த மாகவும் ஹ்ரஸ்வப் பிரணவாதி யகாராந்தம் பீசமாக இருதயாதி மந்திரங்களை கநிஷ்டாதி யங்குஷ்டாந்தமாகவும் † நியமித்து சிரசுமுதல் பாதாந்தம் இருதயாதி அஸ்திராந்த மந் தப்படியே நியமித்துப் பஞ்சாக்ஷரத்தினாலே பஸ்மீகரணம் பண்ணி,—

அஞ்செழுத்தாலிதயத் தானமாவி லாசித்து-இருதயகமலத்தி னடுவே ஆன்மலிங்கத்திலே பஞ்சாக்ஷரத்தினாலே பஞ்சபிரம ஷடங்க மூர்த்தியாகிய சதாசிவ தேவனை மேற்சொல்லு மந்த்ர × யஜநப்படியே பூஜைபண்ணி,—

குண்டலியி னஞ்செழுத்தா லனலையோம்பி- குண்டலிமண்டலத்தி னுட்குண்டத்தி லையந்தவாக்கினியிலே சந்திர மண்டலத்து லமிர்தங்கொண்டு பஞ்சாக்ஷரத்தினாலே ஓமம்பண்ணி,—

அனவரத கோதண்ட மடைந்து தருளின் வழிநின்று- போகப்பிராசத்தினாலே யல்லது விட்டுப்போகா புருவமத்தியத்தை மூலாக்கினியை யெழுப்பி வாயு வன்னியீசத்தை யுச்சரித்த தன்வழித்தாயச் சென்றடைந்து ஆறாயிரஞ் சந்திர சமானமாயிருக்கிற சிவமண்டலத்திலே சமாதியடைந்து சிவனுடைய ஆஞ்ஞாசத்தி பிரேரிக்கத் தான ¶ பிரேரியனாய நிற்குமுறைமை கண்டு, அவ்வாறே யெல்லாத் தொழில்களையுஞ் செய்து நின்று,—

அஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க மதியருக்கனைப்பரவப் போற்றென்று மான்மாவிலரனே - பஞ்சாக்ஷரத்தை நால்வர்ணத்தவர்களும் நாலாசிரமத்தவர்களு மின்னபடி ஜபிக்கவென்று சிவாகமங்கள் சொன்னபடியே ஜபிக்கத் தனித்துக் காணப்படாத ராகு கேதுக்களைச் சந்திரசூரியரிடமாகக் காணபித்ததுபோல ஆன்மாவிலே சிவன் தன்மயமாகப் பிரகாசிப்பனென்றிதன் பொருள்.

இந்தப் பஞ்சாக்ஷரத்தின்கிரமங் கிரியாதீபிகையிலே விஸ்தரித்துச் சொன்னோங் கண்டுகொள்க.

† நியசித்து-நியாயஞ்செய்து, × யஜநம்-யாகம், ¶ பிரேரியன்-பிரேரிக்கத் தக்கவன்.

தானே தியானத் தானமாகக் கற்பித்துக் கொண்டு, அங்ஙனம் வழிபட்டு நின்று கொண்டு அவ் வஞ்செழுத்தை விதிப்படியே மாறி நெஞ்செழுத்தியுச்சரித்தல் செய்க. இவ்வாறு சிவோகம்பாவனையுந் திருவஞ்செழுத்து மந்திரமும் அந்தரியாகக் கிரியையுமென்னும் இம்மூன்றனும் ஒருவழிப்பட நின்று கொண்டு அதனைக் கணிக்கப் பெறுவாராக, நவக் கோள்களுள் ஏனை யேழும் போலக் காண்டற் செல்லாத ராகு கேதுக்கள் உபராகத்திற் சந்திராதித்தர் மாட்டுக் காணப்படுமாறுபோல, முப்பொருள்களுள் யாவினையுமறிந்தே னறிகின்றிலேனென்னு மறிவிற்கு விடயமாய்த் தோன்று மேனைப் பசுபாசங்கள் போலப் புலனாகாதவழிப் பதிப்பொருள் அவ்வுச்சரிப்பி லான்மாவினமாட்டு விளங்கித் தோன்று மென்பதாம்.

அறிந்திட்டென்பதனை மேலுங் கூட்டுக.

ஆன்மாவை யானுடைப் பரிசென்ற வுண்மையால் ஆன்மா அரனுக் குடைமையாம் பரிசு அறிதலின்றே லறிந்திட்டென்பது உய் பெறும்.

அரனுருவு மென்ற வும்மை சிறப்பு.

அரனுருவு மஞ்செழுத்தா லமைந்ததனையு மறிதல் இதனாற் றி லான்மாவிவ் வய்யாறு கண்டு ஆசப்பித்தற்பொருட் டெனக.

இனி உபமானத்தை எண்ணும்மையாக்கி, அஞ்செழுத்தா லான்மாவை யானுடைய பரிசு மரனுருவு மறிந்திட்டெனக் கண்ணழித்து, ஆன்மாவையும் அரனுடைய பரிசாகிய திருவருளையுஞ் சிவ சொரூபத்தையும் அஞ்செழுத்தா லுணர்ந்தென்றும், அஞ்செழுத்தா லமைந்ததனையு மறிந்திட்டென்பது அனாதி தொடர்ந்த மலங்களையு மைந்தெழுத்தி லுணர்ந் தென்றும் உண்மை விளக்கஞ் சிவப்பிரகாச முதலிய வற்றுள் ஓதிய வாறுபற்றி யுரைத்தலுமொன்று.

லே நாபி குண்டலத்திலே சுவாகாவென்று அங்கிகாரிப்புச் செய்து,—அவ்வரிய கோதண்டமுடைந் தருளினவழிநின்று—பொருந்தத்தகுரிய விலாடத்தானத்தின் மேனை புருவமத்தியிலே சிவன் ஆன்மாவுக்குப் பிராணனாய் நிற்கிற தன்மையை அவனுடைய ஞானத்தினாலே பற்றித் தோகம்பாவஞ்செய்ய அப்பொழுதே சிவனுக்கு அடிமையாவன். இப்படி நிற்க ஆன்மசுத்தி வருகிறபடி எப்படியென்னின் மேலருளிச்செய்கிறார்—அஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க - பஞ்சாக்ஷரத்தை உபதேசப்படியே யறிந் துச்சரிக்க,—மதியருக்கனையரயம்போற் றேன்றும் - ஆதித்தனிடத்திலும் சந்திரனிடத்திலும் ஆச்சரியமாக இராகு கேதுக்கள் கூடினவிடத்து அந்தச் சந்திராதித்தர்களை யுள்ளடக்கி இராகு கேதுக்கள் தோன்றி நின்றாற்போல,—ஆன்மாவி லரனே - அந்தச் சிவனென்று சோகம்பாவஞ் செய்யின் அப்பொழுதே காட்டத்தி லக்கினி தோன்றினாற்போலச் சிவனு மான்மாவிலே தோன்றிப் பிரகாசியா நிற்பன்.

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், ௯-சூ, ௯-வெ, "அஞ்செழுத்தாலுள்ள மரனுடைமை கண்டரனை, யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தில்—அஞ்செழுத்தால், குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கில், அண்டனாஞ் சேடனாமங்கு"

அஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க மதியருக்கனையரவம் போற்றோன்று மான்மாவிலரனே என்றதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், ௯-சூ, ௪-வெ, "நீதவிர்ப்பானுவி விராகுவைக் கண்டாங்கு, சிந்தையிற்காணாற் சிவன்கண்ணே—முந்தவே, காட்டாக்கித் தோன்றக் கனல்சேரிரும்பென்ன, வாட்டானாமோ தஞ்செழுத்து" என்னுமதனாற் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தாலே ஆன்மா சிவனுக் கடிமையென் றறிந்து பூசை யோமத் தியானங்களும

ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தாலே செய்யக்கடவனென்றும், ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்தி யறிந்து சோகம் பாவஞ்செய்ய இந்த வான்மாவை யுள்ளடக்கிச் சிவன் பிரகாசித்து நிற்பனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமணியதேசிகருரை வருமாறு.

—o—

ஆன்மாவை யரனுடையபரிசு மஞ்செழுத்தா லறிந்திடு - கசிந்தகொள்ளடியென்று ஊத்தையன்கு வினறகலப்பாலே சோக மென்ப பாவித்தக்கா லூனமாவுஞ் சிவமு மங்ஙனமுடைமையு முடையானுமாய நிற்கும் பரிசை யைந்தெழுத்தோது முறைமை யின் வைத்து நாடாநந்து,— ஆனுருவு மஞ்செழுத்தா லமைந்த தையு மறிந்திடு - ஆதிபெடிகேள் எனவும் சோகந் பாடிசி காம எனவும் ஓதிபயாரே யவன்றிருமேனி ஐந்தெழுத்தா லமைந்த பரிசுமுணர்ந்து,—அங்கந்நியாச மஞ்செழுத்தாற் பண்ணி- அம்முறையே அங்கந்யாசம் கரந்யாசங்களு மவ்வைந்தெழுத் தாற் செய்துகொண்டு,—இதயத்தக குண்டலியி னிணைவரிய கோதண்டா - இதய முந்தி யனேகறத்தரிய புருவநடுவென்னு மூன் றும,—ஐஞ்செழுத்தா லானமாவி லாசித்த தஞ்செழுத்தாலன லோமமி யடைந்தநளின வழிநின் றஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க - முறையே பூசைத்தான மோமத்தானந் தியானத்தா னமாகக் கற்பித்துக்கொண் டவ்வைந்திலும் வழிபட்டு நின்றுகொண் டவ் வைந்தெழுத்தை விதிப்படியேமாறி யஞ்செழுத்தி யுச்சரித் தல் செய்க இவ்வாறு சிவோகம்பாவனையுந் திருவஞ்செழுத் துச்சாரணமும் அந்தரியாகக் கிரியையென்னு மிம்மூன்றனு மொ ருவழிப்பட நின்றுகொண்டு அச்சிலைக் கணிக்கப்பெறுவாராக,— மதிபருக்க னனையரவம்போல - நயக்கோளகளுள் ஏனையெழும்

ஞாலமுத்தற மாணிக்க நிறமபோனறிருக்கிற கிழங்கே
த்துவத்தா லெ பிரதிவித்த்துவமாய, அபபுமுதல மாயையீ
ளவிர ஞளத றுக்க கிழங்கின மேலே நீலநிரமபோன றெ
தாய டடஙகுல வுபரத்தைக யுடைய நாளத்தினடு
வே நவதத்துவாரத்தையும பவளமபோனற
முளளியையும பொருநதி,

மூட்டு மோகி அந்தநாளத்தி னுனியிலே பூவினடியிலே
னி பொருநதிய முடிசசு மாயையாகவும,

சுத்த வித்தை சுத்தவித்தியா தத்துவமே யெட்டிசழுத
மலரெட்டாய தாமரைப பூவாய அஃதெசசிறபபை யுடைய
தெளிந்த சுவேத நிறத்தினை யுடைய வெட்டி
தழினையும பனனிரணடஙகுல விரிவினையு முடைய கமலத்துநா
பயனை ரஙகுல வுயரத்தினையும விரிவினையும அந்நிலையத்
தோரெழுத்தை விரையாகவும ஒட்டவைத்த பொனபோனற க
ரணிகையினையு மதனைச சூழ அக்கிரமபோனற அறுபத்துநாலு
கேசரஙகளையு மதனுனியிலே முத்துபபோலவு மிபபடியிருக்கிற
பதுமத்தில

முழுவித் தெழ கிழககுமுதலாகப பிரதானமான வெட்டி
ட்டக்கரஙகளை தழினும ஆசைவே ஓமசிவாய நமோநம வே
முறைமையினி யக்கரஙக ளெட்டினையும பொருநதி இவவெ
லுடைத்தாய ட்டிதழினையு மட்டவித்யேசுர ரதிட்டித்
திருபபாகள

காட்டுகமலா இபபடிச் சொலலபபட்ட பதுமத்தின
சனமேலீசா மே லீசுவர தத்துவத்திலிருக்கு மகேசுவ
ரராகவும,

சதாசிவமூ சதாசிவதத்துவத்திற சசினியாதி யா
வ் கலா மூர்த்த கிய சத்திகள முபபத்தெட்டுக் கலைகளையும்
மாம வடிவாகவுடைய சதாசிவ மூர்த்தியும,

இவற்றின் கணுகுஞ்சத்தி — இவைகளிருக்கிற தத்துவங்களுஞ் சத்தித் தத்துவத்திலிருக்குஞ் சத்தி.

வீட்டையருள — சத்திக்கு மேலாகி வீட்டையருளு சிவன

சிவன் மூர்த்தி — மூர்த்திமானுகி நிற்பன் என்பதுமாறுக

மாகுகிச் சத்தி — முற்கூறிய சத்தித் தத்துவத்துக்கு மேலாகிய

மேலாகி நிற்பன் — சர்வானமாருக்கு மோட்சத்தைக் கொடாநிற்கிற சிவதத்துவ மெல்லாத்துக்கு மேலாகின்றனும்

எனச் சத்தியென்பது நாலாம்வேற்றுமை, குவ்வென்னுமுருபு தொக்கது

இந்த வினை வாழ்ந்து போற்றே — இப்படி மன்முதல் சிவதத்துவமீறுக தன்முன் மூர்த்திமானுமாய் நிற்கு முறைமையினை யறிந்து சிவனை யாராதனை செய்வாயாக எ-று

முழுவிதழெனச் சிறப்பித்தமையா லுபதள முளதென்றதாயிற்று

சதாசிவமுமென்ற வும்மையா லீசுர தத்துவமுங் கூறிய தாயிற்று

சிவன் எழுவாய், நிற்கும் பயனிலை

நீ முன்னிலைத்தொகை எழுவாய்

போற்று பயனிலை

இதயபத்மம் வாழைப்பூப்போல அதோமுகமாய் நாலங்களுந் தாழ்ந்திருக்குந் தாழ்ந்திருக்குமென் றேருதியிருக்க அக்கமலத்திற் பூசிக்கச் சொல்லிய தென்னையெனில்? அதனை யுத்தம பீஜ மந்திரத்தாற் பண்ணி யஃ தலாகத்தாகப் பாவித்து அதிற் பூஜையென்றது

இதற்குக் காமிகம் சுப்பிரபேதம் நிசுவாசம் சூக்ஷ்மசங்கிதை காலோத்தரம் கிரணத்து மறிக. (௬)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலந்தாயசனக்கிரமங் கூறுகின்றது

நா—டுமிதயந்தானும - இருதய கமலங்களிலே நிரூபிக்கப்
பட்டதிரான உமமை சிறப்புமை,—நாபியினிலடியாய ஞால
முதறறத்தவத்தா லெணவிரருளததாய - மூலாதாரத்திலே
கூமம கூமத்துககு நடுவே ஆதாரசத்தி. கூமத்தின்மேல அ
னந்தனுக்கு பதமாசனம அதனமேலேயநந்தன நாபிமட்டாய
அனந்தனுடைய சிரசிலே பிருதிவி, தாமரைக்கிழங்கு அப்பு த
த்துவ முதலாகக காரிய மாயாதத்துவ மளவு முப்பது தத்து
வங்களும எட்டங்குல நாளம் பஞ்சாசறபாவமுந தாமரைத
தண்டி னூல்கள நாளத்தின முளளுகள நூறறுக தொணணூற
றொரு புவனங்கள —மூட்டுமோகினி - தண்டுககு மிதமுககும
நடு விசைதலையதோமாயை அதனமேல,— சுததவிததை மல
ரட்டாய் - சுத்தவிததியா தததுவ மெட்டிதழாய,—முழுவி
தழெட்டககரஙகள முறைமையினி லுடைததாய - இந்திராதி
திககு பாலருடைய பீசமான அஷ்டாக்ஷரத்தைக கிரமத்திலே
யுடைததாய் கிரமமாவது யகாராதி ஹகாராநதமெட்டும வாயு
அகநி இநதிரன வருணன யமன குபேரன நிருதி ஈசானன திக
குகளங்கள,—ஈசா சதாசிவங்கள - அனநதாதி மகேஸ்வரா வ
சிபபதான வீஸ்வர தததுவங்கள கேசரங்கள சதாசிவா வசி
ககுஞ சாதாக்கிய தததுவங * காணிகை.—காட்டு-காட்டாகி
ய சூரிய சோமாக்கி மண்டலங்கள மூனறும தளாககிர விாத
தததிலும கேசராககிர விாததத்திலும காணிகா விாததததிலு
ம் இவையிற்றுககளுககு அதிபதிக ளடைவே பிரம விஷ்ணு ரு
த்திரரகள இவவாறுளள,—கமலாசன மேல-என்றதனுற கா
ணிகையின மேற சத்திமயமாகிய விமலாசனததிலே யெனக

கொள்க,—கலாமூர்த்தமாமிவற்றின் கண்ணுக்குஞ்சத்தி வீட்டை யருளசிவன் மூர்த்திமானுக்குச் சத்தி மேலாகிநிற்பன—ஈசானாதி பஞ்சபிரம மந்திரங்களின் கலைகள் முப்பத்தெட்டும் சதாசிவமூர்த்தியாம் இந்தக் கலைகளை சசிநியாதி முப்பத்தெட்டு சத்தியு மதிட்டித்திருக்கும் இனி முத்தியைக் கொடுக்கும் பரமசிவ னிந்தச சத்திகளாலாகிய தேகத்துக்குப் பிராணனுமா யிந்தச் சத்திகளுக்கு அதீத நிலையாகிய நிர்விகற்ப ஞானாநந்த ஸ்வரூபியாகநிற்பன —இந்தவிளைவறிந்து போற்றே-இந்த விளைவாவது பராயாதி பஞ்சசத்திகளுஞ் சுத்தமாயையிலே பதிய வந்துற சிவசாதாக்கியம் அமூர்த்தி சாதாக்கியம் மூர்த்தி சாதாக்கியம் கர்த்திரு சாதாக்கியம் கன்மசாதாக்கியம் என்னைந்து பேதமாயொன்றையொன் றாச்ரயித்துக்கொண்டிருக்கும் இந்தமுறைமையை யறிந்து கன்மசாதாக்கியத்தைப் பூஜைபண்ணவென் றித்தன்பொருள்.

இதனை விஸ்தாரங் கிரியா தீபிகையிலே சொன்னோங் கண்டுகொள்க

* காணிகை - தாமரைக்காய்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இதயத் தாசசனுப பிரகார மறைகின்றா

நாட்டு மிதயந்தானும் - இருதய கமலமும்,—நாபியினில் அடியாய - கந்தமாய,— ஞாலமுதற ரத்துவந்தா லெணவிர ஞுளத்தாய,—மூட்டு மோகினி - புறவிதழ முடிச்சு மாயை,—சுத்த வித்தைமலா - சுத்த வித்தியா தத்துவ முடபதுமாசனம் ஈசுவர தத்துவ மாகிய,—முழுவித ழெட்டாய்,—ஓம் நமசிவாயநம வென்னும,—எட டக்ஷரங்கள முறைமையினி

அற்றேல், மேல் ஐந்தெழுத்தா லமைந்த வுருவென்க் கூறி அதன்பின் ஆன்மாவி லர்ச்சித் தெனவுங் கூறி ஈண்டுச் சத்திமூர்த்தி யென்றன மலைவாம் போலு மெனின்? ஆகாது அமூர்த்தம் முதல்வனுக்கு முறையே தூலவடிவுஞ் சூக்கும வடிவும் அதிசூக்கும வடிவுமெனக் கோடலா லென்பது.

அண்ட மோரணுவான பெருமை கொண்டு கரணங்களெல்லாங் கடந்து நின்ற வவ்விறைவனே அணுவோ ரண்டமாஞ் சிறுமை கொண்டு ஆன்மாக்க ளுய்தற்பொருட்டு உடம்பினுள்ளும் அவ்வாறு நிற்கின்றான், அதனையறிந்து செய்யாக்கழிப் பூசையாற் பயனில்லை யென்பார் இந்த விளைவறிந்து போற்றே மென்றார்.

தன்னின் முடித்தலால் ஓமித்தல் தியானித்தல்களினும் இவ்வாறே புணர்ந்து செய்யப்படுமெனக் கொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

இத்தன்மை கூடாதவர்களுக்குச் சிவனை யுள்ளே பூஜித்து அதிலே ஆன்மசுத்தி யுண்டாகு முறைமை யருளிச்செய்கிறார்.

நாட்டமிக்க யந்தானு நாபியின் அடியாய - சொல்லப்பட்ட விதயமாகிய தாமரைப்பூத் தனக்குக் கிழக்கு நாபித்தானமாய்,— ஞாலமுதல் சத்துவத்தா லெண்விரலளத்தாய - பிருதிவி முதல் கலையந்தமாகவுள்ள முப்பத்தொரு தத்துவத்தாலே அந்தப் பூவுக்குத் தண்டு எட்டங்குல நீளத்தை யுடையதாய்,— மூட்டுமோகினி - நாளமும் பூவும் பொருந்தின மூட்டு அதோமாயையாய்,— சுத்தவித்தைமலர் - தாமரைப்பூச் சுத்தவித்தையாய்,— எட்டாய முழ்வித ழெட்டக்கரங்கள் - எட்டு அக்கரங்களும் பூவுக்கு நிறைந்த விதழெட்டாய்,— முறைமையினை யுடைத்து

தாய்க் காட்டி கமலாசனம் - முன்சொன்ன கிழங்குமுதல் இதழ்முடிவான முறைமையினையுடைய பிரமாசனமாயிருக்கிற முப்பத்திரண்டு தத்துவத்துக்கும் நிவிர்த்தி பிரதிஷ்டை வித்தையென்கிற கலைகள் வடிவாம் — மேலீசர் சதாசிவங்கள் கலாரூபாந்தமாம் - இந்த வாகனத்துக்குமேலீசுரதத்துவமும் சாதாக்கிய தத்துவமும் நடுவிற் கர்ணிகையாம் இவையிரண்டுக்கும் சாந்தியும் சாந்தியாதீதமும் வடிவாம் — இவற்றின் கண்ணுக்கு சத்தி - சத்திதத்துவம் இந்த கர்ணிகையிற் கண்ணான விந்துக்களாம், — விட்டடையருள் சிவமூர்த்திமானாகிய சத்திமேலாகி நிற்பன - மோக்ஷத்தைத் தருகிற அந்த நாதம் அதற்குப் பிராணனுமாய் மேனிரந்தரமுமாய்ச் சத்தி தத்துவத்துக்கு மேலுமாய இதழ்ப் பூவுக்குக் கந்தமுமாய் நிற்பன — அந்தச் சிவன் இந்த விளைவறிந்து போற்றே - இப்படிப் பூசித்தகாலுண்டாகிய பயனையறிந்து அந்தச் சிவனென்று சோகம்பாவனை செய்கிறதுதானே அந்தரியாக பூஜையாம்

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம், ௯-சூ, அ-வெ, "மண்முதற் குள மலாவித்தை கலாரூப, மெண்ணரியவீசா சதாசிவமு—நண்ணிற, கலையுந்தவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு, நிலையதில்லா மச்சிவனுண்ணோ என்னுமதுவ கண்டுகொள்க.

இக்குறச்சொல்லியது, ஆத்துவா சோதனைசெய்து சிவனைக் கூடுகிற வந்தரியாகத்தின் முறைமையறிவித்தது

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

நாபியினில் - உந்தியில், — ஞாலமடியாய - பிருதிவிதத்துவம் கிழங்காகவும், — முக்குற்றத்துவத்தா லெண்விரலுளத்தாய - பிரதிவியை முதலாகவுடைய ஏனையப்பு முதலிய இருபத்துமூ

னாறு தத்துவங்களு மெனவிரலளவைத்தாயுள்ள நாளவடிவமாகவும்,—மூட்டுமோகினி சுத்தவித்தை மலரெட்டாய-அசுத்தமாயையின் காரியமாகிய வித்தியாதத்துவங்க ளேழுஞ் சுத்தவித்தையுமென்னும் எட்டுத்தத்துவங்களு மெட்டிதழ் வடிவாகவும்,—முழுவித ழெட்டக்சரங்கள் முறைமையினி லுடைத்தாய - அவ்விதழெட்டிற்கு முன்றோய அக்கரங்களை யுடையதாகவும்,—ா சாசதாசிவமும் சலாழ்ஷாத்தமாம் - ஈசுவரஞ் சதாசிவமென்னு மிரண்டு தத்துவமும் அறுபத்து நான்கெனப்படும் கேசரவடிவமாகவும் பொகுட்டு வடிவமாகவும்,—சத்திசிவமிறதின கணக்கும - சத்தித்தத்துவம் பொகுட்டிற காணப்படும் ஐம்பத்தொரு பீஜவடிவமாகவும் உடைய,—நாட்டு மிகுந்தானுங் காட்டு கமலாசனம்-நாட்டப்படு மியம் கமலாசனமும்,—மேல்சத்திமேலாகி-அதன்மேற் சத்திரூபாசயும்,—வீட்டையருள் சிவனரூபாதிமாகி நிறபன - வீட்டினை யருளுஞ்சிறற சிவன ரூபாதிமாருகியு நிறபருதலின்,—இந்த விலை வறிந்து போறறே.

இம்முறைமைய பநிந தாசசிப்பாயாக வெனபகாம

## மறைஞானதேசிகர் உரை.



முறகூறிய வநசரியாகததுககு வேண்டு முபகரணங்களு
மதனுற பிரயோஜனங்களு முணாததுகின்றா

அநதரியா கநதனனை முதகிசுததனமா யறைநதிடுவ ரதுதாவு மானமசக்கியாகுரு, கநதமலா புகையொளிமந சனமமுது முதலாகக கண்டனவெல்லாமனததாற கருதிககொண்டு, சிநதைபினிற பூசிததுச சிவனஞானததாற சிநதிககச சிநதிகக தறபணைத்தை

விளகக, வநதிடுமவ வொளிபோல மருவியரனுளத
தே வரவரவந திடுவனபின மலமானதறுமே. (௧௦)

(இ - ள) அநதரி ஞாதாகக ளிநத அநதரியாகபூசை ஞா
யாகந சன னயோகமாதலா லிநுவே பரமமான மோ
ஊ முததி கூதததுக கேதுவெனறு சொலலுயாகள அ
சாதனமா யறை ஃதெககாரணததாலெனில?
நதிடுவா

அததானு மா அகக வநதரியாகநதானு நாடோறு மப
னமசுததியாகும றாவே யானமாவுககுச சுததியாம அஃதெ
றறுமஃ தெஙஙனமெனனில?

சநதம சநதனம அஃதாவது, போகசசகிற பற
றிலலாமையால வைராககியமாகிறதே சந
தனம

மலா அடடபுஷபம அஃதாவது, கொலலாமை.
யிநதிரிய நிககிரகம அஃதாவது, புறககருவி
யின வழி போகாதிருததல.

சாநதி அஃதாவது, உடகருவி யடசகவ
தயை ஞானம சததியவசனம பேசுகை
தவம பாவம அஃதாவது, மனமழுககற றி
ருததல் என வெடடிஊயு மறிக

பூவாா மலாகொண டடியாா தொழுவாா
எனறு ராதலி னறிக

புகை ஆமம அஃதறிநது, பிராணயாமம போ
ககுவரவுடனே கூடியிருககிற மனமாகிற பா
த்திரததிலே பிராணனுகிற அககினியை யிடடு காயமெனப
தொரு துபஙகொடுககை.

| | |
|---|---|
| ஒளி | ஞானதீபம் அஃதாவது, புத்தியெல்லாத்தையும் பிரகாசிப்பிக்கையால் ஞானமே தீபமாயிற்று |
| மஞ்சனம் | திருமஞ்சனம் நிறை |
| அமுது முதலாக | பிரத்தியாகாரமாகிற அமுதமே நைவேத்தியம் அஃதாவது, இந்திரியத் துவாரங்களிலே பற்றின மனத்தை யந்த விந்திரிய வியாத்தங்களிலே செல்லாமற் றிருப்பக்கொண்டு போய்ப் பலகாலு மிதயத்திருத்தல் |
| கண்டனவெல்லாமனத்தாற் கூட்டிக்கொண்டு | இவைமுதலிய வெல்லாத்தையு மிந்தப்பாவனைகளுடனே பாவித் துபசாரங்களைக் கொடுத்து |
| சிந்தையினிற் பூசித்துச் சிவனை ஞானத்தால் | சிவனைஞானத்தாற் சிந்தையினிற் பூசித்து என்பது பதமாறுக. சர்வ வியாபியாயிருக்கிற சிவனை ஞானவித்தியா லான்மாவினிடத்திலே யிப்படிப் பாவகத்துடன் பொருந்திப் பூசிக்க |
| சிந்திக்கச் சிந்திக்கத் தற்பணத்திற் கண்ட வொளி போல | கண்ணாடியை விளக்கவிளக்க எப்படி மலினம்போய்ப் பிரகாச மதிகமா மதுபோல இவனு மான்மாவின் கண் பலகாலும் பலகாலும் நினைக்க நினைக்க ஞானம் பிரகாசியா நிற்கும் |
| மருவியரனுளத்தே வரவரவந்திடுவன் | அனவரதமும் நினைக்க நினைக்கச் சிவனு மான்மாவைப் பொருந்தி யிரண்டற நிற்கிற சிவன் பிரகாசியா நிற்பன். |
| பின் மலமானதுறுமே. | சிவப்பிரகாச முண்டானவாறே யிவனிடத்துண்டாய மலங்களும் விட்டு நீங்கும். எ-று. |

சிநதிககச சிநதிக்கள - து வரவரளன விரகூட்டுறக கிளாததலின அஃதிரடடைச சொல்லெனவறிக.

அது - சுட்டு

தான - அசை

உமமை - எதிரது தழீஇயிடவெசசம

அறிகோா அறைவா, அரன அறம என, எழுவாய் பயனிலைக கூட்டுக

“ஒடமபெனு மனையகததே யுளளமே தகளியாக, மடம்படு முணாநெயயட்டி யுயிரொனுந திரியமயககி, யிடமபடு ஞானத்தீயா லெரிகொள விருநதுநோககிற, கடம்பமா களிறதானைச ழலடி காணலாமே” எனவும “காயமே கோயிலாககக கடிமன மடிமையாக, வாயமையே தூயமையாக மனமணி லிஙகமாக, நேயமே நெயயுமபாலு நிறையவே யமையவாட்டிப, பூசைசொ னீசனுாககுப போறறவிக காட்டினோமே” எனவுமறிக.

இதறகுச சிவதருமோததரம சுபரபேதம வாதுளம் மோக சுரோததரம பூசாததவதது மறிக.

இஙஙனம கைவாராதார புறததியிற பூசிககு மவைகளைப் பாவிததுப பூசிககவெனபதூம பெறும (கஎ)

---

## சிவாகமயோகியருளா வருமாறு.

——o——

மேலிதுவமது

அநதரியாகந தனனை முததிசாதனமா யறைந்திடுவே ரது தானு மானமசுததியாகும -இருதயததுளளே சிவனைப் பூஜிப்பதை முத்திக குபாயமாகப பெரியோாகள சொல்லுவாகள. அந்த வநதரியாகநதா ஞனமசுததி யாகும-ஆனமசுத்தியாவது ஆணவ மாயை கனமமெனகிறவழுககு நீககுவது.அதுவே முததி·

மேல் பூஜைபண்ணு மடைவு,— கந்தமலர்ப் புகையொளிமஞ்ச
ன மமுது முதலாகக் கண்டனவெல்லா மனத்தாற் கருதிக்கொ
ண்டு - ஜலம் கந்தம் புஷ்பம் தூபதீப நைவேத்திய மாதியாக
வுண்டான வஸ்துக்க ளெல்லாத்தையு மனத்தினாலே யுண்டாக்
கிக்கொண்டு உண்டாக்குமவாறு, பிருதிவி பீஜத்தையுச்சரித்து அ
சாதாரண பிருதிவியிலே நின்றும் கந்தம் புஷ்பம் தூபம் வஸ்தி
ரம் உபவீதம் அன்னம் அபூபம் தாம்பூலமுத லநேக வஸ்துக்க
ளையும் அப்பு பீஜத்தையுச்சரித்து அசாதாரணஅப்பு தத்துவத்
திலே நின்று ஜலம் பால் தயிர் நெய் தேன் கருப்பஞ்சாறு மு
தலான நெகிழ்ச்சியான வஸ்துக்களையும் வன்னி பீஜத்தை யுச்ச
ரித்து அசாதாரண வன்னி தத்துவத்திலே நின்றும் தீபம் ரத்தி
னாபரணம் தாப்பணமுதலான பிரகாச வஸ்துக்களையும் வாயு
பீஜத்தை யுச்சரித்து அசாதாரண வாயு தத்துவத்திலே நின்று
ம் ஆலவட்டம் விசிறி சாமர முதலான சலன வஸ்துக்களையும் வி
யோம பீஜத்தை யுச்சரித்து அசாதாரண வியோம தத்துவத்தி
லே நின்றுங் கண்டாநாதம் வீணாநாத முதலான நாதங்களையு
மிப்படிச் — சம்பாதிதமான வஸ்துக்களினாலே,—சிந்தையினி
ற் பூசித்துச்சிவனை - ஆன்ம லிங்கத்திலே சிவனைப் பூசித்து
மேல்,— ஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்கத் தாப்பணத்தைவி
ளக்கவந்திடு மவ்வொளிபோல் மருவியாளுந்தே வரவரவந்
திடுவன்பின் மலமாயைதானுமே - சிவனை யென்பது நந்நிலைத்தீ
பம் சிவனை யவனது ஞானத்தினாலே சிவபாவனையை மேன்மே
லும் பண்ணக் கண்ணாடியை விளக்க விளக்க முன் னப்பிரகா
சமா யிருந்த வொளியே பிரகாசமானதுபோல அநாதியே யா
னமாவிலே பிரியாப் பொருந்தி யிருக்கிற சிவன் சிவ பாவனை
கைவரக் கைவரச் சிவனு மதிகமாகப் பிரகாசித்துப் பிரகாசி
த்து வருவன் தத்துகுணமாக வாணவமலமும் நீங்கி நீங்கி வரு.

து சிவன் பூரணமாகப் பிரகாசிக்க மலம் நிச்சேஷமாகப் போ
மென் றிதன்பொருள்

— சம்பாதிதம் - சம்பாதிக்கப்பட்டது

——

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———()———

இவ்வந்தரியாகமும் ஒருவழி யான்ம சுத்திமுன்னுக்கப் பின் பண்ணப்பட்டுச் சாலம்ப சிவயோக மூலமாகலாற் சாலம்ப சிவயோக மார்க்கத்தாற் சமாருந்தம் போயச் சமாருந்த முற்றுப பாச முத்தி நிராலம்ப சிவயோக பாத்திர சின்மாத்திரான்ம சித்திக் குறி யான்ம சுத்தியாமதன்றுற சாலம்ப சிவயோக மல்ல மபித தந்தத்து நிராலம்பித்து நிராலம்ப சிவயோகம் பண்ணபாமுத்தியா மென்று பகாகின்றார்.

ஞானத்தால் - முன்சொல்லியபடி இருதயத்திருந்து நிராலம்பித்துப் பண்ணும் நிராலம்ப சிவத்தியானத்தால்,—சித்திக்கச் சிந்திக்க - தியானிக்கத் தியானிக்கத் தியானமுற்றுஞ் சிவசமாதியால்,—மருவி யானுள்ளத்தே வரவர - சிவன் பூரணப்பிறசத்தியினைக்கண சாந்நித்தியனுகச் சாந்நித்தியனாக,—மலமானது மே - மலமுந்தி வருமே,—பின் தருப்பணத்தை விளக்க வந்த மவ்வொளிபோல ஆன்மா,—வந்திடுவன் - சிவத்துவாபி வியத்திமாருவன்—வந்திடு மவ்வொளிபோல் ஒளி வரவர மருவியான் வந்திடுவன்,—மலமான தற்பொன் வுரையனைத்தார காரியமுந்தத்தலும் காரணம் பிந்தத்தலுமாய் வியத்தி முந்தத்தலும் முத்தி பிந்தத்தலுமாய் முறைமைத் தடபுவரும் வந்திடு மவ்வொளிபோல மருவியான் வந்திடுவனென்றலும் திஷ்டாந்த விரோதமா மாதலாலு மப்படி யுரைப்பதன்று.

மற்றைய வெளிப்பொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———0———

கண்ணாடிக்குப் பொடியிட்டு விளக்க விளக்க ஒளி மேலி ட்டு மாசு நீங்குமாறு போல, ஆன்மாவி லவ்வாறு ஞானத்தா லர்ச்சித்தலும் ஓமித்தலுந் தியானித்தலுஞ் செய்யச் செய்ய ஆ ண்டுச் சிவம் மேலிட்டு மேலிட்டு வந்து விளங்கித் தோன்றுந் தோன்றவே ஆணவமலந் தேய்ந்து தேய்ந்து பற்றறக் கழியும். அ ங்ஙன மான்ம சுத்திக்கு ஏதுவாகலான் அவ்வந்தரியாகம் ஒருத லையான் வேண்டப்படும் முத்திசாதனமென் றறிக வென்பதாம்.

அதுதானு மான்ம சுத்தியாகுமென ஒற்றுமை பற்றிக் கா ரணத்தைக் காரியமாக வுபசரித்தார்.

உம்மை சிறப்பு.

கந்தமலர் புகையொளி மஞ்சனமமுது முதலாகக் கண்டன வெல்லா மனத்தாற் கருதிக் கொண்டு சிந்தைதனி லர்ச்சிக்க வெ ன்னவே, அவற்றை யங்ஙனங் கற்பித்துக் கோடலு மனுவர்த்தத்தா ற்பெறரும்.

மனத்தாற் கருதுமாறு "காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக" என்பது முதலிய திருவாக்குக்களாலு மறிக.

ஞானத்தா லென்பதனை அர்ச்சிக்க வென்பத னோடுங் கூ ட்டுக.

சிந்திக்க வென்றது முன்னையது ஓமித்தன் மேற்று.

இவையிரண்டு செய்யுளானும் அந்தரியாகஞ் செய்யுமாறும் அஃதாண்டைக் கொருதலையான் வேண்டப்படுவதென்பதூஉங் கூறப்பட்டன.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

இப்படி யுட் பூசையாகச் சொல்லப்பட்ட அந்தரியாகத்துக்குப் பயனெப்படி யென்ற மாணாக்கனை நோக்கி யருளிச் செய்கிறார்.

அந்தரியாகந்தனை முத்திசாதனமாயறைந்திடுவர் - இப்படிப் பூசிக்கிற உட்பூசையாகிய அந்தரியாகத்தை மோக்ஷஹேதுவென்றே சொல்லுவார்களறிவாலுயர்ந்தோர்—அதுதான் ஆன்மசுத்தியாகும்-அந்த வந்தரியாகந்தான் உயிர்க்கு விளக்கமாம். இந்தப் பூஜைக்குண்டான வுபகரணங்களேதெனில்?—கந்தமலர்ப்புகையொளிமஞ்சன மமுதமுதலாக்க கண்டனவெல்லா மனத்தினாற் கருதிக்கொண்டு - கந்தபுஷ்ப தூபதீப மஞ்சனத் திருவமுது முதலாக நூல்களிற் சொல்லப்பட்டன வெல்லாம் மனத்தாலே சங்கற்பித்துக்கொண்டு,—சிந்தையினிற் பூசித்துச் சிவனை - தனக்குப் பிராணனாய் நிற்கிற பரமேசுவரனைத் தன்னுடைய விதயத்திலே பூஜித்து,—ஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்க - சிவஞானத்தாலே அவனைச் சந்ததமும் நினைக்க நினைக்க,—தற்பணத்தை விளக்க வந்திடுமவ்வொளிபோல - கண்ணாடியை விளக்கவே மேலேயுண்டாகிற பிரகாசம்போல,—மருவியருளத்தே வரவர வந்திடுவன் - சிவன் ஆன்மாவைப் பொருந்தி நின்று மேலேமேலே பிரகாசியாய் நிற்பன். அங்ஙனம் பிரகாசிக்கவே,—பின்மலமானதுமே - முன் அநாதியே மறைத்துக்கொண்டு நின்ற ஆணவமலமாகிய அந்த அந்தகாரம் இப்பொழுதுதிக்கச் சிவப்பிரகாசத்தாலே நீங்கும்.

இங்ஙனஞ் சொல்லியது பூசைக்கு வேண்டத்தக்க உபகர

ணங்களெல்லா மனத்தாலே சங்கற்பித்துக்கொண்டு ஞானத் தாலே யுள்ளே பூசிக்கிற பூசை ஆன்மசுத்தியென்றும் அப்படி பூசிக்கவே இவனுக்குச் சிவப்பிரகாச முண்டாமென்றும் அந்தச் சிவப்பிரகாசத்தினாலே பாசமானது நீங்குமென்னு முறை யையு மறியத்தக்கது

---

## சுப்ரமணியதேசிகருரை வருமாறு.

—0—

தற்பணத்தை விளக்கவந்திடு மவ்வொளிபோல - கண்ணா டிக்குப் பொடியிட்டு விளக்கவிளக்க ஒளிமேலிட்டு மாசுநீங் கு மாறுபோல,—சிந்தையிலிறைசிவனை - ஆன்மாவிற்சிவனை —கந் தமலர்ப்புகையொளிமஞ்சன மமுதமுதலாகக்கண்டனவெல்லா ம் - சந்தனம் புட்பந் தீபந் தூபந் திருமஞ்சன மன்னமுதலிய பூ ஜாத் திரவியங்களெல்லாம்,—மனத்தாற் கருதிக்கொண்டு ஞா னத்தாற்பூசித்துச் சிந்திக்கச் சிந்திக்க-மனத்தாற் கற்பித்துக் கொண்டு ஞானத்தா லர்ச்சித்தலும் ஓமித்தலுந் தியானித்தலுஞ் செய்யச்செய்ய,— மருவியானந்தத்தே வரவர வந்திடுவன - ஆ ணைப்பொருந்திய சிவம் உள்ளத்தின் கண்ணே மேலிட்டு மேலி ட்டு வந்துவிளங்கித் தோன்றும் தோன்றவே,—பின்மலமாற் றுமே - பின் ஆணவமலம் தேயத்தேய்ந்து பற்றறக்கழியும்,— அந்தஞானமான்ம சுத்தியாகு மந்தரியாகந்தனை முத்திசாதன மாயறிந்திடுவாய்-அங்ஙன மான்மசுத்திக்கேதுவாகலா னவ்வந்த ரியாகம் ஒருதலையான வேண்டப்படு முத்திசாதனமென்றறிக.

இவையிரண்டுஞ் செய்யுளானு மந்தரியாகஞ் செய்யுமாறும் அதனானதற்கு ஒருதலையான வேண்டப்படுவதென்பதூஉங் கூ றப்பட்டன

